# கம்பக் கதம்பம்



கம்பவாணர்,
புலவர், அ. அருணகிரி



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# பதிப்புரை

'கல்வி சிறந்த தமிழ்நாடு; புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்ற பாரதியின் பாடல் வரிகளுக்கு இந்தக் 'கம்பக் கதம்பம்' ஒரு விளக்கவுரைபோல் அமைந்துள்ளது.

இந்தக் கதம்ப மாலையில் தொடுக்கப்பட்டுள்ள ஒவ்வொரு மலரும் ஒவ்வொரு வகையில் தனித்தனிச் சிறப்புடையவை.

இத்துணைச் சிறப்பான ஓர் அணிகலனைத் தமிழன்னைக்குச் சூட்டி மகிழ இந்நூலாசிரியருக்கு வழிகாட்டியாக அமைந்தவர் கம்பன் அடிப்பொடியார். அந்த வகையில் நூலாசிரியர், கம்பன் அடிப்பொடியார்க்கு அடிப்பொடியார்.

சிலரிடம் செயலிருந்தால் புலமை சிறக்காது; புலமை இருந்தால் செயல் பிறக்காது. ஆனால் இந்நூலை யாத்தவரோ கம்பன் அடிப்பொடியாரைப் போல் சொல்லும் செயலும் ஒருங்கே அமைந்த தொண்டுள்ளம் கொண்டவர்.

கம்பன் கவியுள்ளத்தைக் கண்டும், கம்பன் அடிப்பொடியாரின் உள் மனத்தின் அடித்தளங்களை உணர்ந்தும் எழுதப் பெற்ற இந்த நூலின் மூலம் இவர் தமக்குச் சிறப்புச் சேர்த்ததை விடவும் தமக்குக் 'கம்ப வாணர்' என்னும் பட்டமளித்தவர்களுக்கு மாபெரும் பெருமை சேர்த்திருக்கிறார். அவ்வகையில் இந்நூலாசிரியர் கம்பவாணர், புலவர், அ அருணகிரி அவர்களை இந்தத் தமிழ்கூறு நல்லுலகம் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

காரைக்குடி கம்பன் பொன்விழாத் திருநாளில் அருள்மொழியரசு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் திருக்கரங்களால் இந்நூலை வெளியிடுவதில் வானதி பதிப்பகம் பெருமையடைகிறது.

வாழ்க கம்பன் புகழ்!
வளர்க கன்னித் தமிழ்!

ஏ. திருநாவுக்கரசு
வானதி பதிப்பகம்

# உள்ளுறை

உ

முருகா

அருள் மொழியரசு

## திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள்

அருளிய

## சாற்றுக் கவி

### கலிவெண்பா

வேண்டி விருந்தளிக்கும் வித்தக உத்தமர்வாழ்
பாண்டி நகருறையும் பண்பாளன்;—ஈண்டியசீர்

கம்பன் கவிநயத்தைக் கன்னல்போல் கண்டுவக்க
உம்பர் அமுதாய் உரைசெய்வோன்;—இம்பர்

தமிழ்நலம் கண்ட தனிப்புலவன்; தண்ணார்
அமிழ்தமே யன்னசொல் அன்பன்;—உமைபாலன்

கந்தனடி போற்றுங் கருணையினான்; கற்றாரைச்
சந்ததமும் காக்குந் தவசீலன்;— அந்தண்

அருணகிரி என்னும் அறச்செம்மல்; ஆர்வக்
கருணையினான் கம்பக் கதம்பப் —பெருநூலைத்

தண்டமிழ் நாட்டுக்குத் தந்தனனால் வாழியவே
எண்டிசையும் ஏத்த இனிது.

அன்பன்

**கிருபானந்தவாரி**

20—1—1988

டாக்டர். கி. வேங்கடசுப்ரமணியன்,
எம்.ஏ., பி. எல்., பி.டி., பி எச்.டி.,
துணை வேந்தர்
புதுவைப் பல்கலைக் கழகம், புதுச்சேரி.

# அணிந்துரை

சொன்னயம் மிக்கக் கன்னற்றமிழ்ப் புலவர், அருமை நண்பர், புதுவைக் கம்பவாணர், அருள் பேராளர், அறிஞர், திரு. அருணகிரி அவர்கள் இன்று தொடுத்துள்ளது 'கம்பக் கதம்பம்'.

இக்கதம்பம் வாசமிகு தீந்தமிழ்க் கதம்பம். கம்பரசத்தி லிருந்து தோன்றிய வண்ணக் கதம்பம். சாதாரணக் கதம்பத்திற்கு மணமும் வண்ணமும்தான் உண்டு. ஆனால் கம்பவாணர் தொகுத்த புதுவைக் கதம்பத்துக்கோ ஒளியும் கூட உண்டு. அவ்வொளி அறிவொளி.

'கம்பக் கதம்பத்தில்' தான் எத்துணைச் சிறப்புக்கள்! இயலும், இசையும் இழையோடும் இந்நூலில், நாடகமும் உண்டு; சிறுவர்சிந்தைக்கினிய சிறுகதையுண்டு; பெரியோர் போற்றும் பேரின்பப் பெற்றியுமுண்டு; அறிஞர் ஆழ்ந்து அக மகிழும் ஆராய்ச்சிக் கட்டுரைகளும் உண்டு. இவை தவிரப் பயணக் கட்டுரைத் தேனுமுண்டு.

புலவர் திரு. அருணகிரியார் எதையும் நுண்ணிதின் ஆராயும் பண்பாளர். கம்பச் சுரங்கத்தில் நுழைந்து, ஒளிர் தரும் கவின் மணிகள் திரட்டி, கதம்பமாலையாகக் கோத்து

அளித்துள்ளார். ஒவ்வொரு மணியும், வண்ணத்தாலும், எண்ணத்தாலும் மாறுபட்டு ஒளியுடன் மிளிர்கின்றது. இந் நூலாசிரியரின் பெற்றியை அலசுவோமானால், புதுவைக்கே உரிய புதுமை படைக்கும் ஆர்வம்; கம்பனையும், பாரதியையும் ஒப்பிடும் பாங்கு; கம்பவெள்ளத்தில் மூழ்கி,முக்குளித்து மாந்தி, நீந்திக் களிநடம் புரியும் ஆற்றல்; இவற்றுடன் இவர் தம் நடையும் சேர்ந்து இக்கதம்பத்தை ஓர் ஒப்பிலாக் காவியமாக்குகிறது.

செந்தமிழின் சீரிளமைச் செவ்விபோல், நம் கம்ப வாணர் அருளிய இந்தக் கதம்பம் என்றும் வாடாது நிற்கும் மலர்க்கொத்து. இது பொன்மலர்—நல் நாற்றமுடைய பொன்மலர்; ஒளிசிந்தும் நந்தாவிளக்கு.

இம்மலரை ஆக்கிய புலவர் திருவாளர் அருணகிரியார் நம் பாராட்டுக்கு, சிரக்கம்பத்துக்கு. கரவொலிக்கு, கனகாபிஷேகத்துக்கு ஏற்றவர்.

இடம் : புதுச்சேரி **கி. வே. சு. மணியன்**
நாள் : ஜனவரி 28, 1988.

# ஆய்வுரை

''மங்கலம் மங்கலம் மறமன்னவா! பொன் கொழிக்கும் பாண்டிய நாட்டில், எட்டுத் திக்கும் செங்கோல் செலுத்தி, அவனி ஐம்பத்தாறு தேசத்து அரசரும் 'நான், நீ' என்று தமது காணிக்கையைப் பாதங்களில் சமர்ப்பித்து, தம் மணிமுடி அடிபட வணங்கித் திரும்புவதால், திருநெல்வேலியைத் தலைநகராகக் கொண்டு, கோட்டையைப் பலமாகக் கட்டி, நீதிநெறி வழுவாது ஆண்டுவரும் ராஜாதிராஜ ராஜ குலதிலக சீவக பாண்டியன் விடுத்த தூதுவன் யான்!''

மனோன்மணி என்ற திரைப்படத்தில் பலதேவனாக நடித்தபாலையா பேசிய உரையாடல்இது. இந்தப்படம் வந்த போது புலவர் அருணகிரிக்கு அகவை பதினேழு இருக்கும். உரையாடலைப் பாலையாவைப் போலவே குரலில் உணர்ச்சியைக் கோத்துப் பேசிக் காட்டுவார்; நடித்துக் காட்டுவார். நண்பர்களுக்கு இது நல் விருந்தாய் இருக்கும். இதுபோல் பி. யூ. சின்னப்பா, கே. கே. பெருமாள் போன்ற நடிகர்களின் உரையாடல்களும் சரமாரியாக வரும். அண்ணா, மதியழகன் முதலியோரின் அழகிய அரசியல் பேச்சுகளும் இவரைக் கவர்ந்து மனத்தில் பதிந்துவிடும்.

பாட்டாயிருந்தாலும் உரையாயிருந்தாலும் அழகிய கூற்றுகளில் நெஞ்சைப் பறிகொடுக்கும் இந்த இயல்புதான் பிற்காலத்தில் இவரைக் கம்பனுக்கு மீளா அடிமையாக்கியது.

கம்பனைச் சுவைத்துச்சுவைத்துஇவர்தம் சுவைஉணர்வை மேலும் நுட்பமாக்கிக் கொண்டார். பொன்னை நிறுக்கும் துலாக்கோல் மெல்லிய காற்றுப் பட்டாலும் அசைவது போன்ற மிகவும் மென்மையான உணர்வு நாளடைவில் நன்கு வளர்ந்து அமைந்தது. இவரிடத்தில் ஒரு பாட்டைப் படித்துக்காட்டி அதன் சிறப்பைத் துல்லியமாக எடை போட்டுவிடலாம். பாட்டின் தன்மைக்குத் தக்கபடி இவரது

முகத்தின் தசைகள் சுருங்கும்; விரியும். புருவங்கள் ஏறும்; இறங்கும். கண்கள் இடுங்கும்; அகலும்! எந்த அசைவும் இல்லாமல் இருந்தால் பாட்டு உப்புச்சப்பு இல்லாதது என்பது பொருள். எனவே இந்த வகையில் இவரை ஒரு நிலையறி விளக்கு (Test lamp) எனலாம்! இதனால் இவரைப் பாட்டரங்குகளில் பாவலர்களின் அணுக்கத்தில் அமரச் செய்வது உண்டு.

இறையனார் அகப்பொருள் நூற்பாக்களுக்குச் சங்கப் புலவர்கள் ஒவ்வொருவராக உரை சொல்லிக் கொண்டு வந்தார்களாம். சரியான உரை எது என்று தீர்மானிக்கும் பொறுப்பை ஐந்து அகவைப் பையன் ஆகிய உருத்திர சன்மன் என்பவனிடம் ஒப்படைத்திருந்தார்கள். அவன் ஓர் ஊமைப்பிள்ளை. மற்றவர் உரை சொல்லும் போதெல்லாம் மக்கைப் போல் அமர்ந்திருந்தான். நக்கீரர் உரை சொல்லும் போது அவன் கண்களில் மளமளவென்று கண்ணீர் பெருகியது. மெய்ம் மயிர் சிலிர்த்தது. அது கொண்டு அதுவே சிறந்த உரை என்று அறிந்துகொண்டார் களாம். அந்த உருத்திரசன்மனை நினைவூட்டக்கூடியவர் இந்தக் கம்பவாணர்!

எவ்வளவுதான் சுவையான உணவானாலும் சுவைத்துச் சாப்பிடத் தெரியாது சிலர்க்கு. கிலோ ஐந்நூறு ரூபா விலை உள்ள வாதுமைப் பருப்பை வாங்கிவந்து கற்கண்டு, குங்குமப்பூ, ஏலக்காய், பச்சைக் கருப்பூரம் முதலிய சேர்த்து மணக்க மணக்கச் செய்த சுவை மிக்க இனிப்பைத் தட்டில் கொண்டு வந்து வைத்தால், அதை அப்படியே உருட்டி எடுத்து மருந்து போல் வாயில் போட்டு மடக்கென்று விழுங்கித் தண்ணீர் குடித்து விட்டு மறந்து போகின்றவர்கள் உண்டு!

இலக்கியத்திலும் இப்படித்தான். எவ்வளவு சுவையான பாட்டானாலும், கடகட என்று படித்துக் கொண்டே போவார்கள் சிலர். அதன் சுவையைச் சிறிதும் அறிய மாட்டார்கள். 'அகப்பை சுவை அறியாது' என்னும் பழமொழி இவர்களுக்கே பொருந்தும்.

**அணிகொள் காவியம் ஆயிரம் கற்கினும்**
**ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்கிலார்**

என்று பாரதிபாடியதுஇந்த‘அகப்பை’களைத்தான்போலும்!

**‘பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்’** (குறள்)

என்பது போல், நுட்பமாகச் சுவைத்துப் பாராட்டும் புலவர் அருணகிரி போன்ற சுவைஞர்கள் இருப்பதால்தான் இலக்கியங்கள் அழியாமல் இருக்கின்றன எனலாம்.

பாட்டை மட்டும் அன்று; உரைநடையைக் கூட—உரை நடையில் உள்ள சொற்களை மட்டும் அன்று; அவற்றைச் சொல்லுகின்ற முறையைக் கூடச் சுவைத்துச் சொல்லிச் சொல்லி இன்புறும் இயல்பு இவர்க்கு உண்டு. யாராவது அழகாகச் சொல்லிய ஒன்றினை அதுபோல் சொல்லிக் காட்டி “சொல்லுகின்ற வாட்டத்தைப் பாருங்கள்!” என்று பாராட்டி மகிழ்வதை இவரிடம் உரையாடியவர்கள் உணர்ந் திருக்கக் கூடும்.

நாக்கைச் சப்புக் கொட்டிச் சுவைத்துச் சுவைத்து வக்கணையாகச் சாப்பிடத் தெரிந்த பெண் சுவையாகவே சமைப்பாள் என்பதற்குக் ‘கம்பக் கதம்பம்’ ஓர் எடுத்துக்காட்டு.

இந்நூலில் இருபது கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. பெயருக்கு ஏற்றபடி இதில் பலவகை நிறமும் மணமும் அமைந்த ‘கம்ப மலர்கள்’ காணப்படுகின்றன. அவற்றுள் ஆய்வுக் கட்டுரைகள் சில; பாநலம் பாராட்டுவன சில; குழந்தைக் கதைகள் சில; சிறுவர் நாடகம் ஒன்று.

**நடைநலம்**

எல்லாவற்றிலும் இவரது இனிய உரைநடைத் தமிழ் ‘சவியுறத் தெளிந்து, தண் என்று ஒழுக்கமும் சார்ந்து, சான்றோர் கவி எனக் கிடப்பதைக் கற்பவர் கண்டு கொள்ளலாம்.

சொல்ல விரும்பும் கருத்துகள் அனைத்தையும் சிந்தா மலும், விரிவுக்கு அஞ்சி விட்டுவிடாமலும், சொற்செட்டு ஏதம் இன்றிச் சற்று விரிவாகவே எழுதி வெளிப்படுத்தி விடுவது இவர்தம் இயல்பாக உள்ளது. காட்சிப் பொருளா

னாலும் கருத்துப் பொருளானாலும் அவற்றைச் சிறப்பாக இயன் மொழிவதில் (வருணனை செய்வதில்) இவர் இணை யற்று விளங்குகிறார். ஒரு சிறிய அசைவைக்கூட இவர்தம் உயிருள்ள நடையால் சுவை சொட்டச் சொல்லிவிடுகிறார்.

'முன்னோர் மொழிபொருளே யன்றி அவர்மொழியும்
பொன்னே போல் போற்றுவம்'

என்பதற்கு ஏற்பக் கம்பன் சொற்களை இடையிடையே மிடைந்து உரைநடையை அமைப்பதில் இவர் 'விடுதல் அறியா விருப்பம்' உடையவராகக் காணப்படுகிறார். இதற்குச் சான்றாகக் கும்பகருணனை இவர் அறிமுகப் படுத்தும் பகுதியைக் காட்டலாம்:

'ஊனும் உதிரமும் உண்டு படர்ந்து பருத்த உடல் உடையவன். அவனுடைய தோளோடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின், நாள் பல கழியும். ஆறு நூறு சகடத்து அடிசிலையும்; நூறு நூறு குடங்கள் கள்ளினை யும் நொடிப் பொழுதில் நுங்கி விடுவான். சிங்கத்தின் மாமிசம் கிடைத்துவிட்டால் போதும்; பிணம் போன்று சிரிப்பில்லாத முகத்தில் சிரிப்புச் சிறிதே அரும்பும்!'

(புகழைப் புதுக்கினான்)

**தொடை நலம்**

சான்றோர் கவி எனக் கிடந்த உரைநடை இது என்று குறிப்பிட்டேன் அல்லவா? அதனால் கவிதையில் காணக் கூடிய தொடை நலம் அணி நலம் முதலியவற்றையும் இதில் எடுத்துக்காட்ட வேண்டியது என் கடமையாகிறது.

இனிய ஒலிநயம் சான்ற எதுகை மோனைகள் இயைபான சில இடங்களில் வந்து நம்மை இன்புறுத்துகின்றன. காட்டாகச் சில:

1. 'கனிவோடு பேச வேண்டிய இராமன் முனிவோடு பேசத் தொடங்கிவிட்டான்' (இராமன் சிறையிருந்த சீதையை ஏற்கத் தயங்கியது ஏன்?)
2. நீர் துறந்த நிலம், ஏர் துறந்த வயல், நகை இழந்த முகம், புகை இழந்த மாடம் என்று அணியிழந்த அயோத்தி' (கம்பனது கடவுட் கொள்கை)

**பொருள் நலம்**

இந்நூலில் உள்ள கட்டுரைகளில் என்னை மிகவும் கவர்ந்தது ,நெஞ்சினால் பிழைப்பிலாள் நெடும்பழி பூண்டாள்' என்பதே. இந்த ஆய்வுக் கட்டுரைக்கு வேதம், புராணம், வான்மீகி, வெ. ப. சு. முதலியார், ச. து. சு. யோகியார், புதுமைப்பித்தன், டி. கே. சி. ஆகிய இடங்களி லிருந்து தரவுகள் பலவற்றைத் தொகுத்து வைத்துக் கொண்டு, 'குன்றேறி யானைப் போர் காண்பது' போல் ஆய்வை மேற்கொள்ளுகின்றார்.

பெரிய காப்பியங்களில் கதைப் போக்குக்கு ஒரு போக்கா ஒரு துணைக் கதையை அமைப்பது, சேக்குப்பியர் போன்ற மேனாட்டுப் புலவர்களும் கடைப்பிடிக்கும் அமைப்பு முறையாகும். கம்பராமாயணத்திற்கு அகலிகை யின் கதை எவ்வாறு துணைக் கதையாக அமைந்துள்ளது என்பதை இவர் அழகாக எடுத்துக் காட்டுகின்றார்.

| காப்பியக் கதையில் | துணைக் கதையில் |
| --- | --- |
| சீதை | அகலிகை |
| இராமன் | கௌதமன் |
| இராவணன் | இந்திரன் |
| இராமன் சீதையை ஏற்க மறுத்து இழித்துரைத் தது. | கௌதமன் அகலிகையை ஏற்க மறுத்துச் சாப மிட்டது. |
| தனித்திருந்த சீதையை இராவணன் மாயக் கோலத்தில் கவர்ந்தது. | தனித்திருந்த அகலிகையை இந்திரன் மாயக்கோலத் தில் நுகர்ந்தது. |
| இராமனின் வில்லம்பால் இராவணனின் உடல் முழுதும் துளைக்கப் பட்டது. | கௌதமனின் சொல்லம் பால் இந்திரனின் உடல் முழுதும் ஆயிரம் மாதர்க் குள்ள அறிகுறிகள் உண்டானது. |

இவ்வாறு ஒப்பிட்டுக் காட்டுகின்றார். ஆனால் அகலிகையின் கற்பு, சீதையின் கற்புக்கு நிகரானதா? என்றால்,'ஆம்' என்று அடித்துச் சொல்லுகின்றார் கம்பவாணர். அகலிகைப் படலத்தில்—இராமன், கௌதமன் முதலிய கதை மாந்தர் கூற்று எப்படி இருந்தாலும், அகலிகை பற்றிக் கம்பன் கூற்றாகவரும் இடங்களே அவளுக்கு மாசு கற்பிக்கும் வகையில் அமைந்துள்ளன. அத்தகைய இடங்கள் வருமாறு:

1. அகலிகையின் வரலாற்றைத் தொடங்கும்போதே கம்பன்,

**மனையின் மாட்சியை அழித்து இழி**
**மாதவன் பன்னி**

என்று அகலிகையைக் குறிப்பிடுகின்றான். இதற்குக் கம்பவாணரின் தமிழ் நெஞ்சம், 'மனையின் மாட்சியை இந்திரன் அழிக்க, அதனால் இழிவு எய்திய அகலிகை'என்று பொருள் காண்கிறது.

**வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய**
(தொல்காப்பியம். சொல். எச்ச. 61)

என்ற நூற்பா உரையில், 'யானை ஒடித்து உண்டு எஞ்சிய யாமரம்' என்று சான்று தந்து. 'தன்வினை முதலின் வினையையே கொள்ள வேண்டிய செய்து என்னும் எச்சம். பிறிதின் வினையைக் கொள்ளுதலும் உண்டு' என்று காட்டும் இலக்கணப் புறனடையைப் பயன்படுத்தி இவர் அகலிகையைக் குற்றமற்றவளாக்குவது நம்மை அயர வைத்து விடுகிறது.

2. புக்கவளோடும் என்ற பாடலில்,

**தக்கதன்று என்ன ஓராள்**
**தாழ்ந்தனள் இருப்ப**

என்ற பகுதியில் 'தக்கதன்று' என்பதற்கு 7 பாட வேறுபாடுகளும், 'ஓராள்' என்பதற்கு 8 பாட வேறுபாடுகளும்

உள்ளன. அவற்றில் இவர், **'தக்கதன்று என்ன ஓரா'** என்ற பாடத்தைத் தம் கருத்துக்கு அரணாகப் பயன்படுத்திக் கொள்ளுகின்றார்.

'ஓரா' என்பதை ஓர்ந்து என்று பொருள்படும் செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சமாகக் கொள்ளுகின்றார்.

'தக்கதன்று' என்பதற்கு எதிர்மறைப் பொருள் கொள்ளாமல், தக்கது? அன்று? (தக்கதா? அன்றா?) என்று ஐயப் பொருள் கொண்டு, அகலிகையை அணுவளவும் குறை இல்லாதவளாக்கும் திறமை பாராட்டத்தக்கது. இப்படிக் கொள்வதால்தான், அறிந்தே தவறு செய்ததாக வான்மீகி கூறும்அகலிகையைத் தமிழ்ப்பண்பாட்டுக்கு ஏற்ப, சீதைக்கு நிகரான தெய்வக் கற்பினளாகக் கம்பன் காட்டுகிறான் என்று இவரால் துணிந்து சொல்ல முடிகிறது.

அடுத்த படியாக என்னைக் கவர்ந்தது 'கம்பனை எனக்குக் காட்டியவர்' என்ற கட்டுரை. அகலிகை பற்றிய கட்டுரை அறிவுக்கு விருந்தாய் அமைந்தது. இது உணர்வுக்கு விருந்தாக மட்டும் அன்று; உணர்வையே ஒரு கலக்குக் கலக்கிக் கண்ணீரை வருவித்து விடுகிறது.

கம்பன் அடிப்பொடி அவர்களின் இயல்புகளையும், இயக்கங்களையும், உள்ளப் போராட்டங்களையும் இதை விடச் சிறப்பாக எழுத்தில் கொண்டுவர இயலாது. இது நிகழ்ச்சிகளை அடுக்கிக் கூறும் வறண்ட வரலாற்றுக் கட்டுரை அன்று. நெஞ்சை நெகிழச் செய்யும் உணர்வு ஓட்டங்களின் படப்பிடிப்பு. இக்கட்டுரையின் வடிவத்தை மட்டும் சிறிது மாற்றியமைத்தால் சிறந்ததொரு கவிதையாக அமைந்துவிடும்.

இவருடைய பேச்சை மூன்று மணித் துளி முன்னதாகவே முடித்துவிட்டது, மிதியடியோடு மேடையில் ஏறிவிட்ட

சிறுவனை அடித்துவிட்டது ஆகிய தம் தவறுகளுக்குத் தாமே இரங்கும் பெருந்தகைமையும்,

**'தோல்வி துலையல்லார் கண்ணும் கொளல்'**

(குறள்-986) என்றபடி தம்பியிடம் அண்ணன் மன்னிப்புக் கேட்ட சால்புடைமையும் அடிப்பொடியாரின் பண்பாட்டினை அருமையாக வெளிப்படுத்துகின்றன.

சிறுவனை அடித்த அடிப்பொடியின் செயல், சிவனுக்கு உரிய மலர் மாலை ஒன்றைச் சிதறியதற்காக ஒரு யானையையும் ஐந்து யானைப் பாகர்களையும் வெட்டிக் கொன்று பழிதீர்த்த எறிபத்தரின் செயலை நினைவூட்டுகின்றது. சிவன்பால் எறிபத்தர் வைத்த பற்றுக்குக் கம்பன்பால் அடிப்பொடி வைத்த பற்று எள்ளளவும் இளைத்தன்று என்பதை இது காட்டுகிறது.

கொள்கை வெறி கொண்டவர்கள்; அறம் நிரம்பிய அருளுடை அருந்தவராய் இருந்தாலும் தம்மையறியாமல் தவறு செய்துவிடக் கூடும் என்பதற்குச் சான்றாக விளங்கும் எறிபத்தருடன் கம்பனடிப் பொடியும் சேர்ந்து கொள்ளுகின்றார்.

கம்பனடிப் பொடியார், பார்த்தல் என்ற சொல்லுக்கு 'மனத்தால் பார்த்தல்' எனற நுட்பமான பொருள் இருப்பதைக் கம்பன் கவிதையைக் காட்டியே விளக்கும் பாங்கு வியக்கத்தக்கது. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் உள்ள 'தொடுக்கும் கடவுள்' என்ற பாடலில்,

**...எறிதரங்கம்**
**உடுக்கும் புவனம் கடந்துநின்ற**
**ஒருவன் திருவுள் ளத்தில்அழகு**
**ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்**
**உயிரோவியமே!**

என்று பார்த்தல் என்ற சொல்லை அதே பொருளில் ஆள்வது ஒப்பு நோக்கி உவக்கத் தக்கது.

தொல்காப்பியர் குறித்த 'நோக்கல் நோக்கம்' (தொல் சொல். வேற். மயங். 10) என்பதற்கு 'மனத்தான்

ஒன்றனை நோக்குதல்' என்று பொருள் விரிக்கும் சேனாவரையர்,

வான்நோக்கி வாழும் உயிரெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி (குறள்—542)

என்ற ஆட்சியைச் சான்றாகக் காட்டுவர். வள்ளுவர் காலத்தில் நோக்கல் என்பதற்கு இருந்த இப்பொருள், கம்பர் காலத்தில் 'பார்த்தல்' என்பதற்குப் படர்ந்தது போலும்.

**அணிநலம்**

பொருள்களை விளக்குவதற்கு இவர் பொருத்தமான உவமைகளைப் பெய்து செல்வதை ஆங்காங்கே காணலாம்.

**1. கண்ணாடி கண்ணுக்குக் கருவியாவது போலக் கண் அறிவுக்குக் கருவியாகிறது.**

**(கம்பனது கடவுட் கொள்கை)**

**2. ஒரே பாடலைப் பல இராகங்களில் பாடுவது போல, ஒரே பாடலைப் பல தாளங்களில் பாடுவது போல, வீடணனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்ற ஒரே கருத்தைப் பலவகையாக எல்லோரும் எடுத்துரைத்தார்கள்.**

**(இராமனின் அரசியல் உத்தி)**

3. ஆசிரியர் அடித்து அறிவு தருவது போல் இராமன் அம்பு எய்து அறிவு தந்து அருளினான்.

(அறிவு தந்தருளினான்)

அடிக்கும் போது வெறுப்பும் வெகுளியும் காட்டிய மாணாக்கன், அறிவு வந்த பிறகு, அதற்காக ஆசிரியர் அடித்தது சரிதான் என்று உணர்ந்து நன்றி கூறுவது இவ்விடத்திற்கு மிகமிகப் பொருத்தமான புதிய உவமை, புலவர் அருணகிரியாரின் பட்டறிவும் இதில் உள்ளடங்கி இருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது!

**சுவைநலம்**

கம்பக் கதம்பத்தைப் பயில்வோர், இது

**நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகை**

**(தொல் பொருள். மெய்ப்பாடு-3)**

என்னும் எண் சுவைக்கும் இடனாய் இருப்பதை எளிதில் உணர்வார்கள். நகைச் சுவைக்கு மட்டும் ஒரே ஒரு சான்று:

மலேசியாவில் கம்பவாணர் முதலிய புலவர்களை அழைத்துச் சென்ற மகிழுந்துகளின் மென்மையையும் மேன்மையையும் பற்றி எழுதும் இடத்தில்,

'முரசு கட்டிலில் துயின்ற மோசிகீரனை இந்தக் கார்களில் அமர்த்தினால், எழுப்பினால் கூட எழுந்திருக்க மாட்டான்!'

(மலேசியாவில் கம்பன்)

**பாநலம் பாராட்டல்**

நலம் பாராட்டல் என்பது இவருக்குக் கருவிலேயே வாய்த்த திரு என்பது முன்னரே விளக்கப்பட்டது. பா நலம் பாராட்டும் கட்டுரைகளில் 'அறிவு தந்தருளினான்' சிறப்பிடம் பெறுகிறது. ''முற்றும் நீ; மற்றும் நீ; பகையும் நீ; உறவும் நீ' என்னும் வாலியின் கூற்றுகளுக்கு இவர் தரும் சொற்சாரங்கள் சுவைத்துப் பாரட்டச் செய்கின்றன.

**கம்பப்பித்து**

தில்லியில் வீசிக்கொண்டிருந்த புயலை விளக்கும் போது ஒரு கிறித்துவர் ''செனாசரத்து' புயலைப் போன்று இல்லையா இப்புயல்?'' என்று கேட்டாராம். அதற்கு நேரு, ''கண்ணுக்குத் தெரிகின்ற இந்தப் புயலைக் கண்ணுக்குத் தெரியாத அந்தப் புயலைக் கொண்டு விளக்க முயல்கிறீர்களே இது உங்களுக்கே விந்தையாக இல்லையா?'' என்று எதிர்வினா எழுப்பினாராம்.

'கம்பனது கடவுட் கொள்கை'யில் வரும் சுவையான செய்தி இது. இதைவிடச் சுவையான செய்தி ஒன்று, 'மலேசியாவில் கம்பன்' என்ற கட்டுரையில் காணப்படுகிறது.

மலேசியக் கம்பன் விழாவுக்காகப் பயணம் செய்த வானவூர்தியின் எழிலையும் ஏற்றத்தையும் நமக்கு எடுத்து விளக்கும் போது ஆசிரியர்,

'விமானத்தில் ஏறி உள்ளே சென்றதும், உள்ளிடம் அயோத்திமா நகரத்தின் தசரதன் சபா மண்டபமோ?

இலங்கை மாநகரின் இராவணன் கொலு மண்டபமோ என்று ஐயுறும்படி இருந்தது'

என்று எழுதி வியக்கின்றார். தசரதன் சபா மண்டபத்தையும் இராவணன் கொலு மண்டபத்தையும் நாம் எப்போது பார்த்தோம்? இவர்தான் எப்போது பார்த்திருக்கிறார்?

கண்ணால் காணக் கூடிய ஒரு பொருளைக் கண்ணுக்குத் தெரியாத ஒரு பொருளைக் கொண்டு விளக்க முயல்கின்றீர்களே, கம்பவாணரே, இது உங்களுக்கே விந்தையாக இல்லையா? என்று எதிர்வினா எழுப்பத் தோன்றுகின்றது நமக்கு!

சமயப்பித்துக் காரணமாகக் கிறித்துவர் அவ்வாறு பேசினார் என்று காட்டும் கம்பவாணர், தாமும் அதே முறையில் பேசியதற்குக் கம்பப்பித்துத்தான் காரணமாக இருக்குமோ?

எனினும் இதை நாம் ஒரு குறையாகக் கொள்ள முடியவில்லை. காரணம்,

**பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்**
**பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ?**

என்று சொல்லிக் கம்பனே நம்மைத் தடுத்துவிடுகிறான்!

கம்பனிடத்தில் எத்தனைப் பித்துக் கொண்டிருக்கிறார் இவர் என்பதை இதிலிருந்து அறிந்து கொள்ள வேண்டும்; அவ்வளவுதான்.

கம்பனிடம் வைத்துள்ள கரை கடந்த பற்றிலும், கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்பதிலும் கம்பன் அடிப்பொடியின் கான்முளையாக விளங்குகிறார் கம்பவாணர் என்பதை, அவரை அறிந்த அனைவரும் ஏற்றுக் கொள்வார்கள் என்றே எண்ணுகின்றேன்.

**இரா. திருமுருகன்.**
16-3-88

'ஏழிசைச் சூழல்'
8/35, மறைமலை அடிகள் சாலை
புதுச்சேரி—605001

# முன்னுரை

'கம்பக் கதம்பம்' இது, பல கட்டுரைகளின் தொகுப்பு நூல். இந்நூலிலுள்ள எல்லாக் கட்டுரைகளும் கம்ப ராமாயணக் கட்டுரைகளே. பல நகரங்களில், பல ஆண்டு களில் நிகழ்ந்த கம்பன் விழாக்களில், வெளியிட்ட விழா மலர்களில் வெளிவந்தவை இவை.

கட்டுரைகள் அனைத்தும் கம்பனில் உள்ளவை யென்றாலும், ஒவ்வொரு கட்டுரையும் தனித்தனி நிகழ்ச்சி களைப் பற்றியவை; தனித்தனிப் பாத்திரங்களைப் பற்றியவை; தனித்தனிச் சுவையுடையவை; இலக்கிய மணம் வீசுபவை. பலவேறு வண்ணமலர்களால் தொடுக்கப்பட்ட மாலை 'கதம்பமாலை' என்பதுபோல, இந்நூலுக்குக் 'கதம்பக் கட்டுரைகள்' என்றும் பெயரிடலாம். கட்டுரைகள் அனைத்தும், கம்பன் படைப்பிலிருந்து பறித்த மலர்களால் தொடுத்தவையாதலால் 'கம்பக் கதம்பம்' என்றாயிற்று. சொல்லிச் சுவைப்பதற்கும் சிறப்பாயிற்று.

கம்பக் கதம்பத்தில் இன்னும் பல வண்ணமலர்களைச் சேர்த்துத் தொடுத்திருக்கலாம். மாலை, அளவுக்கு மிகாமலிருக்க அழகூட்டும் சிலவற்றை மட்டும் தொடுத்துக் கம்பன் வாயிலாகக் கன்னித் தமிழன்னைக்குச் சூட்டி வணங்குகிறேன். அடுத்தவேளை வழிபாட்டிற்கு இன்னும் சில வண்ணமலர்களை வைத்துள்ளேன். பின்னர்

அவற்றைத் தொகுத்துச் சூட்டி வணங்குவேன் வழங்குவேன்.

கட்டுரைகளில் பல, சிக்கலான பாடல்களைப் பற்றியவை; நிகழ்ச்சிகளைப் பற்றியவை. அவற்றில் என் சிந்தனைப் பார்வையைச் செலுத்திச் சிறந்ததோர் தீர்வைக் காணமுயன்றேன். கவிச்சக்கரவர்த்தியினுடைய உள்ளத்தின் உண்மை நிலையை ஒருவாறு உணர்ந்து, சிக்கலில்லாமல் செப்பமுறக் கட்டுரை தீட்டினேன். கம்பன் விழா மலர்களில் வெளியான என் கட்டுரைகளைப் படித்துப் பார்த்த பல அன்பர்கள் என்னைப் பாராட்டிக் கடிதம் எழுதினார்கள். அவர்களின் உற்சாகக் கடிதங்களே, கட்டுரைகளைத் தொகுத்து நூல் வடிவாக்கும் துணிவினைத் தந்தன.

இந்நூலில் இடம் பெற்றுள்ள இருபது கட்டுரைகளில், மூன்று, புதுவை வானொலி நிலையச் 'சிறுவர் பூங்கா' நிகழ்ச்சியில் ஒலி பரப்பானவை; இரண்டு, காரைக்குடிக் கம்பன் திருநாள் 'நற்றமிழ் முற்றம்' நிகழ்ச்சிக்குத் தயாரித்தவை; ஒன்று, புதுவை அரசு கல்வித்துறை ஐந்தாம் வகுப்புத் தமிழ்ப் பாடநூலுக்கு எழுதிய நாடகம்; மற்றுமொன்று, எனக்குக் கம்பனைக் காட்டிய கம்பன் அடிப்பொடிக்குச் செலுத்திய இதய காணிக்கை. மற்றைய பதின்மூன்றும், மலர்களுக்கென்று எழுதியவை.

கம்பக் கதம்பத்தில் இடம் பெறும் இக்கட்டுரைகளைத் தங்கள் விழா மலர்களில் மனமுவந்து வெளியிட்டு மணம் பரப்பச் செய்த கம்பன் கழகத்தார்களுக்கும், ஒலி பரப்பிய புதுவை வானொலி நிலையத்தாருக்கும், பாட நூலில் இடம் பெறச் செய்த புதுவை அரசு கல்வித் துறையினருக்கும் நன்றி தெரிவிக்க வேண்டியது என் தலையாய கடமையாகும்.

கட்டுரை மலர்களைத் தொகுத்துக் கதம்ப மாலையாக்கும் விருப்பத்தை அருள்மொழியரசு திருமுருக

கிருபானந்த வாரியார் சுவாமிகளிடம் வெளியிட்டேன். சுவாமிகள், பல கட்டுரைகளின் முக்கிய பகுதிகளைப் படித்துக் காட்டச் செய்து, கேட்டு, மலர்ந்த முகத்தோடு அடியேனுக்குத் திருநீறு சார்த்திச் சாற்றுக் கவியும் தந்தருளினார்கள். நேரிசை வெண்பாவிலேயே சாற்றுக் கவிதரும் பழக்கமுடைய வாரியார் சுவாமிகள், வழக்கத்திற்கு மாறாகக் கலிவெண்பாவில் பன்னிரண்டு அடிகளால் தந்த சாற்றுக்கவி, அவர்களுக்கு என் மீதுள்ள அன்பின் ஆழத்தைக் காட்டுகிறது. அருணகிரியாகிய என்னை, ஆறுமுகப் பெருமானே ஆறிருதடந்தோள்களால் ஆரத் தழுவுவது போன்ற உணர்ச்சியினைப் பெற்றேன். சுவாமி களின் நீண்ட சாற்றுக் கவியைக் கண்ட நானே வியந்து நின்று, 'என்ன சுவாமி! எனக்கா இவ்வளவு பாராட்டும்?' என்று கேட்டேன். 'இது, சொந்த நெசவு; வியாபாரத்திற்கு நெய்ததில்லை; சொந்தத்திற்குப் பொறுப்போடு நெய்தது; அருணகிரியைப் பாராட்டாமல் நான் எதற்கு இருக்கிறேன்?' என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். வாரியார் சுவாமி களின் பாசமும் பரிவும் கலந்த பேச்சைக் கேட்ட நான் ஆனந்தக் கண்ணீர் அரும்பி நின்றேன். அந்த ஆனந்தக் கண்ணீரையே சுவாமிகளின் பாத பூசைக்குரிய தீர்த்தமாக்கு கிறேன்.

பெருந்தகை, டாக்டர், கி. வேங்கடசுப்பிரமணியம் அவர்கள், புதுவைப் பல்கலைக் கழகம் புரிந்த நற்றவத்தால் அதன் முதல் துணைவேந்தராகப் பதவி யேற்றார்கள். அவர்கள் பதவியேற்ற நாள் முதல், என் எளிய தமிழ்ப் பணியை இனங்கண்டு கொண்டு உற்சாகமூட்டி ஓங்கச் செய்து வருகிறார்கள். என்னுடைய முன்னைய நூல்களைப் படித்துச் சுவைத்த அவர்கள், என்னை அழைத்து இதயக் குளிர்ச்சியோடு நாவூறிப் பாராட்டினார்கள். "அரிய கருத்துகளைத் தெளிவாக வெளிப்படுத்தும் உங்கள் எழுத்து நடை என் உள்ளத்தைக் கவர்ந்து விட்டது; உங்கள் எழுதுகோலைச் சோர்வடையச் செய்யாதீர்கள்;

பணி ஓய்வு பெற்ற நீங்கள் சோர்வடையாமல் தொடர்ந்து நல்ல நூல்களை எழுதுங்கள்'' என்று வாழ்த்தினார்கள். துணைவேந்தரின் வாழ்த்தினை மேலும் பெறவிழைந்த நான், மலர்க்கட்டுரைகளையும் கொடுத்து நூலாக்கும் ஆசையையும் வெளியிட்டேன். எத்தனை வேலைகளிருந் தாலும் இரவு இரண்டு மணி வரையில் படிக்கும் பழக்க முடைய அவர்கள், அனைத்துக் கட்டுரைகளையும் ஆழ்ந்து படித்து, நூலினை அலங்கரிக்க அணிந்துரையும் தந்துதவி னார்கள். பயன் கருதாத அவர்களின் பண்பு நலத்தை எண்ணியெண்ணி, ஏத்தியேத்தித் தொழுவதையன்றி வேறு வழியறியேன்; வகையறியேன்.

இலக்கணச் சுடர் — இயலிசைச் செம்மல், இரா. திருமுருகன் அவர்கள் இலக்கணமும் இலக்கியமும் இணைந்து குடிகொண்ட அறிவுத் திருக்கோயில்; என் னுடைய பள்ளித் தோழர்; என்னோடு மூன்று பள்ளிகளில் நான்கு முறை பணியாற்றிய உடனாசிரியர்; என்னையும் புலவனாக்கிய புலமைப் புரவலர்; கம்பனை என் காதுகளின் வழியே புகுத்தி உள்ளத்தில் பதிய வைத்த உத்தமப் பேராசான்; என்றைக்கும் எனக்கு அருள் சுரக்கும் குன்றாத ஞானக்கொழுந்து; என்னைவிட இரண்டரை ஆண்டுகள் வயதில் சிறியவர்; என்னைவிட எத்தனையோ மடங்கு அறிவில் பெரியவர்; இலக்கியத்துறையில் தன்னோடு என்னையும் இன்றுவரை இழுத்துச் செல்லுகின்றவர்; என்னுடைய பேச்சோ, எழுத்தோ இவருடைய செவிகளை யும் சிந்தையையும் தொடாமல் அரங்கேறுவதில்லை. இந்நூலில் வெளிவரும் கட்டுரைகள் அனைத்தும் இவருடைய செவிவழியே புகுந்து சிந்தையில் பதிந்தவைகளே. அவர்கள் இந்நூலுக்கு ஆய்வுரை தந்து, ஆய்வுரைக்கு இலக்கணம் வகுத்தார்கள். திருமுருகன் அவர்களை வாழ்த்தலாமா? அறிவில் பெரியவராயிற்றே! வணங்கலாமா? ஆண்டில் இளையவராயிற்றே! அசைவற்று நிற்கிறேன். இதுவே அவருக்கு நான் செலுத்தும் வாழ்த்தும் வணக்கமும்.

தகுதி வாய்ந்த நூல்களை மிகுதியாக வெளியிடும் வானதி பதிப்பக உரிமையாளர், புத்தக வித்தகர், திருமிகு ஏ. திருநாவுக்கரசு அவர்கள், என்னுடைய முன்னைய மூன்று நூல்களைக் கலையழகோடு பதிப்பித்தவர்கள். அவர்களே இந்தக் 'கம்பக் கதம்பம்' நூலினையும் கலையுணர்வோடும் கடமையுணர்வோடும் பதிப்பித்தார்கள். அவர்களுக்கு எவ்வாறு நன்றி சொல்வதென்றே தெரியாமல் தடுமாறுகிறேன். காரணம், நாங்கள் இருவரும் கம்பனால் கூடிய சகோதரர்கள்.

**'மற்று, இனி உரைப்பது என்னே? வானிடை, மண்ணில், நின்னைச்**
**செற்றவர் என்னைச் செற்றார்; தீயரே எனினும், உன்னோடு**
**உற்றவர் எனக்கும் உற்றார்; உன்கிளை எனது; என்காதல்**
**சுற்றம், உன்சுற்றம்; நீஎன் இன்னுயிர்த் துணைவன்', என்றான்**

என்ற கம்பன் பாடலுக்கு இலக்கணமாக இணைந்து வாழ்பவர்கள். என் இதயத்தில் அவரும், அவர் இதயத்தில் நானும் மாறிப் புகுந்து நிலைத்திருப்பதால், யார் யாருக்கு நன்றி சொல்வதென்றே தோன்றவில்லை.

பதிப்பகத்தார் எவ்வளவுதான் பரிவு காட்டினாலும், நூலுக்குப் பொலிவூட்ட அச்சகத்தார் ஒத்துழைக்க வேண்டுமே. அச்சுக்கலை அழகுற அமைந்தால்தானே நூலினைப் படிப்பவர்கள் மெச்சுவார்கள். படிப்பவர்கள் உச்சிமீது வைத்து மெச்சும்படி அச்சேற்றித் தந்த ஸ்ரீ கோமதி அச்சகத்தாருக்கு நன்றி சொல்லாமல் இருந்தால் அது நன்றி கொன்ற செயலாகும். அப்படியே, படித்திருத்தம் செய்த பொன். மணிமொழி அவர்களுக்கும் நன்றி கூறுவது நயத்தக்க நாகரீகமாகும். நூலுக்கு அட்டைப்படம் வரைந்து கொடுத்த ஓவியர் ஆனந்தன் அவர்களுக்கும் நன்றி.

'கம்பக் கதம்பம்' நூல் உருவானதும், என்னை உருவாக்கி வழிநடத்திய கம்பன் அடிப்பொடி,

சா. கணேசன் அவர்களின் நினைவு என் நெஞ்சில் எழுகிறது. கம்பன் அடிப்பொடியவர்கள்தான் எனக்குக் கம்பனைக் காட்டி அவனுக்கு என்னை ஆளாக்கி விட்டார்கள். கம்பன் பணிக்கு என்னை ஆளாக்கி விட்ட அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்கள் கட்டிக்காத்து வந்த காரைக்குடிக் கம்பன் கழகத்திற்கு இப்போது வயது ஐம்பதாகிறது. காரைக்குடிக் கம்பன் கழகத்தின் பொன் விழாவில் இந்நூல் வெளிவருவது அண்ணனது ஆன்மாவுக்குச் சாந்தி தருவதாகும். பொன்விழாவில் கம்பக் கதம்பம் வெளிவருவது பொன்மலர் மணம் பெற்றதைப் போன்றது. கம்பக் கதம்பம் நூலினைப் பொன் விழாவில் வெளியிட இசைவளித்த காரைக்குடிக் கம்பன் கழகத்தாரின் அடிப்பொடியினைச் சென்னியில் சூடி மகிழ்கிறேன்.

கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்போம்!

இவண்,

**கம்பவாணர்,**

**புலவர். அ. அருணகிரி,**

'அமரகம்'

3. முதல் தெரு—திருமுடிநகர்

புதுச்சேரி-605001.

# கம்பனை எனக்குக் காட்டியவர்

**காரைக்குடி, கம்பன்குடி,**

காரைக்குடி என்றதுமே கம்பன் நினைவுக்கு வருகிறான். கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்த்த பெருமை காரைக்குடிக்கு உண்டு. நாட்டுக்கோட்டை நகரத்தார் வாழும் பகுதியின் நடுநாயகமாய் விளங்கும் காரைக்குடியில்தான் கவிச்சக்கரவர்த்தி கம்பன் அமர நிலையிலேயிருந்து ஆட்சி செய்யத் தொடங்கினான். அவனுடைய ஆட்சிக் காலத்திற்கு இன்று வயது ஐம்பது ஆகிறது.

கவிச்சக்கரவர்த்தியின் ஆட்சியைப் போற்றும் வகையில் இந்தியப் பேரரசு 1966ல் அஞ்சல் தலை வெளியிட்டு அஞ்சலி செய்தது. அண்மையில் காரைக்குடியிலிருந்து தமிழகத்தின் தலைநகருக்கு 'கம்பன் விரைவு ரயில்' விட்டுச் சிறப்பித்தது. இன்று நாம் அவன் பெயரால் அமைந்த கம்பன் மணி மண்டபத்தில் கம்பன் திருநாளைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம்.

**கணேசனும் கம்பனும்**

இந்த 1988ல் கொண்டாடும் கம்பன் திருநாள், காரைக்குடிக் கம்பன் கழகத்தின் பொன்விழாத் திருநாளாகும். இந்தப் பொன்விழா, கம்பன் கழகத்திற்கு மட்டும் உரியதன்று; கம்பன் திருத்தொண்டிலே தன்னைக் கரைத்துக் கொண்ட கம்பன் அடிப்பொடிக்கும் உரியது.

கம்பன் அடிப்பொடியார், கணேசனாராக இருந்து தொடங்கிய கம்பன் திருப்பணிக்கும் இன்று வயது ஐம்பது ஆகிறது.

மகாத்மா காந்தியடிகளின் பிறந்த நாளில், லால்பகதூர் சாஸ்திரியின் பிறந்தநாளும் கலந்திருப்பது போல, கம்பனுக்குக் கொண்டாடுகின்ற பொன்விழாத் திருநாளில், கணேசனாரின் திருத்தொண்டுப் பொன்விழாத் திருநாளும் இரண்டறக் கலந்திருக்கிறது.

**ஆல்போல் தழைத்த கம்பன் கழகம்**

'எந்தை பிரான் கம்பன்' என்று இதயம் மணக்க வாய் மணக்க வாழ்த்தி வணங்கி வழிபட்டுக் 'கம்பன் வாழ்க! கம்பன் புகழ் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க!' என்று கம்பன் அடிப்பொடியவர்கள், அன்று இசையோடு ஓசை நீட்டி வாழ்த்திய வாழ்த்து இன்றும் எட்டுத் திசையிலும் எதிரொலித்துக் கொண்டிருக்கிறது. காரைக்குடியில் கால் கொண்ட கம்பன் கழகம் அடையாற்று ஆல்போல் தழைத்து, அறுகு போல் வேரோடி, தமிழ்கூறும் நல்லுலகத்தில் ஐம்பதுக்கும் மேற்பட்ட கிளைகளைப் பரப்பியிருக்கிறது. கம்பன் கழகங்கள் தமிழகத்தின் பல நகரங்களிலும் பாரதத்தின் பல மாநிலத் தலைநகரங்களிலும், இலங்கை, மலேசியா போன்ற கடல் கடந்த நாடுகளிலும், என்றுமுள தென்தமிழ் இயம்பி இசை கொள்ளுகின்றன.

**கம்பன் திருநாளின் கால்கோள்**

ரசிகமணி. டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் தலைமையில் 1939ல் முதல் கம்பன் திருநாளைக் காரைக்குடியில் திரு. சா. கணேசனார் தொடங்கினார்கள். அப்பொழுது கணேசனாருக்குத் துணையாக ஒரு சிலரே ஒத்துழைத்தார்கள். அவர்களுள் திரு. சொ. முருகப்பா, அரு. சோமசுந்தரம், வி. ஆர். எம். செட்டியார், நீலாவதி—

ராமசுப்பிரமணியம் தம்பதிகள் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

முதல் கம்பன் திருநாளின் நான்கு நாட்களிலும் டி. கே. சி. அவர்களே தலைமை தாங்கினார்கள். நிகழ்ச்சிகளில், சொ. முருகப்பா, அரு. சோமசுந்தரம், வி. ஆர் எம். செட்டியார், நீலாவதி அம்மையார், எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை, பா. இராமசாமி முதலியோருடன் சா கணேசன் அவர்களும் பேசினார்கள். இப்படியாக முதல் ஆண்டுக் கம்பன் திருநாள் 1939ல் நிகழ்ந்தது.

### டி. கே. சி. அவர்களின் தொடர்ந்த தொண்டு

கம்பன் திருநாளின் காரணமாகத் திரு. டி. கே. சி. அவர்களின் தொடர்பு செட்டிமார் நாட்டிற்கு வலுவாக ஏற்பட்டது. ரசிகமணி அவர்கள் காரைக்குடிக்கு அடிக்கடி வரத் தொடங்கினார்கள்; பல சொற்பொழிவுகளை நிகழ்த்தினார்கள்; வகுப்புகளும் நடத்தினார்கள். கம்பன் பித்தும் கவிதை வெறியும் நகரத்தார் பகுதிகளில் பெருகத் தொடங்கின. கம்பனுக்குள்ள பெருமைகளைக் கணேசனாருக்கும், மற்றும் ஏராளமானவர்களுக்கும் அறியச் செய்த தனிப்பெருமை ரசிகமணி, டி. கே. சி. அவர்களுக்கே உரியது.

''காரைக்குடியில் கம்பன் பணி தொடங்கி விட்டது. இனி, அது உலகெங்கும் பரவிவிடும்' என்று மனமாரப் பாராட்டி ரசிகமணியவர்கள் அன்று கூறிய ஆசியும் வாழ்த்துமே, காரைக்குடிக் கம்பன்கழகத்துக்குநீரும் உரமுமாய் அமைந்து வளர்த்து வருகிறது'' என்று கம்பன் அடிப்பொடியவர்கள் கூறக் கேட்டு நான் மகிழ்ந்திருக்கிறேன். சான்றோர் வாக்கு பொய்க்காதன்றோ?

### நான் கண்ட கம்பன் திருநாள்

1939 முதல் காரைக்குடியில் நடைபெற்று வரும் கம்பன் திருநாளை, 1957ல்தான் முதன் முதல் நான் காண

நேர்ந்தது. தேவக்கோட்டை மெ. ராம. அ. இராமநாதன் செட்டியார் வீட்டிற்கு விருந்தினனாகச் சென்ற நான், அவர்களோடு காரைக்குடிக்குச் சென்றேன் 'காரைக்குடிக் கல்லுக்கட்டிக் கடைத் தெருவில் இன்று மாலை வரை எங்களுக்கு வேலையிருக்கிறது; அது வரையில் கம்பன் விழாப் பேச்சுகளைக் கேட்டுக் கொண்டிருங்கள்' என்று கூறி என்னை மீனாட்சி பெண்கள் உயர்நிலைப்பள்ளி வாயிலில் என்னோடு வந்தவர்கள் விட்டுச் சென்றார்கள். அப்போது அப்பள்ளியில் தான் கம்பன் திருநாள் நிகழ்ந்தது.

பள்ளியின் பின்புறத்திடலில் விசாலமான பந்தல். பந்தலின் முகப்பில் திருக்கோயில் கோபுரம் போன்ற அலங்காரம். தமிழ்த்தாய் கொலுவீற்றிருக்கும் விழா மேடை, யானைத் தந்தங்களாலும் கண்கவர் கலைப் பொருள்களாலும் அலங்கரிக்கப் பெற்றிருந்தது. மேடையின் முன் பகுதியின் ஒரு புறத்தில் நின்று பேசுதற்குரிய பேச்சு மேசை; மற்றொரு புறத்தில் அமர்ந்த கோலத்தில் விளங்கும் கம்பன் திரு உருவப்படம். கதம்ப மாலை சூட்டப் பெற்றுப் புலமைப் பொலிவோடு விளங்கும் அந்தப் படத்தைக் கண்டதும் 'இவன்தான் கம்பன்' என்ற உணர்வு என் உள்ளத்தில் எழுந்தது.

'உலகம் யாவையும்' என்று தொடங்கும் இறைவணக்கப் பாடலோடு விழாத் தொடங்கிற்று. அடுத்து, மலர் வணக்கம் 'திருவழுந்தூர் வரு தேவே போற்றி!' என்று இசையோடு தொடங்கிற்று. இரண்டு மாணவிகள் மலரெடுத்து அருச்சித்தனர். தாமரை மலர்த் தட்டுகளைச் சட்டையணியாத கரிய திருமேனிக்காரர் எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர்தான் காரைக்குடிக் கம்பன் கழகச் செயலாளர் திரு சா. கணேசன் என்பதை அவர் வழங்கிய வரவேற்புரையால் தெரிந்து கொண்டேன். அந்தக் கணேசனார் தான் கம்பனை எனக்குக் காட்டியவர்.

**கணேசனாரின் அன்பினைப் பெற்றேன்.**

1957 கம்பன் திருநாளில் அண்ணன் கணேசன் அவர்களை, நான் அறிந்து கொண்டேனேயன்றி, அவர் என்னை அறிந்து கொள்ளும் பேறு எனக்குக் கிட்டவில்லை. அந்தப் பேறு கிடைப்பதற்கிடையில் ஒன்பது ஆண்டுகள் ஓடி விட்டன. 1966ல் புதுவையில் கம்பன் விழாக் கொண்டாடிய போதுதான், அவருடைய அன்பினைப் பெறும் பேறு பெற்றேன். அன்று முதல் நாங்கள் சகோதர பாசத்தோடும் பக்தியோடும் பழகினோம். அவரிடம் உள்ளது பாசம்; என்னிடம் உள்ளது பக்தி.

இராம சகோதரர்கள் எழுவர் என்றால், கணேச சகோதரர்கள் கணக்கில் அடங்கார். கணேசர் குடும்பமே கம்பன் குடும்பமாயிற்று. கம்பன் குடும்பத்தில் தமிழ்க்கடல், ராய. சொ; பன்மொழிப் புலவர், தெ. பொ. மீ; பேராசிரியர், அ. சீ. ரா; வாகீச கலாநிதி, கி. வா. ஜ; சிலம்புச் செல்வர், ம. பொ. சி; பேராசிரியர், அ. ச. ஞா; பேராசிரியர், எஸ். ஆர். கே; கள்ளிப்பட்டி, க. கு. கோ; கவிஞர், எஸ் கே. ஆர்., நீதிபதி, மு. மு. இ; நீதிபதி, எஸ். எம்; தொழிலதிபர், ஜி. கே. எஸ். போன்ற பலரும் அடங்குவர். கணேசனார் காத்து வந்த கம்பன் குடும்பத்தில் அடியேனும் ஒருவனானேன். பல பேரறிஞர்களின் பாசத்தையும் பரிவையும் பெற்ற சிறந்த தம்பியானேன். கணேசனாருக்கு உற்றவர்களெல்லாம் எனக்கும் உற்றவர்களானார்கள். கணேசனாரைக்கொண்டு புதல்வரால் பொலிந்தான் கம்பன்.

**காணும் பொருளிலெலாம் கம்பன்**

கணேசனாருக்கு மணிவிழாக் கொண்டாடப் பெற்றது. அறுபது ஆண்டுகள் கணேசனாக வாழ்ந்த அவர்கள், அறுபத்தொன்றாவது ஆண்டில் கம்பன் அடிப்பொடியாகி அடியெடுத்து வைத்தார்கள். மணிவிழாவின் போதுதான் அவருடைய பெயர் மாற்றம் நிகழ்ந்தது. கம்பன் மீது கொண்ட எல்லையில்லாத ஈடுபாட்டின் காரணமாக

இப்பெயர் மாற்றம் நடந்தது. கணேசன், கம்பன் அடிப் பொடியானார்.

காக்கைச் சிறகினிலும், காட்டு மரங்களிலும், கேட்கும் ஒலிகளிலும் கண்ணனைக் கண்டான் பாரதி. அவனைப் போன்று, காணும் பொருளிலெலாம் கம்பனைக் கண்டவர் கம்பன் அடிப்பொடி. அவரது வீட்டின் முகப்பிலுள்ள மாமரத்தில் பழுத்த பழத்தைக் 'கம்பன் கனி' என்பார்கள் கம்பன் மணி மண்டப வளாகத்தில் விளைந்த பப்பாளிப் பழத்தைக் 'கம்பன் பப்பாளி' என்பார்கள். அவற்றைப் பக்தியோடு பறித்துக் கம்பனுக்குப் படைத்து எல்லோருக்கும் பங்கிட்டுத் தருவார்கள். கம்பன் மணிமண்டபக் கிணற்று நீரைக் கூடக் 'கம்பன் சுவையுடையது' என்பார்கள். பெற்ற பிள்ளைகளுக்கு மூத்த திருநாவுக்கரசு இளைய திருநாவுக் கரசு என்று பெயர் வைத்ததோடு நில்லாது தண்ணீர்ப் பந்தலுக்கும் திருநாவுக்கரசு தண்ணீர்ப் பந்தல் என்று பெயர் வைத்து அப்பரைப் போற்றிய அப்பூதியடிகளாரை நிகர்த்தவர் கம்பன் அடிப்பொடியவர்கள். 'எங்கும் கம்பன், எதிலும் கம்பன்' என்ற கொள்கையுடையவர் கம்பன் அடிப் பொடியவர்கள். அவர்கள், அன்றாடம் காலை வழிபாட்டில், கன்னித்தமிழ்த்தாய் படத்தையும் கவிச்சக்கரவர்த்தி படத்தையும் வைத்து வணங்குவார்கள். கம்பன் அடிப் பொடியின் ஒவ்வொரு அசைவையும் கம்பன் கருணை யென்றே கருதினார்கள்.

கம்பன் அடிப்பொடியவர்கள், கம்பன் திருநாளின் போது மழைபெய்தால் கம்பன் கூட்டத்திற்குத் தடையேற் படுமே என்று கலங்குவார்கள். ஒலிபெருக்கி வேலை செய்ய வில்லையென்றால் கம்பனுக்குக்குறைநேருமே என்று குமுறு வார்கள. மின்சாரத்தடையால் மோட்டர் ஓடவில்லையென் றால் கம்பன் அடியார்கள் குளிப்பதற்கும் குடிப்பதற்கும் தண்ணீர்த் தட்டுப்பாடு ஏற்பட்டுவிடுமே என்று கம்பனை நினைத்துக் கண்ணீர் வடிப்பார்கள். கம்பன் அடிப்பொடிய

வர்கள் விடுகின்ற ஒவ்வொரு மூச்சும் 'கம்பன், கம்பன்' என்றே ஓடிக்கொண்டிருந்தது.

### கம்பன் திருக்கூட்டம்

கம்பன் திருநாளின்போது, வருகின்ற புலவர்களையும் ரசிகர்களையும் வரவேற்பதும், அவரவர்கள் தகுதிக்கேற்ப தங்குமிடம் தருவதும், வகை வகையான-சுவையான உணவு படைத்து உபசரிப்பதும், ஒவ்வொருவரும் ஊருக்குத் திரும்பும்போது அவர்கள் விரும்பியவாறு பயண வசதி செய்து பிரிய மனமின்றி விடைதருவதும், கணேசனாருக்குக் கைவந்த கம்பன் கலையாகவே அமைந்துவிட்டது. கம்பன் கவிச்செல்வத்தைச் செவிச் செல்வமாகப் பெறவருவோர் கூட்டத்தோடு, கம்பன் திருநாளின் கலைச் சிறப்பைச் கண்குளிரக் காணுவதற்கே ஒரு கூட்டம் வருவதுண்டு. கம்பன் அடிப்பொடியவர்கள் எப்படி எப்படியெல்லாமோ முயன்று, காரைக்குடியிலும், கோவை சென்னை, கோபி, நெல்லை, புதுவை, கரூர், திருப்பத்தூர் நாமக்கல் போன்ற பல நகரங்களிலும், கம்பன் திருக்கூட்டத்தையே உருவாக்கி விட்டார்கள். அவருடைய சாதனைக்குப் பொன் விழா இன்று நடைபெறுகிறது.

### கணேசன், கம்பன் அடிமை

'எந்தை பிரான் கம்பன், என்னை எப்படி எப்படியெல்லாமே ஈடுபடுத்தி அவன் பணிக்கு ஆளாக்கிக் கொண்டான். கம்பன் அருள்பெற்ற அறிஞர்களின் கூட்டுறவும், அவன் அடியார்களின் அன்பும், ஏழையேனைக் கம்பன் அடிப்பொடியாக்கின. இன்று, நான், ஒரு கம்பன் அடிமை. அன்று அவர்களிட்ட பிச்சையே இன்று என்னை ஆட்கொள்கிறது' என்று கம்பன் அடிப்பொடியவர்கள் அடக்கத்தோடு கூறியதைக் கேட்டு, உள்ளத்து உணர்ச்சியால் உடல் சிலிர்த்திருக்கிறேன். அதனால் தான், அவர் கையெழுத்திடும்போது,'கம்பன்'என்பதைச் சற்று உயர்த்தி

யும், தொடர்ந்து 'அடிப்பொடி' என்பதைச் சற்றுத் தாழ்த்தியும் கையெழுத்திடுகின்றாரோ என்று கணித்து மிருக்கிறேன்.

### கணேசனுக்குக் கம்பனைக் காட்டியவர்கள்

கம்பனை எனக்குக் காட்டிய கம்பன் அடிப்பொடியவர் களிடம்'உங்களுக்குக் கம்பனைக் காட்டியவர் யார்?' என்று ஒருமுறை கேட்டேன். அவர்கள் சொன்னார்கள் '—

எனக்குக் கம்பனைக் காட்டியவர்கள் என் தந்தையாரும் சிறிய தந்தையாருமாவார்கள் புரட்டாசி மாதம் தோறும் அவர்கள் கம்பராமாயண வசனம் படிக்கும்போது, இடை யிடையே என்னையும் படிக்கச்செய்து உணர்வைத் தூண்டி விட்டார்கள். என் பனிரண்டாம் வயதில் தமிழ்ப் பண்டிதர் சு. சிதம்பரம் ஐயர் அவர்களிடம் படித்தேன். பதினான்கா வது வயதில் என் தந்தையாருடன் பர்மா சென்றேன். அங்கே ரங்கூனில் என் நண்பர்களோடு கூடி நானே தமிழ் நூல்களை வாங்கிப் படித்தேன். மீண்டும் காரைக்குடிக்கு வந்து, 'கம்பநாடர்' என்ற இதழ் நடத்திய மோ. வே. கோவிந்தராஜ ஐயங்காரிடம் பாடம் கேட்டேன். அவர் தான் எனக்குக் கம்பனை இனங் காட்டினார். அடுத்து, வ. வே. சு. ஐயரவர்கள் கம்பன் புகழையெல்லாம் கூறி என்னை ஆட்கொண்டார்கள். தொடர்ந்து, பி. ஸ்ரீ. ஆச்சார்யா அவர்கள் 'குமரன்' பத்திரிகையின் துணையாசிரியராயிருந்தபோது, கம்பனது புலமையின் ஆழத்தை எனக்குக் காட்டினார்கள். இரண்டாவது முறை பர்மா சென்றபோது, ரங்கூனையடுத்த 'தோங்குவா' என்ற ஊரில் தங்கினேன். அங்கே, ஒரு செட்டியார் கடையின் மேலவராக இருந்த சிவகங்கையைச் சேர்ந்த பெரும்புலவர் சேதுப்பிள்ளை என்பவரிடம் சில மாதங்கள் முறைப்படி பாடம் கேட்டேன். அந்தச் சில மாதங்களை என் வாழ்வுக்கு வழிகாட்டி, தொண்டுக்குக் கைகொடுத்த காலம் என்பேன். நான் மீணடும் இந்தியா வந்ததும் அரசியலில் ஈடுபட்டு

விட்டேன். 1938 இறுதியில் தான் ரசிகமணி, டி. கே. சி. அவர்களைச் சந்திக்கும் பேறு பெற்றேன். அவர்களுடைய ஆலோசனையின் பேரில் கம்பன் திருநாளை நடத்த ஏற்பாடுகள் செய்தேன். என்னுடைய கம்பன் பணியின் போது, அடிக்கடி சர்ச்சைகளை எழுப்பி, ச. வையாபுரிப் பிள்ளையவர்கள் என் வளர்ச்சிக்கு வழிகாட்டும் சுடர் விளக்காய் விளங்கினார்கள். அடுத்து, மர்ரே கம்பெனி எஸ் ராஜம் அவர்கள், கம்பராமாயணப் பதிப்புப் பணியில் என்னை ஈடுபடுத்தினார்கள். இவர்கள் எல்லோருமே எனக்குக் கம்பனைக் காட்டியவர்கள் எனலாம்'' என்று நன்றியுணர்வோடு கூறியருளினார்கள்.

**கோவிந்தராஜ ஐயங்காரின் கம்பக் காதல்**

கம்பன் அடிப்பொடியவர்கள், தனக்குக் கம்பனை இனங்காட்டிய கோவிந்தராஜ ஐயங்காரைப்பற்றிக் கூறிய ஒரு சுவையான செய்தி, இன்றும் என் உள்ளத்தில் பசுமையாகவே இருக்கிறது.

''மோ. வே. கோ. அவர்கள் நல்ல தமிழ்ப் புலவர். 'தனவைசிய ஊழியன்' பத்திரிகையிலும், 'கம்பநாடர்' இதழிலும் கட்டுரை எழுதுவார். கம்பனைக் கற்றுத் தோய்ந்து பிரசங்கம் செய்வார், ஒரு பிரசங்கத்தில் ஏதோ ஒரு கட்டத்தில் கம்பனை வான்மீகத்துடன் ஒப்பிட்டுக் கம்பனின்மேன்மையை உயர்த்திப் பாராட்டினார். அப்போது, அச்சபையிலிருந்த வட மொழி வல்ல அந்தணர் ஒருவர் எழுந்து, 'கம்பனை வான்மீகியினும் உயர்ந்தவர் என்று ஒரு பிராமணர் கூறலாமா?' என்று ஒருவகை ஆவேசத்துடன் கேட்டார். அதற்கு, மோ. வே. கோ. அவர்கள், 'கம்பனின் உண்மையான உயர்வைக் கூற என் பிராமணநிலை தடையாக இருப்பின், சுவாமி! என் பூணூலை இப்பொழுதே அறுத்தெறிந்து விடுகிறேன்' என்று சொன்னதாக கம்பன் அடிப்பொடி விவரித்த நிகழ்ச்சியை இன்றும் எண்ணியெண்ணி வியக்கிறேன்.

அணுவினைச் சதகூறிட்டால் 'கோண்'

கம்பன் அடிப்பொடியவர்களுடைய ஆழங்காற்பட்ட அறிவை, மேடைப்பேச்சில் கேட்டுப் பயன் பெறுவதைவிட, உட்கார்ந்து விளையாட்டாக உரையாடிக் கொண்டிருக்கும் போதும் பெரிதும் பெற்றுவிடலாம்.

கம்பராமாயணம் இரணியன் வதைப்படலத்தில் வரும் ஒரு பாடலுக்கு அவர்கள் தந்த விளக்கம் :—

'சாணினும் உளன்; ஓர் தன்மை,
அணுவினைச் சதகூறு இட்ட
கோணினும் உளன்; மாமேருக்
குன்றினும் உளன்; இந்நின்ற
தூணினும் உளன்; நீ சொன்ன
சொல்லினும் உளன்; இத்தன்மை
காணுதி விரைவின்' என்றான்
'நன்று' எனக் கனகன் சொன்னான்!'

இந்தப் பாடலுக்குக் கம்பன் அடிப்பொடியவர்கள் தரும் விளக்கம் அவருடைய கணித நூலறிவைக் காட்டுவதாகும். தமிழ்க் கணித நூலில் முந்திரி, அரைக்காணி. சுாணி என்ற இலக்கங்கள் இருப்பதுபோலக் 'கோண்' என்ற இலக்கமும் உண்டு. அது, அணுவின் நூற்றில் ஒரு பங்காகும். ஓர் அணுவை ஏற்றத்தாழ்வில்லாமல் நூறு பங்காகப் பிரித்தால் கிடைக்கும் மிக நுண்ணிய அளவே 'கோண்' என்றான் தமிழ்க் கணக்கன். கடைத் தெருவில், கத்தரிக்காய்க் கூறு,வெண்டைக்காய்க்கூறு சமமாகக் கட்டி விற்பதுபோல, அணுவினை ஒரே தன்மையாகச் சதகூறிட்டால் 'கோண்' கிடைத்துவிடும் என்பார் கம்பன்அடிப்பொடியவர்கள். 'அணுவினை ஓர் தன்மைச் சதகூறிட்ட கோண்' என்று பொருள் விளக்கம் தருவார்கள்.

'பார்த்தல்' என்ற சொல்லுக்குத் தந்த பொருள்

ஒரு சமயம், கிட்கிந்தா காண்டம்—நட்புக்கோட் படலம் —சுக்கிரீவன் இராமனைக் காணும் பகுதியில் இரண்டு பாடல்களுக்கு விளக்கம் தந்தார்கள். ஒரு பாடல்: 'கண்டனன் என்ப மன்னோ' என்று தொடங்குவது. மற்றொரு பாடல்: 'நோக்கினான் நெடிது நின்றான்' என்று தொடங்குவது. காணுதலுக்கும் நோக்குதலுக்கும் உள்ள பொருள் வேற்றுமையை விளக்கினார்கள். காணுதல் என்பது கண்களின் மேலோட்டமான செயல். நோக்குதல் என்பது கண்களின் கூர்த்த செயல் என்று விளக்கினார்கள். இவ்விளக்கம், பலரும் கூறக்கேட்டதுதான். வியப்பொன்று மில்லை. காணுதலுக்கும் நோக்குதலுக்கும் உள்ள வேற்றுமையை விளக்க வந்தவர், இடையில் 'பார்த்தல்' என்ற சொல்லுக்கு விளக்கம் தந்ததுதான் வியப்பைத் தந்தது.

'பார்வை' என்பது, கண்களால் கண்ட ஒன்றைக் காணாதவிடத்தும் அதன் உருவை உள்ளத்திரையில் வரைந்து கொண்டு, கண்களை மூடிக்கொண்டு உள்நோக்காகக் காணுவதாகும். வெளிநோக்காமல் உள்நோக்குவதே 'பார்த்தல்' என்பதாகும் என்று விளக்கம் தந்தார்கள். இந்தப் பொருளுக்கு ஆதாரமாக, ஆரண்ய காண்டம்— சடாயுகாண் படலத்திலிருந்து ஒரு பாடலை எடுத்துக் காட்டினார்கள்.

"வார்ப்பொறை கொங்கை மருகியை, மக்களை
ஏற்பச் சிந்தனையிட்டு—அவ் அரக்கர்தம்
சீர்ப்பைச் சிக்கறத் தேறினன்—சேக்கையில்
பார்ப்பைப் பார்க்கும் பறவையின் பார்க்கின்றான்."

இந்தப் பாடல்தான் அந்தப்பாடல். சடாயு, சீதையையும் இராமலக்குவரையும் கண்டவிடத்தும் காணாவிடத்தும்

சிந்தையில் நிறுத்திக் காத்து வந்தான். இச் செயலுக்கு உவமை கூறவந்த கம்பன், கூட்டில் தன் குஞ்சுகளைக் காத்து வந்த தாய்ப்பறவை, இரைதேடச் சென்ற பின்னும் கூட்டிலே விட்டுச் சென்ற தன் குஞ்சுகளை நினைந்து நெஞ்சத்திரையில் நிறுத்திப்பார்க்கும் செயலைப்பொருத்திக் காட்டினான். 'பார்த்தல்' என்ற சொல்லுக்கு கம்பனிலேயே ஆதாரம் காட்டிப் பொருள் விளக்கம் செய்த கம்பன் அடிப் பொடியவர்களின் அறிவுத் திறம் கண்டு அதிசயித்துப் போனோம்.

**நாகரீகமாகத் திருத்தம் கூறும் பாங்கு.**

மற்றொரு சமயம், ஆரண்ய காண்டம் - சூர்ப்பணகைப் படலத்தில்

''ஊக்கித் தாக்கிவிண் படர்வென்என்று
உருத்து எழுவாளை
நூக்கி, நொய்தினில், வெய்திழையேல்
என நுவலா
மூக்கும் காதும்வெம் முரண்முலைக்
கண்களும் முறையால்
போக்கிப் போக்கிய சினத்தொடும்
புரிகுழல் விட்டான்.

என்ற பாடலைப் பற்றித் திருப்பத்தூர் கம்பன் விழா மேடையில் பேச வேண்டிய நிலை எனக்கு ஏற்பட்டது. இளைய வீரன் இலக்குவன் சூர்ப்பணகையின் மூக்கையும் காதுகளையும் கொங்கைகளையும் அறுத்து அவமானப் படுத்தினான் என்று பேசினேன்.

பேசி முடித்து மேடையை விட்டு இறங்கிய பின், அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்கள் என்னைத் தனியே அழைத்தார்கள். ''பாட்டுக்கு உன் வாயில் வந்த படி

பொருள் கூறக் கூடாது. அதிலும் நம்மைப் போன்ற கம்பன் அடியார்கள் மேலோட்டமாகவும் திரித்தும் பொருள் கூறுவதால் கம்பனது உள்மனத்தை மக்களுக்குக் காட்டத் தவறியவர்களாவோம்.

இலக்குவன், சூர்ப்பணகையின் தனங்களை அறுத்தான் என்று கூறுவது சரியில்லை;முலைக்கண்களை மட்டும்தான் அறுத்தான். அஃதாவது முலைக்காம்புகளை மட்டுமே அறுத்து அவமானத்திற்கு அடையாளம் காட்டினான் என்று பொருள்கூற வேண்டும்'' என்று கூறித் தவற்றைத் திருத்தினார்கள். அப்போது நான் கம்பன் அடிப்பொடியின் நுணுக்கமான அறிவுத் திறத்தையும், நாகரீகமாக எடுத்துத் திருத்திய பாங்கையும் கண்டு, மெய்ம்மறந்து நின்றேன்.

இப்படியே, எத்தனையோ முறைகளில் அண்ணன் என்னைத் திருத்தி நெறிப்படுத்தியிருக்கிறார்கள். அவற்றை யெல்லாம் விரிக்கிற் பெருகும்.

**இலக்கிய உலகில் என்னைப் போன்றவர்களை வளர்த்து விட்டவர்**

எத்தனையோ பேச்சாளர்களையும் எழுத்தாளர்களை யும் வளர்த்துவிட்ட வரலாறு காரைக்குடிக் கம்பன் கழகத் திற்கு உண்டு. என்னையும் என்னைப் போன்றவர்களையும் இலக்கிய உலகில் வளர்த்து விட்ட பெருமை, கம்பன் அடிப் பொடி அவர்களுக்கு உண்டு. பிறரை வளர்த்து விட்டு, அவர் களின் வளர்ச்சி கண்டு மகிழும் மனப் பக்குவம் கொண் டவர் கம்பன் அடிப்பொடி அவர்கள். புலமைக் காய்ச்சல் என்பது புல்நுனியளவு கூட அவரிடம் இல்லை. பிறருடைய வளர்ச்சி கண்டு, கண்ணெரிச்சல் கொண்டு, அவர்களுடைய காலை வாரும் கயமைக் குணமும், அவர்களுக்குக் குழி பறிக்கும் குறுக்குப் புத்தியும் கம்பன் அடிப்பொடிப் பக்கம் தலை நீட்டியது கிடையாது. பிறருடைய வளர்ச்சி கண்டு, அவர்களை வாழ்த்தி, மேலும் வளர்த்து விடுவதே கம்பன் அடிப்பொடியவர்களின் வேலை.

1966ல் புதுவையில் கம்பன் விழாத் தொடங்கிய போது, என்னுடைய இலக்கிய ஆர்வத்தையும், எளிய சேவையையும் கண்ட கணேசன் அவர்கள், அடுத்த 1967ல் காரைக் குடிக் கம்பன் திருநாளின் நான்காவது நாள் நாட்டரசன் கோட்டை நிகழ்ச்சியில் பேசும் வாய்ப்பை எனக்கு வழங் கினார்கள். அன்று குகனைப் பற்றிப் பேசினேன். குகனுக்கு நான் கொடுத்த பாதாதிகேச வர்ணனையே அனைவரையும் கவர்ந்து விட்டது. பாராட்ட மனமில்லாதவர்களும், பாராட்டிப் பழக்கமில்லாதவர்களும் கூட என்னைப் பாராட்டினார்கள்.

விழா முடிந்தபின் பந்தலின்கீழ் பிரப்பம் பாயில் ஓய்ந்த நிலையில் கம்பன் அடிப்பொடியவர்கள் படுத்திருந்தார்கள். நான் அவரிடம் சென்று ஊருக்குச் செல்ல உத்தரவு வேண்டினேன். படுத்துக்கிடந்தவர் உடனே எழுந்து என் இரண்டு தோள்களையும் பற்றிக் கொண்டு, "இன்று குகனைப்பற்றிக் கொளுத்தி விட்டீர்கள். இந்த ஆண்டு விழாவில் உங்களுடைய பேச்சு மகோன்னதமாக அமைந்துவிட்டது. குகன் கொடி கட்டி விட்டான். எந்த ஆண்டும் நீங்கள் வரவேண்டும். மங்கலமாகச் சென்று வாருங்கள்" என்று வாழ்த்தி வழியனுப்பினார்கள். அன்று அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்கள் வாழ்த்திய வாழ்த்து இன்றுவரை என்னை வாழ வைத்துக் கொண்டிருக்கிறது. அன்று முதல் இன்று வரை காரைக்குடிக் கம்பன் திருநாளின் பேச்சாளன் நான். அடியேன் வாழும் காலமெல்லாம் அண்ணனும் வாழவில்லையே என்ற ஏக்கம் பிறக்கிறது.

குடும்பப் பாசத்தோடு கூடிய குணக்குன்று.

அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்கள், கம்பன் குடும்பத்தார் அனைவர் மீதும் ஒரே தன்மையான பாசம் செலுத்துகின்றவர்கள். அப்படியேதான் எங்கள் குடும்பத் தினர் மீதும். எங்கள் குடும்பத்தில் மூத்தவனாகப் பிறந்த

எனக்கு அண்ணன் இல்லாத குறையை அவர்கள்தான் முதன் முதல் நீக்கினார்கள்.

ஒருமுறை, செட்டிநாட்டுச் சிங்கம், சி. வி. சிடி. வி. வெங்கடாசலம் செட்டியார் அவர்களோடு புதுவையிலுள்ள எங்கள் வீட்டுக்கு அண்ணன் வந்தார்கள். என் மக்கள் அனைவரையும் அழைத்துக் கல்வி நலன் விசாரித்தார்கள். அப்போது என் மூத்தமகள் அழகரசி, பி. எஸ்ஸி. தேர்வு பெற்ற நேரம். அடுத்து அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் சேர்ப்பதற்கு அன்றைக்கே அவர்களோடு அழைத்துச் சென்று, படிப்பு முடியும்வரை அவர்கள் பாதுகாப்பிலேயே படிக்க வைத்துப் பட்டம் பெற்றபின் அனுப்பி வைத்தார்கள்.

என் மகளைத் தன் மகளாகப் படிக்க வைத்ததோடு நிற்கவில்லை. திருமணத்திற்கு மாப்பிள்ளை தேடும் பணியிலும் நீதிபதி மகராஜன் அவர்களோடு ஈடுபட்டார்கள். ஆனால், தவிர்க்க முடியாத காரணத்தால் அழகரசியின் திருமணத்திற்கு அண்ணனால் வரமுடியவில்லை. அடுத்து, அண்ணன், அ. ச. ஞா. வீட்டுத் திருமணத்தைத் தலைமை தாங்கித் திருநீர்மலையில் நடத்தினார்கள். அந்தத் திருமணத்திற்கு எங்கள் மாநில முதல்வர், எம். ஓ. எச். பாரூக் அவர்களும் நானும் சென்றிருந்தோம். எங்களைக் கண்டதும் கம்பன் அடிப்பொடியவர்கள் எழுந்தோடி வந்து என் இரு கரங்களையும் பற்றிக்கொண்டு, மகள் திருமணத்திற்கு வர இயலாமைக்கு வருத்தம் தெரிவித்த பரிவினை நினைத்தால் இன்றும் என் கண்கள் குளமாகின்றன.

என் முதல் மகள் திருமணத்திற்கு வர இயலாத குறையை, என் இரண்டாவது மகள் அல்லியின் திருமணத்திற்கு ஆச்சியோடு வந்திருந்து முன்னிருந்து நடத்திச் சிறப்பித்து நிறைவு செய்தார்கள். இந்நிகழ்ச்சி, கம்பன் குடும்பத்தாருக்கு எந்தக் குறையும் நேரக்கூடாது என்ற குறிக்கோளுடையவர் கம்பன் அடிப்பொடியவர்கள் என்பதைக் காட்டுகிறது.

**காலத்தைப் போற்றும் கம்பன் அடிப்பொடி**

கம்பன் அடிப்பொடியவர்கள் காலத்தைப் பொன்னே போற்றும் கொள்கையுடையவர். கம்பன் திருநாள் நிகழ்ச்சி களைக் குறித்த நேரத்தில் தொடங்குவதும் முடிப்பதும் அவருக்குள்ள தனிச் சிறப்பு. கலைஞர் மு. கருணாநிதியவர் கள் தமிழகத்தின் முதலமைச்சராக இருந்தபோது, தலைமை யேற்க ஆறு நிமிடங்கள் தாமதமாக வந்ததற்கு விதிவிலக் களிக்காமல் குறித்த நேரத்தில் விழாவைத் தொடங்கி விட்டவர் கம்பன் அடிப்பொடியவர்கள். இவருடைய காலக் கண்டிப்பைப் பற்றிக் கலைஞர் அவர்களே போற்றிப் புகழ்ந் தார்கள்.

காரைக்குடி கம்பன் திருநாளில் கலந்து கொள்ளும் புலவர்கள் காலத்தில் கவனம் செலுத்திக் குறித்த நேரத்தில் மேடைக்கு வருவதிலும், குறித்த நேரத்தில் பேச்சை முடிப்பதிலும் மிகவும் எச்சரிக்கையாக இருப்பார்கள். ஏன்! வானொலி நிலைய நிகழ்ச்சிப் பதிவாளர்களே கூட, கம்பன் அடிப்பொடியின் கைக்கடிகார மணியைப் பார்த்துத் தங்கள் கைக்கடிகார மணியைத் திருத்திக் கொள்வார்கள். பேச்சாளர்களோ, பேச்சுமேசையில் பொருத்தப் பெற்றிருக் கும் சிவப்பு விளக்கிலே கண்ணும் கருத்துமாய் இருப்பார் கள். சிவப்பு விளக்கு பேச்சு முடிப்பதற்கு ஐந்து நிமிடத் திற்கு முன் எச்சரிக்கைசெய்து எரியும். மீண்டும் எரிந்தால் பேச்சு நேரம் முடிந்து விட்டதென்று பொருள். சிவப்பு விளக்கின் கண்டிப்புக்கு விதிவிலக்கே கிடையாது.

**விளக்கின் ஆட்சியால் விளைந்த விபரீதம்:**

சிவப்பு விளக்கின் சர்வாதிகார ஆட்சியால் அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்களுக்கும் எனக்கும் ஒரு சமயம் மனவருத்தம் ஏற்பட்டுவிட்டது. கம்பன்திருநாள் உரை மன்றத்தில் ஒருநாள் பேசிக்கொண்டிருந்தேன். பேச்சுக் குரிய நேரம் முப்பது நிமிடங்கள். முப்பது நிமிடப்பேச்சை யும் புதுவையிலேயே திட்டமிட்டுத் தயாரித்துக் கொண்டு

வந்திருந்தேன். சிவப்புவிளக்கு எரிந்தால் என்பேச்சு முடிய வேண்டும் என்றில்லாமல், என் பேச்சு முடிந்தால் சிவப்பு விளக்கு எரியவேண்டும் என்ற நிலையில் காலக் கட்டுப் பாட்டோடு தயாரிக்கப்பட்ட பேச்சு அது.

என்பேச்சை முத்தாய்ப்பாக முடிப்பதற்கென்று ஒரு பாடலையும் தேர்ந்து வைத்திருந்தேன். அப்பாடல், கம்பராமாயணம், வேல்ஏற்ற படலத்தில் உள்ளது.

"தோற்பன் என்னினும், புகழ்நிற்கும்
 தருமமும் தொடரும்,
ஆர்ப்பர் நல்லவர்; அடைக்கலம்
 புகுந்தவன் அழியப்
பார்ப்பது என்? நெடும் பழிவந்து
 தொடர்வதன் முன்னம்,
ஏற்பென், என் தனிமார்பின்' என்று
 இலக்குவன் எதிர்ந்தான்."

என்ற பாடல் என்பேச்சின் நிறைவுக்குரிய அடையாளம்.

நான் உணர்ச்சியோடு பேசிக்கொண்டிருக்கும் போது, என் மேல் துண்டால் முகத்தைத் துடைத்துக்கொண்டு, அத்துண்டை பேச்சுமேசையின் மீது வைத்துவிட்டேன். அத்துண்டு சிவப்பு விளக்கை மறைத்துவிட்டதை நான் உணரவில்லை. ஐந்து நிமிடத்திற்கு முன் எச்சரிக்கை விளக்கு எரிந்ததும் எனக்குத் தெரியவில்லை. எனக்கு ஏன் கவலை? என் பேச்சுமுடிகின்ற நேரம் தான் முப்பது நிமிடமாயிற்றே!

மேல்துண்டு விளக்கை மறைப்பது பற்றிக் காலக் கணிப் பாளராகப் பணியாற்றிய கணேசன் என்பவர் கம்பன் அடிப்பொடியிடம் காட்டினார். கம்பன் அடிப்பொடியவர் களோ, நான் காலங்கடந்தும் பேசுவதாகத் தவறாகப் புரிந்து கொண்டு மற்றவர்களுக்குத் தெரியாமல், மறைவாக எனக்குமட்டும் தெரியும்படி எதிரே வந்து நின்று, தன்

கைக்கடிகாரத்தைக் காட்டிச், சிவப்பு விளக்கையும் காட்டிக் கையமர்த்தி நிறுத்தும்படி கட்டளையிட்டார்கள். உடனே நான் 'முப்பது நிமிடங்கள் முடிந்திருக்காதே' என்ற பாவனையில் காலக்கணிப்பாளரைப் பார்த்தேன். அவரோ, மூன்று நிமிடங்கள் இருப்பதாக மூன்று விரல்களைக் காட்டினார். எனக்குக் கோபம் வந்து விட்டது. நான் ரசிகப் பெருமக்களைப் பார்த்து, ''சிவப்புவிளக்கின் சர்வாதிகாரம், முத்தாய்ப்பான மூன்று நிமிடப் பேச்சை உங்களுக்குக் கிடைக்காமல் முறித்துவிட்டது. தடங்கலுக்கு வருந்துகிறேன்'' என்று கூறிவிட்டு அப்பால் வந்து அமர்ந்து விட்டேன்.

நிகழ்ந்த உண்மையை உணர்ந்த கம்பன் அடிப்பொடியவர்கள், என் சிந்தையில் ஏறிய சினத்தைத் தணிக்க வேண்டி, அடிப்பது போன்ற பாவனையில் கையைச் செல்லமாக ஓங்கிக் கொண்டுவந்து எனக்குக் கிளுகிளுப்புக் காட்டினார்கள். நானோ, 'என் கழுத்தை அறுத்து விட்டீர்கள்' என்று அழுத்தமாகச் சொல்லிவிட்டு வெளியே சென்று விட்டேன். அன்றிரவு முழுதும் கம்பன் அடிப்பொடி அவர்களின் கண்களில்படாமல் மறைந்தே இருந்து விட்டேன். என்வருத்தம் அண்ணன் உள்ளத்தைப் பெரிதும் உருத்தியிருக்கிறது என்பதை மறுநாள் காலை நிகழ்ச்சியொன்று காட்டிற்று.

### அண்ணனா பிழை செய்வார்?

கம்பன் திருநாள் உணவுக்கூடத்தில் காலை சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். என்னோடு புதுவை வெங்கட சுப்பாரெட்டியாரும் கோவிந்தசாமி முதலியாரும் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்கள் நேரே வந்து, என் எதிரில் நின்று, ரெட்டியாரையும் முதலியாரையும் உபசரிக்க மறந்து, ''அப்பம் வேண்டுமா? கும்மாயம் வேண்டுமா? அல்லது, உனக்கு மிகப்பிடித்த சூடான இட்டிலியும் சுவை

யான மண்டியும் வேண்டுமா?'' என்று கேட்டு என் ஒருவனையே உபசரிக்கலானார்கள். நான் ஏதும் பேசாமல் ஏக்கத்தோடு அவர் முகத்தையே கூர்ந்து பார்த்தேன். என் சினம் இன்னும் தணியவில்லையென்பதை அண்ணன் புரிந்து கொண்டார்கள்.

''டேய்தம்பி! என்னை மன்னித்துவிடடா! நேற்றைய நிகழ்ச்சியில் நான் அவசரப்பட்டு செய்த தவற்றுக்காக இரவெல்லாம் தூங்காமலிருந்து, இன்று காலை வழிபாட்டில் கம்பனிடம் மன்னிப்பு வேண்டிக் கொண்டேனடா!'' என்று கரகரத்த குரலில் கூறினார்கள்.

தாங்கள் மனமறிந்து செய்த தவற்றை உணர்ந்தும் உணராதவர்கள் போல, நியாயப்படுத்த முயலும் மனிதர் கள் உலவும் இன்றைய உலகில், அண்ணன் கம்பன் அடிப் பொடியவர்கள், தவற்றைத் தவறென்று ஏற்கத் தயங்காத தனிமனிதர் என்று உணர்ந்த நான், உணர்ச்சி வசப்பட்டு அழுதேவிட்டேன். என் கண்ணீரில் அண்ணன் உள்ளம் கரைந்து விட்டது. இரவு பிரிந்த எங்கள் இதயங்கள், காலையில் இறுகப் பிணைந்துவிட்டன. அண்ணனா பிழை செய்தார்? இல்லை! இல்லை! கம்பன் மீதுள்ள கரைகாணாக் காதற்கடமையன்றோ பிழை செய்தது!

**கம்பன் மேடை, புனித மேடை :**

கம்பனுக்கு எவராவது களங்கம் ஏற்படுத்தினால், கம்பன் அடிப்பொடிக்கு கண்ணில் முள்பட்டது போன் றிருக்கும். கம்பன் திருநாளைத் தெய்வத் திருநாளாகக் கொண்டாடுவார்கள். கம்பன் விழா மேடையைப் புனித மேடையாகப் போற்றுவார்கள். மேடையில் யாரையும் பாத ரட்சையோடு நடக்க அனுமதிக்க மாட்டார்கள். 'அருள் கூர்ந்து காலணிகளை இங்கே கிடத்தவும்' என்று அட்டை யில் கொட்டை எழுத்துகளில் எழுதி மேடைப் படியிலேயே வைத்திருப்பார்கள். விழாவில் பங்கு பெறும் மேல் நாட்டார்கள்கூட, தங்கள் காலில் அணிந்துள்ள புதையரண்

களைப் படியிலேயே கழட்டி விட்டுவிட்டு, மேல் சோட்டோடு தான் மேடையேறுவார்கள். விழா மேடையைத் தெய்வீக மேடையாகப் போற்றுவதில் கண்ணும் கருத்துமாக இருப் பார்கள் கம்பன் அடிப்பொடியவர்கள். இதற்கும் ஒரு சோதனை நிகழ்ந்துவிட்டது.

**வேதனை தந்த சோதனை :**

விழாவின் ஒருநாள் இரவு, அருள்மொழியரசு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளின் 'இசையுரை' நிகழ்ச்சி நடந்தது. இசையுரை முடிந்ததும் வழக்கம்போல் சுவாமி களிடம் விபூதி வாங்கும் கூட்டத்தினர் மேடையேறி விட்டனர். கமபன் அடிப்பொடியவர்கள் வாரியார் சுவாமி களுக்கு மெய்க்காப்பாளராக நின்று நெருக்கடியைச் சமாளித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது, பத்துப் பனிரண்டு வயதுடைய சிறுவன் ஒருவன் பாதரட்சையோடு சுவாமிகளிடம் விபூதி வாங்க வந்தான். அவனைக் கண்டதும் கம்பன் அடிப்பொடிக்கு வந்துவிட்டது கோபம். மேடையின் புனிதம் பறிபோய் விட்டதாகக் கருதி, "ஏனடா செருப்போடு மேடையின் மீது வந்தாய்?" என்று சீற்றத் தோடு கேட்டுச் சிறுவன் தலையிலே ஒரு தட்டும் தட்டி விட்டார். பையன் பயந்து போய் "அப்பாதான் அழைத்து வந்தார்" என்று அழுது கொண்டே சொன்னான். "உன் அப்பன் என்ன கொம்பனோ?" என்று வெடிப்புறக் கேட்டார் கம்பன் அடிப்பொடி

பட்டாளத்துச் சிப்பாய் போன்று வாட்ட சாட்டமான தோற்றத்துடன் பக்கத்தில் நின்று கொண்டிருந்த சிறுவனின் தந்தை, என்ன செய்வதென்று தெரியாமல் திக்குமுக்காடினார். கம்பன் அடிப்பொடி மீது கொண்ட பக்தியும், பெற்ற மகன் மீது கொண்ட பாசமும் ஒன்றோ டொன்று மோதுவதால், செய்வதறியாது நெட்டை மரம் போன்று நின்றுவிட்டார். ஒரு நொடிப்பொழுது நின்றவர், மறுநொடியில் பணிவோடும் துணிவோடும் கம்பன் அடிப்

பொடியவர்களை நோக்கிக் கைகுவித்த வண்ணம், ''ஐயா! கம்பன் அடிப்பொடியாரா இப்படிச் சீறுவது? சிறுவன் தான் அறியாமல் பிழை செய்துவிட்டான்; பெரியவராகிய தாங்கள் பொறுத்துக் கொள்ளக் கூடாதா? அவனுக்கும் உங்களுக்கும் என்ன வித்தியாசம்? இந்தச் சின்னஞ்சிறுவனை அடிப்பதற்கு இத்தனை பெரிய மனிதரா தேவை?'' என்று கேட்டுவிட்டார். கம்பன் அடிப்பொடியோ, ஏதும் பேசாமல், வாரியார் சுவாமிகளைப் பாதுகாப்பாக அழைத்துச் செல்வதில் கவனம் செலுத்திவிட்டார்.

திருத்தொண்டர் புராணத்தில், சிவ பூசைக்குரிய குடங்களைக் காலால் உதைத்துருட்டிய தந்தையின் காலை வெட்டினார் சண்டீச நாயனார். சிவனடியாரின் திருப்பாதங்களில் நீர்வார்க்கத் தயங்கிய மனைவியின் கைகளைத் துண்டித்தார் கலிக்காமநாயனார். கம்பன் அடிப்பொடியவர்களைச் சண்டீசருக்கு ஒப்பிடுவதா? கலிக்காமருக்கு ஒப்பிடுவதா? என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன். பக்கத்திலிருந்தவர்களெல்லாம் சிறுவனின் தந்தைக்குச் சமாதானம் கூறி அனுப்பி வைத்தார்கள்.

அன்றிரவு கம்பன் மணிமண்டப அலுவலகத்திலுள்ள கட்டிலில் அண்ணன் படுத்துக் கொண்டார்கள். அண்ணன் உள்ளம் புண்பட்டிருப்பதைப் புரிந்துகொண்ட நான், அவருடைய கட்டிலுக்குப் பக்கத்திலேயே படுத்துக்கொண்டேன். எனக்குத் தூக்கமே வரவில்லை. அண்ணனுக்கும் அப்படியே. இரவு நடுநேரத்தில் கண் திறந்து பார்த்தேன். அண்ணன், யோக நிலையில் ஆழ்ந்திருப்பவர்போலக் கட்டிலில் உட்கார்ந்திருந்தார். 'என்ன அண்ணா! தூங்கவில்லையா?' என்றேன்.

''தூக்கம் எப்படி வரும்? கம்பன் எப்படி எப்படியெல்லாமோ என்னை ஆட்டிவைக்கிறானே. அவனுக்குத் தூய தொண்டு செய்வதால் பல தொல்லைகளைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. மேடையைப் புனிதமாகப் போற்று

கிறோம் நாம். சிறுவனைக் காலணியைக் கழட்டி விடச் செய்து அவன் தந்தை மேடை மீது அழைத்து வந்திருக்கலாம். விபூதி வாங்கும் ஆர்வத்தில் அப்பனும் கவனிக்கவில்லை; சிறுவனும் செய்யவில்லை. கம்பன் மீது உள்ள பக்தி, அந்தச் செயலைப் பொறுத்துக் கொள்ளும் சக்தியை எனக்குக் கொடுக்கவில்லை. கம்பன் மீதுள்ள தணியாத பக்தியின் காரணமாகச் சிறுவன் தலையிலே தட்டி விட்டேன். சிறுவனின் தந்தை சண்டைக்கு வந்தாலும் தாங்கிக் கொண்டிருப்பேன்; மனம் ஆறிப்போயிருக்கும். சான்றான்மையோடு பேசி என் நாவை அடக்கிவிட்டானே. அந்த நிகழ்ச்சியை நினைந்து நினைந்து சாம்புகின்றேன்'' என்று தாழ்ந்த குரலில் நிதானத்தோடு சொல்லி வேதனைப் பட்டார் கம்பன் அடிப்பொடியவர்கள். அன்று இரவு முழுதும் எங்களுக்குச் சிவராத்திரிதான். பொழுது முடிந்து பூசைமுடித்த பிறகுதான் அண்ணன் ஆறுதலடைந்தார்கள். இந்நிகழ்ச்சி, கம்பனுக்குக் களங்கம் விளைத்தால் சகித்துக் கொள்ளாத இதயம் படைத்தவர் கம்பன் அடிப்பொடி என்பதை உணரலாம்.

**கம்பனுக்குப் பெருமையென்றால்,**
**தன் தகுதியையும் விட்டுக் கொடுப்பார் :**

கம்பனுக்குப் பெருமை கூடுகிறதென்றால், தன்னுடைய தகுதியையும் விட்டுக் கொடுக்கத் தயங்காதவர் கம்பன் அடிப்பொடியவர்கள். இதற்கு ஒரு சான்று :—

காரைக்குடிக் கம்பன் திருநாளில் 'இவர்கள் சந்திப்பு' என்ற நிகழ்ச்சி அமைக்கப் பெற்றது. 'இவர்கள் சந்திப்பு' என்பது, கம்பனது கதாபாத்திரங்கள் இரண்டினைச் சந்திக்கச் செய்து உரையாட வைப்பது. இரண்டு புலவர்கள் இரண்டு பாத்திரங்களாகப் பாவித்துக் கொண்டு கதைப் போக்கின்படி உரையாட வேண்டும். உரை மன்றத்தாலும், பட்டி மண்டபத்தாலும், கவியரங்கத்தாலும் கிடைக்கும் பயன் 'இவர்கள் சந்திப்பு' நிகழ்ச்சியாலும் மக்களுக்குக்

கிடைக்கும். கம்பன் கழகங்கள் இந்த உத்தியைக் கையாண்டு 'இவர்கள் சந்திப்பு' நிகழ்ச்சியை ஏற்பாடு செய்கின்றன.

காரைக்குடிக் கம்பன் கழகமும் ஒரு திருநாளில், என்னை இராவணனாகவும். தாம்பரம் கிறித்தவக் கல்லூரிப் பேராசிரியர், திரு. தி. இராசகோபாலன் அவர்களை வீடணனாகவும் மனோ வேடம் பூண்டு சந்திக்கச் செய்தது. நானும் இராசகோபாலனும், இந்நிகழ்ச்சிக்கு ஒரு வாரத்திற்கு முன்பாகவே புதுவையில் சந்தித்து, இராவணன்—வீடணன் உரையாடலுக்குரிய முறையை நெறிப்படுத்தி உணர்வோடு பேசிப் பயிற்சியெடுத்துக் கொண்டோம்.

நாங்கள் பயிற்சியெடுத்துக் கொண்ட செய்தி, எப்படியோ கம்பன் அடிப்பொடியின் காதுக்கு எட்டிவிட்டது. நான் காரைக்குடி விழாவுக்குச் சென்று சேர்ந்ததும் "இராவணன்—வீடணன் சந்திப்பு ஒத்திகை புதுவையில் நிகழ்ந்ததோ?" என்று அண்ணன் கேட்டார்கள்.

"ஆம் அண்ணா! கம்பனுக்கு வெற்றி கூட்டவே பயிற்சி எடுத்துக் கொண்டோம். கம்பனை இலக்கிய இமயத்தின் உச்சியில் ஏற்றுவதற்கு எங்களோடு தாங்களும் தங்கள் கௌரவத்தை விட்டுக் கொடுத்து ஒத்துழைக்க வேண்டும்" என்றேன்.

"கம்பனுடைய பெருமைக்கு முன்னே என்னுடைய பெருமை பெரிதல்ல; கம்பனுக்குச் சிறப்பென்றால் என் தகுதியை விட்டுக் கொடுக்கத் தயார். என்ன செய்ய வேண்டும்?" என்றார்கள்.

"ஒன்றுமில்லை அண்ணா! நாங்கள் மேடை ஏறி உரையாடிக் கொண்டிருக்கும்போதே, நான் தங்களை அழைப்பேன். அழைத்ததும், நீங்கள் என் எதிரே வந்து அடக்கத்தோடு பேசாமல் நிற்கவேண்டும். நான் உங்களிடம் சில

பேசி விட்டு. இனி நீ போகலாம் என்பேன். என்றதும் நீங்கள் போய் விடவேண்டும். அவ்வளவுதான்'' என்றேன்.

''உன் பிரியப்படி, ஜமாய்த்துத் தள்ளடாதம்பி!'' என்று என் வேண்டுதலை அனுமதித்தார்கள்.

நிகழ்ச்சி தொடங்கி விட்டது. நான் மேடையேறி இராவணனுடைய வீரப்பிரதாபங்களையெல்லாம் கூறி முடித்து 'இராவணன் வந்திருக்கிறேன்' என்றேன். இராசகோபாலனும் மேடையேறி, வீடணனுடைய சிறப்புகளையெல்லாம் கூறி, 'வீடணன் வந்திருக்கிறேன்' என்றார்.

''வீடணா! துரோகி! நயவஞ்சக நரியே! நெஞ்சிலே நஞ்சுடைய விஷப்பாம்பே! உன்னை யார் இங்கே அழைத்தது?'' என்றேன்.

''உங்களை எந்தக் கம்பன் கழகம் அழைத்ததோ, அதே கம்பன் கழகம்தான் என்னையும் அழைத்தது'' என்றார் வீடணனாகப் பேசிய இராசகோபாலன்.

(வேறு பக்கம் திரும்பி-கைகளைத்தட்டி-சேவகனை அழைப்பது போல நடித்து) ''யார் அங்கே? நீபோய், கம்பன் கழகச் செயலாளர் கம்பன் அடிப்பொடியை அழைத்து வா இங்கே. வர மறுத்தால், கட்டி இழுத்து வா'' என்றேன்.

(அடியேன் முன் வேண்டிக்கொண்டபடி கம்பன் அடிப்பொடி வந்து எதிரே நின்றார்கள். நான் அவரை நோக்கி வெடிச் சிரிப்புச் சிரித்து)

''நீங்கள்தான் கம்பன் அடிப்பொடியோ? பாவம்! ஒரு சட்டைக்கும் கூட விதியில்லாத மானிடச் சாமியார்! ஏன் ஐயா! என்னை மரியாதையாக வரவேற்க உங்களுக்குத் தெரியாது போலும்! உடைவாளை ஏந்தி வர ஊர்வசியை அழைக்கவில்லை; அடைப்பயைச் சுமந்துவர மேனகையை அழைக்கவில்லை; பாதரட்சைகளைச் சுமந்து வர திலோத்தமையை அழைக்கவில்லை; எனக்கு வேண்டாத

வீடணனை அழைத்திருக்கிறீர்! ஏன் விழிக்கிறீர்? உம்மிடம பேசுவதே என் பெருமைக்கு இழுக்கு. இனி, நீர் போகலாம்'' என்றேன்.

கம்பன் மணிமண்டபமே அதிரும்படியான கைத் தட்டல்களுக்கிடையே, அண்ணன் அப்பால் போய் விட்டார் கள்.

இராவணன்—வீடணன் உரையாடல் தொடர்ந்து நடந்து வெற்றி முடி சூடிக்கொண்டது.

நிகழ்ச்சி முடிந்ததும் அண்ணன் அவர்கள் என்னை யும் இராசகோபாலனையும் கட்டிப்பிடித்து இதயம் குளிர்ந்து வாழ்த்தினார்கள்.

**வம்பர்களுக்கு வாய்ப்பூட்டு**

மறுநாள் காலை ஒரு சிலர், கம்பன் அடிப்பொடி யாரிடம் சென்று, ''என்ன இருந்தாலும் நேற்று மாலை நிகழ்ச்சியில், அருணகிரி உங்களை இப்படி அழைத்து நிறுத்தி, மானிடச் சாமியார் என்று பேசியிருக்கக் கூடாது. அவர் இப்படிப் பேசியது, உங்களைப் பெருமையாக மதிக்கும் எங்களுக்கெல்லாம் வேதனையாக இருந்தது'' என்று தூபம் போட்டார்கள். உடனே அண்ணன் அவர்கள் ''உங்களுக்கு அவனைப்பற்றி என்ன தெரியும்? உண்மை யான உயிரோட்டமுள்ள உரையாடல் நிகழ்த்தினான், ஜீவன் இல்லாத பேச்சு ஒரு பேச்சா? அவனுடைய உரை யாடலால், என் அப்பன் கம்பன் இமயத்தின் உச்சிக்கு ஏறி விட்டான். என்னைப்போன்ற உண்மையான தொண்டன் அருணகிரி. அவனைப்பற்றித் தவறாகத் திரித்துப் பேசா தீர்கள்'' என்று வைதவர்கள் வாய்க்குப் பூட்டுப் போட்டு விட்டார் கம்பன் அடிப்பொடியவர்கள்.

**கம்பன் அடிப்பொடி, தளும்புதலில்லாத நிறைகுடம்**

அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்கள், பேரறிஞராக விளங்கியதோடு சிறந்த தொண்டராகவும் விளங்கியவர்கள்.

'கற்றது கைமண்ணளவு' என்ற அடங்கிய கொள்கையோடு கூடிய தன்னடக்கமுள்ளவர்கள். தன்னை வைதாரையும் வையாமல் வாழ்ந்தவர் அண்ணன் அவர்கள். கம்பன் விழாக்களுக்குச் சென்றால், எந்தச் சிறிய பணியினையும் ஏற்று இன்முகத்தோடு செய்பவர்கள். விழா நடத்துகின்றவர் களின் சிரமங்களை உணர்ந்து அவர்களுக்குத் தொல்லை தராத இயல்பினர். எத்தனையோ தொண்டர்களை உருவாக்கிய உத்தமர். அவர்கள் உருவாக்கிய தொண்டர் களில் அடியேனும் ஒரு தொண்டன். எனக்குக் கம்பனைக் காட்டி அவனுக்குத் தொண்டு செய்யக் கற்றுக் கொடுத்தவர்களும் அவர்களே.

கம்பன் அடிப்பொடியவர்களின் இதய பீடத்தில் எனக் கென்று ஒரு தனியிடம் இருந்தது. அவர்கள் என்னை அறிந்து கொண்ட 1966முதல் 1982 வரை ஒவ்வொரு ஆண்டும் புதுவைக் கம்பன் விழாவில் பங்கு பெற்றார்கள். அவர்கள் வருகிறார்களென்றால் கம்பனே வந்தது போன்றி ருக்கும். விழா நடத்துகின்ற எங்களோடு எளிமையாகப் பழகி விழாவின் சிறப்புக்குரிய ஆலோசனைகளையெல்லாம் வழங்குவார்கள். விழாவில் அவர்களுக்குரிய பணியை மிகச் சிறப்பாகச் செய்து முடிப்பார்கள் மேலும், பேச்சாளர் களோ கவிஞர்களோ எவரேனும் வரவில்லையென்றால், நாங்கள் தத்தளிப்பதைப் புரிந்து கொண்டு, அப்பணியை அவர்களே ஆற்ற முன் வருவார்கள். தலைமைப் பொறுப் பாயிருந்தாலும், துணைப் பேச்சாளர் பணியாயிருந்தாலும் அவருக்கு இரண்டும் ஒன்றுதான்.

**கம்பனுக்குச் சிலை திறந்து சிறப்பித்தார்**

கம்பன் அடிப்பொடியவர்கள் இன்று எங்களிடையே இல்லையென்றாலும், புதுவை நகராட்சிக் கம்பன் கலை யரங்கில், 15—5—1977ல், புதுவைக் கம்பன் கழகத்தின் சார் பாக அவர்கள் திறந்துவைத்த கம்பன் திருஉருவச்சிலை

அண்ணன் அவர்களை நினைவூட்டிக் கொண்டேயிருக்கிறது.

பொங்கும் வளஞ்சேர் புதுச்சேரிப்
புனிதக் கம்பன் கழகத்தார்
இங்கே கடவுண் மங்கலஞ்செய்
எம்மான் கம்பன் அர்ச்சையிது
மங்கை பாகன், திருமார்பன்
வாணி கேள்வன் நல்லருளால்
எங்கும் என்றும் தமிழ்மணக்க
இருந்து நாளும் விளங்குகவே!

என்று கம்பன் அடிப்பொடியவர்கள் வாய்மணக்க இதயம் மணக்க வாழ்த்திசைத்துத் திறந்து வைத்த கம்பன் சிலையுருவம் புதுவை மாநகரில் நிலைபெற்றிருக்கிறது.

### கம்பன் அடிப்பொடி எனக்கு எழுதிய கடைசிக் கடிதம்

காரைக்குடிக் கம்பன் திருநாள் ஆண்டு தோறும் பங்குனி அத்தநாளில் நிறைவுறும்படி, மகம்நாளில் தொடங்கும். முதல் மூன்றுநாள் விழா காரைக்குடியிலும், நான்காவது நாள் விழா நாட்டரசன் கோட்டை கம்பன் பள்ளி படைக்கோயிலிலும் நிகழும் காரைக்குடியில் விழா நிகழும் மூன்று நாட்களிலும் ஒய்வு நேரங்களில் புதுவைக் கம்பன் விழாவுக்குரிய நிகழ்ச்சிநிரலைத் தயாரித்து, நான்காவது நாள் நாட்டரசன் கோட்டை, கம்பன் சன்னிதியில் படையலிட்டபின் என்னிடம் கொடுத்து வாழ்த்தி வழியனுப்புவார்கள். இப்படியே 1982 வரை நிகழ்ச்சி நிரல் அமைத்துக் கொடுத்தார்கள்; விழாவுக்கும் வந்து சிறப்பித்தார்கள். 1982 மே திங்களில் புதுவைக் கம்பன் விழா முடிந்து ஊர்திரும்பிய பின் 11—5—82ல் காரைக்குடியிலிருந்து கடிதமும் எழுதினார்கள்.

அன்புச் சோதர! வணக்கம்.

நேற்றுப் பகல் ரயிலேறி திருச்சி வந்து, அங்கிருந்து 5 மணிக்குப் புறப்பட்டு 7-30 மணிக்குக் காரைக்குடி வந்து சேர்ந்தேன். இந்த ஆண்டுக் கம்பன்விழா நாவலோ நாவல் என நடந்தேறியது. எல்லாம் உங்கள் உழைப்பும் ஆர்வமுமே!வாழ்க! எல்லீர்க்கும் என் அன்பும்வணக்கமும்.

அன்புடன்,

**கம்பன் அடிப்பொடி**

இதுவே, அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்கள் எனக்கு எழுதிய கடைசிக் கடிதம். பிறகு, 28—7—82 இரவு கோவை குப்புசாமி நாயுடு மருத்துவமனையிலிருந்து தொலைபேசி மூலம், அண்ணன் கம்பன் அடிப்பொடியவர் கள் கம்பன் திருவடி நிழலில் கலந்து விட்ட செய்திதான் வந்தது.

**கம்பன் கழலிணையில் கலக்கும் நாள் அறிந்தார் போலும்!**

கம்பன் அடிப்பொடியவர்களுக்குத் தன்னுடையஇறுதிக் காலம் விரைந்து நெருங்குவது முன்கூட்டியே தெரிந்தது போலும்! கம்பன் திருநாள் நிகழ்ச்சியின் பொருட்டுக் கோவை மருத்துவமனையிலிருந்து அனுமதி பெற்றுக் காரைக்குடிக்கு வந்து 1982 காரைக்குடிக் கம்பன் திரு நாளைச் சோர்ந்த நிலையிலே கொண்டாடினார்கள். நான்காவது நாள் நாட்டரசன்கோட்டையில் முடிந்து நன்றி கூறும் போது பின்வருமாறு பேசினார்கள்.

“அன்பர்களே! எந்தைபிரான் கம்பன் திருநாள் இந்த ஆண்டு இனிதே நிறைவுற்றது. இந்த விழாவுக்கு எல்லா வகையாலும் ஒத்துழைத்த எல்லோருக்கும் நன்றி. கம்பன் திருநாளை இத்தனை ஆண்டுகள் சீரும் சிறப்புமாக நடத் தியது போல, அடுத்த ஆண்டுகளிலும் நடத்த வேண்டுமென உங்கள் அனைவரையும் வேண்டிவிரும்பி விடைபெறு கிறேன். வணக்கம்!” என்று கரகரத்த குரலில் கூறி முடித்தார்கள்.

'எப்போதும் நன்றி கூறுதலோடு முடித்துக் கொள்ளு கின்ற கம்பன் அடிப்பொடியவர்கள், இந்த ஆண்டு புதுமை யாக வேண்டுதலும் விடுக்கின்றாரே'என்று நாங்கள் அனை வரும் விதிர்விதிர்த்துப் போனோம். சிலநிமிடங்கள் எங்க ளிடையே நிசப்தம் நிலவிற்று. அனைவர் கண்களிலும் கண்ணீர் அரும்பி நின்றது. நான், அண்ணன் க. கு. கோ. அவர்களைப் பார்த்தேன். அவர்களும் தாம்பூலம் தரித்த வாயிலிருந்த எச்சிலைக் கூட்டி விழுங்கியவாறு அழுகையை அடக்கிக் கொண்டு நின்றார்கள். என்னால் அழுகையை அடக்க முடியவில்லை; அலறிஅழுதேவிட்டேன். அண்ணன் கா. கு. கோ அவர்கள் என்னை மார்போடு தழுவித் தட்டிக் கொடுத்து ஆறுதல்கூறி அனுப்பி வைத்தார்கள். அன்று முதல் அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினனாகவே நடமாடிக் கொண்டிருக்கிறேன்.

**இராமன்-கம்பன் அடிப்பொடி, நான்-பரதன்**

நந்தியம் பதியிடை நாதன் பாதுகம்
செந்தனிக் கோல்முறை செலுத்த, சிந்தையான்
இந்தியங்களை அவித்து இருத்தல் மேயினான்,
அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினான்

என்று அயோத்தியா காண்டத்தில் வரும் கம்பன் பாடல் தான் இப்போது என் நினைவுக்கு வருகிறது. அன்று நந்தியம்பதியில் இராமபிரானுடைய பாதுகைகளைச் சென்னியில் சூடி இரவிலும் பகலிலும் நீர் அறாத கண்ணி னனாக இருந்தான் பரதன். இன்று நானோ புதுவையம்பதி யில் அண்ணன் கம்பன் அடிப்பொடியின் திருவடிகளைச் சிந்தையில் சூடி இரவிலும் பகலிலும் நீர் அறாத கண்ணின னாக இருக்கிறேன்.

**இலங்கை ஜெயராஜின் ஈடுபாடு**

பாதுகை என்றதும் இலங்கைத் தமிழ் இளைஞர் ஜெய ராஜ் என்பவர் என் மனக் கண் முன் வந்து நிற்கிறார். ஜெயராஜ் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர். இலக்கிய

உள்ளம் கொண்ட தமிழ்த் தொண்டர். அகில இலங்கைக் கம்பன் கழகச் செயலாளர். சிறந்த பேச்சாளர். நல்லூர் கந்தசாமி கோயிலை அடுத்துக் கம்பன் கழகத்திற்கென்று கட்டிடமொன்று கட்டிக் கொண்டிருப்பவர்கள். கம்பன் அடிப்பொடி அவர்கள் மீது எல்லை சொல்ல முடியாத பக்தி கொண்டவர் ஜெயராஜ் அவர்கள்.

இலங்கை ஜெயராஜ் அவர்கள் ஒருமுறை கம்பன் திருநாளின்போது பேச்சாளராகக் காரைக்குடிக்கு வந்திருந்தார். முதல்நாள் நிகழ்ச்சி முடிந்து இரவு உணவுக்குப்பின் கம்பன் மணிமண்டப அலுவலகத்தில் அனைவரும் கூடிக் கம்பன் அடிப்பொடியுவர்களோடு ஆனந்தமாக உரையாடி மகிழ்ந்திருந்தோம். அப்போது ஜெயராஜ் கம்பன் அடிப்பொடியவர்களை நோக்கி "ஐயா! உங்கள் பாதரட்சைகளை என்னிடம் கொடுங்கள். இவற்றை என் தலையில் சுமந்து சென்று இலங்கையில் அலங்கரித்து வைத்து அதன் ஆணைப்படி கம்பன் கழகத்தை நடத்த விரும்புகிறேன்" என்று சொல்லிக் கொண்டே கம்பன் அடிப்பொடியின் காலணிகளைத் தலைமீது வைத்துக் கொண்டு வெளியே செல்லத் தொடங்கினார். நாங்கள் அனைவரும் ஜெயராஜின் பக்திச் சிறப்பைக் கண்டு அதிசயித்துப் போனோம். கம்பன் அடிபொடியவர்களோ, "எனக்கென்றுள்ள ஒரு ஜோடிப் பழஞ் செருப்பையும் தூக்கிக்கொண்டு, போகிறானே! டேய்! டேய்! கொடுத்து விடடா!" என்று கெஞ்சினார்கள். பரிதாபமாக இருந்தது.

**எல்லாம் கம்பனுக்கே காணிக்கை**

ஆ...! விடுதலைப்போரின் போது கொள்ளைகொடுத்தது போக, எஞ்சியவையனைத்தும் கம்பனுக்கே அர்ப்பணித்த கம்பன் அடிப்பொடியவர்களிடம் வேறு என்ன இருக்கிறது?

எல்லாம் கம்பனுக்கே காணிக்கை.

# கம்பனது கடவுட் கொள்கை

**கோபுர வாயில்**

காசில் கொற்றத்து இராமன் கதையை ஆசைபற்றி அறைதலுற்றான் கவிச்சக்கரவர்த்தி கம்பன். நடையில் நின்று உயர்ந்த நாயகனாகிய இராமனது கதையை நான்கு வேதங்களையும் நன்குணர்ந்த வான்மீகி முனிவரே 'இராமாயணம்' என்றபெயரில் விரும்பிப் பாடினாரென்றால் கல்வியில் பெரியவனாகிய கம்பன் 'இராமாவதாரம்' என்ற பெயரில் இராமகாதையைப் பாட ஆசைப்பட்டதில் வியப்பொன்றுமில்லை. ஆகையால், தென்சொற்கடந்து வட சொற் கலைக்கு எல்லை தேர்ந்த கம்பன், வடமொழியில் வான்மீகி வடித்த இராமாயணத்தை வாங்கி இராமாவதார மாகத் தமிழிலே தந்தான்.

**ஏற்புடைக் கடவுளும் வழிபடு கடவுளும்**

ஒருவனுக்கு ஒருத்தியென்ற உயர்ந்த ஒழுக்கநெறியில் வாழ்ந்து காட்டிய இராமனை, மானிடத் தெய்வமாகக் கண்ட கம்பன், அவனை எடுத்துக் காட்டாகக் கொண்டு மக்கள் நடந்தால் உலகம் உய்யும் என்று கருதினான். அதனால்தான் மானுடம் போற்றும் மாக்கதையாக இராமகாதையைப் பாடத் துணிந்தான். இராமகாதையைப் பாடும் பணியே பணியாய்க் கொண்ட கம்பனுக்குத் தான் மேற்கொண்ட பணி, எந்தவித இடையூறுமின்றி இனிது நிறைவேற வேண்டுமென்ற கவலை அதிகரித்தது.

ஆகையால், நூற்பொருளுக்கு ஏற்புடைக் கடவுளாகிய இராமனது புகழைப் பாடுதற்குத் தன்னுடைய வழிபடு கடவுளை வணங்கித் தொடங்குகிறான்.

### கற்றதன் பயன் கடவுளை வணங்குதல்

கம்பராமாயணத்தின் காப்புப் பாடலாகப் பால காண்டத்தின் பாயிரப் பாடலைப் பாடியதோடு, கம்பனுடைய உள்ளம் அமைந்து விடவில்லை. கவிச் சக்கரவர்த்தி கம்பன், புவிச்சக்கரவர்த்தித் திருமகன் கதையைப் பாடிவரும்போது, காண்டங்கள் தோறும் கடவுள் வாழ்த்துப் பாடுகிறான். இராமகாதை நூல் ஒன்றேயாயினும், காண்டங்கள் பொருளால் பலவாதலால், ஆறுகாண்டங்களுக்கும் தனித்தனியே கடவுள் வாழ்ததுப் பாடித் தொடங்குகிறான். மேலும் கற்றதன் பயன் கடவுளை வணங்குதலேயாதலால் கல்வியில் பெரியவனாகிய கம்பன் காண்டங்கள்தோறும் கடவுள்வாழ்த்துப் பாடவில்லையென் றால் அவன்கற்ற கல்வி பயனற்றதாகிவிடுமல்லவா? எனவே, ஆறு பாடல்களை ஆறுகாண்டங்களுக்கும் முதலிலே கடவுள் வாழ்த்தாக நிறுத்துகிறான். கடவுள் வாழ்த்தாக வரும் ஆறுபாடல்களையும் கொண்டு கம்பனுடைய கடவுட் கொள்கையை ஆய்ந்தறிவோம்.

### கம்பன் சமயவாதியல்லன்

கம்பனைச் 'சைவன்' என்று சாதிப்பாரும், வைணவன் என்று வாதிப்பாரும் கம்பன் காலத்திலிருந்து இன்றுவரை வாழையடி வாழையாக வந்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் அனைவரும் 'அரன்அதிகன்'; 'உலகளந்த அரிஅதிகன்' என்று வாதிடுவார்போல், கம்பனைத் தங்கள் சமயத்திற்கு இழுக்க முயல்கின்றனர். சைவ வைணவப் பெருமக்களின் வாதப் பிரதிவாதங்களைக் காணும் பிற சமயத்தார்களும் தங்கள் தங்கள் சமயக் கண்ணாடி யணிந்து கம்பனுடைய கடவுட் கொள்கையைக் காண்

கின்றனர். இவர்கள் அனைவரும் இராமாவதாரத்தின் கதைப்போக்கினையும், இராமபிரானை வழிபடும் கதை மாந்தர்களின் கூற்றுக்களையும். சில அடைமொழிகள், உவமைகள், இயற்கை வருணனைகள் முதலியவற்றையும் கொண்டு திறனாய்வு செய்து தீர்ப்புரைக்கின்றனர்.

**துதிப் பாடல்களின் துணை வேண்டாம்**

கதை மாந்தர்களில், விராதன், கவந்தன், அனுமன், வாலி, சுக்கிரீவன், அங்கதன், பிரகலாதன், இராவணன், கும்பகருணன், வீடணன், கருடன், இந்திரன், பிரமன்' சிவன், அமரர் ஆகியோர் வழிபடுவதாக வந்துள்ள பாடல்களோடு ஆழ்வார் பாசுரங்களையும் துணைக்குச் சேர்த்துக் கொண்டு திறனாய்வாளர்கள் கம்பனது கடவுட் கொள்கையை ஆராய முற்படுகின்றனர். இராம காதையில் வரும் வழிபாட்டுப் பாடல்களில் மும்மூர்த்திகளில், பிரமனும் சிவனும் தான் இராமனை வழிபட்டதாக வருகின்றதே யன்றித் திருமால் இராமனை வழிபட்டதாகக் காணப்பட வில்லையாதலால் திருமாலே கம்பன் கண்ட கடவுள் என்றும், திருமாலின் அவதாரமாகிய இராமனே கம்பன் கண்ட கடவுள் என்றும் ஆராய்ச்சியாளர் முடிவுக்கு வந்து விடுகின்றனர். இந்த முடிவு கம்பனுடைய உள்ளத்தின் உண்மை நிலையா? என்பதை நாம் காணுதல் வேண்டும்.

**கம்பனது உள்ளத்தை உணர்தல் வேண்டும்**

கம்பன் தான் பாடிய காவியத்துள் பாத்திரங்களின் நிகழ்ச்சிகளுக்கேற்ப அங்கங்கே, அவரவர்கள் கூற்றுக்குக் குரல் கொடுக்கிறான். அவனது குரலை மட்டும் கேட்டு, உள்ளத்தின் உண்மை உணர்வை உணர முடியாமல் கண்டபடியெல்லாம் தீர்ப்புரைப்பது திறனாய்வுக்கு அழகாகாது. காவியப் பாத்திரங்களின் வாயிலாகக் கம்பன் காட்டும் கடவுளுணர்வில் அவனுக்குப் பங்கில்லை. அது பாத்திரங்களுக்கே சொந்தமாகும். ஆனால் காண்டங்கள்

தோறும் அவன் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல்களில் உறைந்து கிடக்கும் கடவுட் கொள்கை, கம்பனுக்கே சொந்தமாகும்; அவற்றில் பாத்திரங்களுக்குப் பங்கில்லை. மேலும், 'திருமாலின் அவதாரமே இராமன்' என்பது வான்மீகம். வான்மீகத்தின் வழி நூலாக எழுதிய கம்பனும் மூலத்தில் மாறுபடாமல் கதைப் போக்கினை அவ்வாறே எழுதினான். ஆனால், வான்மீகி பார்வையில் இராமன் ஒரு தெய்வம்; கம்பன் பார்வையில் இராமன் ஒரு மானுடன். இராமன் திருமாலின் அவதாரம் என்ற கொள்கைக்கு முழுப்பொறுப்பு வான்மீகியேயன்றிக் கம்பனில்லை.ஆகையால், கம்பனது கடவுட் கொள்கையைக் காண்டங்களின் முதலில் வரும் கடவுள் வாழ்த்துப் பாடல்களைக் கொண்டே கணக்கிட வேண்டும். அப்போது தான் சரியான விடை கிடைக்கும்.

**வள்ளுவர் துணைக்கு இணையில்லை.**

இராம காதையின் கடவுள் வாழ்த்துப் பாடல்களைக் கொண்டு கம்பனுடைய உண்மையான கடவுட்கொள்கையை உணர்தற்குத் தெய்வ வள்ளுவரின் திருக்குறளைத் தேவையுள்ள போது துணைக் கொள்ளுவதில் தவறில்லை. "தெய்வ மாக்கவி மாட்சி தெரிவிக்கவே இராமகாதையை இயம்பினேன்" என்று கம்பனே தற்சிறப்புப் பாயிரத்தில் கூறியுள்ளதால் அந்த வள்ளுவன் செய் திருக்குறளை வழி காட்டியாகக் கொண்டு விடைதேடுவோம்.

**எவர் தலைவர்?**

"உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகுஇலா விளையாட்டு உடையார்; அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே"

இது, இராமாவதாரத்தின் கடவுள் வாழ்த்துப் பாடல். இப்பாடல், பாலகாண்டத்தின் பாயிரப்பாடலாக நின்று

கடவுள் வணக்கம் கூறுகின்றது. கம்பனுக்கு வழிபடு கடவுள் வாழ்த்து இது. இராமகாதைக்கு ஏற்புடைக் கடவுள் வாழ்த்தாகவும் இதனைக் கொள்ளலாம்.

"உலகம் முழுவதையும் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் விளையாட்டாக-காலத்தால் இடைவிடாது- தொடர்ச்சியாக- அசகாயகர்த்தாவாகி- எங்கும் என்றும் ஆற்றிக் கொண்டிருப்பவர் எவரோ, அவரே உலகிற்குத் தலைவர். அத்தலைவரின் திருவடிகளுக்கே நாங்கள் அடைக்கலம்" என்பது பாடலின் பொருள்.

படைத்தல், காத்தல், மறைத்தல் ஆகிய முத்தொழில்களையும் முறையே பிரமனும், திருமாலும், சிவனும் ஆற்றிக் கொண்டிருப்பதாக நாம் கருதிக் கொண்டிருக்கிறோம். கம்பனோ, முப்பெருங் கடவுளர்கள் ஆற்றுவதாகக் கருதும் முத்தொழில்களையும் ஒருவரே விளையாட்டாகச் சிரமம் ஏதுமின்றிஆதிகாலந்தொட்டுச்செய்வதாகப் போற்றுகிறான். உலகத்து இயக்கங்கள் அனைத்தும் கடவுளின் திருவிளையாடலுள் அடக்கம் என்று கருதினான் கம்பன். ஆகையால்தான், அவரையே தலைவர் என்றும் கொண்டாடுகிறான். முப்பெருங்கடவுளார்க்கும் முதல்வர் முழுமுதற் கடவுள்-அவரே பரம்பொருள்-மூவர்க்கும்மூர்த்தி;மூவர்க்கும் மூர்த்தியென்றால் யாவர்க்கும் மூர்த்திதானே! ஆகையால் தான் அவர் தமக்கு மட்டும் தலைவராகவில்லை 'உலகிற்கே தலைவர்' என்று முத்தாய்ப்பு வைப்பது போல், 'உலகம் யாவையும்' என்று தொடங்கினான். பரம்பொருளாகிய அந்தத் தலைவருக்குத் தன்னை மட்டும் அடைக்கலமாக்கிக் கொள்ளக் கம்பன் விரும்பவில்லை உலகத்து உயிர்கள் அனைத்தையும் தன்னைப்போலவே அடைக்கலமாக்கிச் 'சரண் நாங்களே' என்று மங்கலக் கூத்தாடுகிறான்.

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவனடி சேரா தார்'

என்ற குறள் நெறிப்படி, அத்தலைவரின் திருவடிகளையே புகலிடமாகக் கொண்டு, புணையாகப் பற்றிப் பிறப்பாகிய பெருங்கடலைக் கடத்தல் வேண்டும் என்கிறான் கம்பன். இராமகாதை கடவுள் வாழ்த்தின் மூலம் கடவுளின் பொது இயல்பினை உயிரினத்துக்கே உரிமையாக்கி மகிழ்கிறான் கவிச்சக்கரவர்த்தி.

ஒரு காண்டத்திற்கு மூன்று கடவுள் வாழ்த்துக்களா?

பாலகாண்டப் பாயிரத்தில் மூன்று பாடல்கள் கடவுள் வணக்கம் கூறுகின்றன. என்றாலும், 'உலகம் யாவையும்' என்று தொடங்கும் ஒரு பாடலுக்கு விளக்கமாகவே மற்ற இரு பாடல்களும் அமைந்துள்ளன.

சிற்குணத்தர் தெரிவு அரு நல்நிலை
எற்குணர்த்த அரிது; எண்ணிய மூன்றனுள்
முற்குணத் தவரே முதலோர்; அவர்
நற்குணக் கடல் ஆடுதல் நன்று அரோ.

'கம்பன், எவரைத்தலைவர் என்று வணங்குகின்றானோ அந்தத் தலைவரின் இயல்பை அறியாமையுடைய என்னால் உணர்த்த இயலாது' என்று தன்னடக்கத்தோடு கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். அடுத்த பாடல், அந்தத் தலைவரின் அடியடைந்து உயர்வதற்குரிய வழிகாட்டுகிறது.

"ஆதி, அந்தம் அரிஎன யாவையும்
ஓதினர்; அலகுஇல்லன, உள்ளன,
வேதம் என்பன மெய்ந்நெறி நன்மையான்
பாதம் அல்லது பற்றிலர் பற்றிலார்."

இந்தப் பாடல் கடவுளாகிய தலைவரின் சரணங்களின் சிறப்பை விரித்துரைக்கின்றது.

இராம காதையின் முதற் காண்டத்தில், மூன்று பாடல்கள் கடவுள் வணக்கம் கூறுகின்றன என்று கூறுவது முறையன்று. மூன்று பாடல்களில் முதற்பாடலுக்கு மற்ற இரண்டு பாடல்கள் உரை விரிக்கின்றன என்று கொள்ளுதல் உத்த

மம். 'மூன்று' என்பது மங்கலமான எண் முக்குணக் கடலாகிய கடவுளுக்குக் கம்பன் மூன்று பாடல்களைப் படையலிட்டு வணங்கித் தொடங்கினான் போலும்!

பாலகாண்டக் கடவுள் வாழ்த்தில், கம்பன் கடவுளைத் தலைவர் என்றுகூறி, அவருடைய திருவிளையாட்டியல் பினைத்தான் அடையாளம் காட்டினானேயன்றி, உருவ அடையாளம் கொடுக்கவில்லை. உருவமற்ற அருவ நிலை யிலேவிளங்கும் அந்தத் தலைவர் யார்? அவர் எப்படியிருப் பார்?என்பவற்றிற்குரிய விடையைப் பாலகாண்டத்திற்கு அடுத்த அயோத்தியா காண்டத்தில் கூறுகிறான்.

கழல் வேந்தை உள்ளும் புறமும் உளன் என்ப,

''வான்நின்று இழிந்து வரம்பு இகந்த
மாபூ தத்தின் வைப்பு எங்கும்
ஊனும் உயிரும் உணர்வும் போல்
உள்ளும் புறமும் உளன் என்ப,
கூனும் சிறிய கோத் தாயும்
கொடுமை இழைப்பக் கோல் துறந்து
கானும் கடலும் கடந்து இமையோர்
இடுக்கண் தீர்த்த கழல் வேந்தை''

கூனலையுடைய மந்தரையும், சிற்றன்னை கைகேயி யும், கொடுமை புரிய, அதனால் ஆட்சி செய்தலை விட்டுக் காடும் கடலும் கடந்து சென்று, மாற்றாரை அழித்து அமரர்களின் துன்பத்தைத் தீர்த்தருளிய இராமபிரானை, அங்கு இங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்தவன் என்று சான்றோர் பெருமக்கள் கூறுவார்கள் என்கிறான் கம்பன்.

உலகமும் உலகத்துள்ள பொருள்கள் அனைத்தும் பஞ்ச பூதங்களின் கலப்பினால் ஆனவை. பஞ்ச பூதங்களில் முதலில் தோன்றியது வான். வானிலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து

நிலமும் தோன்றின. நிலத்திற்கு முதன்மை நீர்; நீருக்கு முதன்மை நெருப்பு; நெருப்புக்கு முதன்மை காற்று; காற்றுக்கு முதன்மை வான். வானுக்கு முதன்மையில்லை. முதன்மையில்லாத வான் என்ற பூதமே மற்றைய பூதங் களுக்கு மூலம். மூலமே இல்லா முதன்மைப் பூதமாகிய வான் என்ற தத்துவம், பின்னர்த் தோன்றிய நான்கு பூதங் களிலும், கண்ணுக்குத் தோன்றாமல் கரைந்து கிடப்பதே உண்மை. இந்த உண்மையின் அடிப்படையில் தான் நம்முடைய ஆன்ம தத்துவமும் நிகழ்கிறது.

ஆன்ம தத்துவமானது, கண்ணுக்குத் தோன்றும் உடம்பினுள், கண்ணுக்குத் தோன்றாத உயிரும், உயிரில் உறையும் உணர்வும், பெற்று விளங்குகிறது. ஆகாயம் என்ற கண்ணுக்குத் தோன்றாத மிக நுண்ணிய பொருளி லிருந்து உருவெடுத்துக் காற்று, தீ, நீர், நிலம் ஆகியவற்றில் கலந்து தொழிற்படுவது எதுவோ, அதுபோல கண்ணுக்குத் தோன்றாத ஆன்மதத்துவமும் உடம்பு, உயிர், உணர்ச்சி ஆகியவற்றில் நிறைந்து தொழிற்படுகிறது. இவைபோன்று கடவுள் தத்துவமும் எல்லாப் பொருள்களிலும் நிறைந்து தொழிற்படுவதால், இராமன் என்ற அரிய மானிடனிடத் திலும் நின்று தொழிற்படுகிறது. ஆகையால், இராமரின் உயர்பண்புகள் அனைத்தும் கடவுளுடையனவாகி விடு கின்றன. இந்தச் சித்தாந்தக் கருத்தை உள்ளத்தில் கொண்ட கம்பன் அறம்தலை நிறுத்தவந்த அயோத்தி ராமனிடத்திலும் கடவுள் தத்துவத்தைக் காணுகிறான்

கடவுள் தத்துவமானது, கண்ணுக்குத் தோன்றும் எள்ளுக்குள்ளே கண்ணுக்குத் தோன்றாமல் எண்ணெய் கலந்திருப்பது போலவும், கண்ணுக்குத் தோன்றும் மலருக் குள்ளே கண்ணுக்குத் தோன்றாத மணம் பொருந்தி யிருப்பது போலவும் மறைந்து நின்று பொன்நகைக்குள்ளே அதனை உருவாக்கிய பொற்கொல்லன் மறைந்து நின்றது போன்று, கண்ணுக்குத் தோன்றாமல் நின்று செயல்படு

கிறது. எல்லாவற்றிலும் அடங்கியும், எல்லாவற்றையும் அடக்கியும் இயங்குவதே கடவுள் தத்துவம்.

ஒப்புயர்வற்ற இந்த உண்மையை உணர்ந்த கம்பன், "இமையோர் இடுக்கண் தீர்த்த கழல்வேந்தை, உள்ளும் புறமும் உளன் என்ப" என்று பாடுகிறான். 'என்ப'- 'என்பதற்கு என்று சொல்லுவார்கள்' என்பது பொருள். இராமனுள்ளிருந்து பரம்பொருள் இயக்குகிறது என்பதை உணராமல் சிலர் இராமனையே பரம்பொருள் என்று சொல்லுவார்கள் என்ற பொருளும் இந்தச் சொற்றொடரில் தொனிக்கிறது. 'என்ப' என்ற சொல்லைப் பயன்படுத்துவதால், இராமனையே பரம்பொருள் என்று பிறர் சொல்லுவார்களேயன்றி நான் சொல்லவில்லை' என்று சொல்லாமல் சொல்லுகிறான் கம்பன்.

தொல்காப்பியம், நன்னூல் போன்ற இலக்கணநூல்களில், 'என்ப,' 'என்பர்' என்ற சொற்கள் பயின்று வருகின்றன. அந்தச் சொற்கள், முன்னைய சான்றோர்கள் சொன்ன விதிகளை வழுவாமல் நாமும் கடைப்பிடிக்க வேண்டும் என்ற பொருளைத் தருகின்றன. அந்த வகையில் தான், கம்பனும் 'என்ப', 'என்பர்' என்ற சொற்களைக் கையாளுகிறான். வான்மீகி, போதாயனர் போன்ற பெரியோர்களைப் போன்று கம்பனும் இராமனைக் கடவுளாக மதிக்கிறான் எனினும் இராமனையே பரம்பொருளாகக் கொள்ளக் கம்பனுடைய உள்ளம் மறுக்கிறது. ஆகையால், காவியத்தின் கதைப்போக்கில் பற்பல மாற்றங்கள் செய்தது போன்று, கடவுட் கொள்கையிலும் மாற்றம் செய்கிறான். வான்மீகி போன்றோர் கண்ட கடவுட் கொள்கையிலும் கம்பனுடைய புரட்சிப்பார்வை விழுந்ததன் விளைவு இது. முன்னையோர் கொள்கை கற்றவர்களுக்கே பயன் தருவது. கம்பனது கொள்கை, கற்றவருக்கும் கல்லாதவருக்கும் எல்லாருக்கும் பயன்தருவது. இராமனையே கடவுள் என்று முன்னையோர் காட்டும் காட்சியை மாற்றவே 'என்ப' என்ற சொல்லைப் பெய்தான் கம்பன்.

**இராமன் உணர்வினுள் இறைவன் உறைகிறான்**

"உடம்பினுள் உயிரும், உயிரினுள் உணர்வும் போல் இராமன் இருக்கிறான்" என்று முன்னையோர் சொன்னாலும்; அந்த இராமனுடைய உணர்வினுள்ளும் இறைவன் உறைந்திருப்பதை உணர்ந்தான் கம்பன். இராகவன் மிதிலையில் திருமணக்கோலத்தில் இருந்தபோது,

"கோதறு தவத்துத்தம் குலத்துள்ளோர் தொழும்
ஆதியம் சோதியை அடிவணங்கினான்."

காடு சென்ற இராமன் கங்கைக்கரை முனிவர்களின் விருந்தினனாகத் தங்கியிருந்த போது,

"துறை நறும்புனல் ஆடிச் சுருதியோர்
உறையுள் எய்தி, உணர்வுடையோர் உணர்
இறைவற் கைதொழுது ஏந்துஎரி ஓம்பிப்பின்
அறிஞர் காதற்கு அமைவிருந்து ஆயினான்."

இலக்குவனோடும் சீதையோடும் இராமன் சித்திரகூடத்தில் தங்கியிருந்தபோது, மாலை வழிபாடு நிகழ்த்தியதாக ஒரு பாடல் வருகிறது.

மொய்உறு நறுமலர் முகிழ்த்த வாம்சில;
மை அறு நறுமலர் மலர்ந்த வாம்சில;
ஐயனோடு, இளவற்கும் அமுது அனா ளுக்கும்
கைகளும், கண்களும் கமலம் போன்றவே."

இப்பாடலின் மூலம், இராமன் அந்தியை நோக்கியிருந்து, தாமரைமலர் போன்ற கைகுவித்துக் கண்மூகிழ்த்து இறைவனை நோக்கி மாலை வழிபாடு இயற்றினான் என்ற செய்தி தெளிவாகின்றது.

இப்படியே பல இடங்களில் இராமன் தன்னுடைய வழிபடு கடவுளை வணங்கியதாகக் காட்டும் கம்பன், இராமனுக்கும் வழிபடு கடவுள் ஒன்று உண்டு என்று உணர்த்துகிறான். இராமன் எந்தக்கடவுளை வழி

பட்டானோ, அந்தக் கடவுளையே கம்பனும் தன்னுடைய வழிபடு கடவுளாகக் கொள்கிறான் தனக்கென்று ஒரு வழிபடு கடவுளைத் தன் உள்ளத்தில் வரையறுத்துக் கொண்ட கம்பன் அக்கடவுளை வணங்கி இராம காதையைப் பாடத் தொடங்கினான். கடவுள் தத்துவம் உள்ளுறைந்து நிற்கும் இராமனையே கடவுள் என்று நம்பும் மக்களைத் தெளிவு பெறச் செய்யவே அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்தைப் பயன்படுத்துகிறான் அவன்.

**கண்டதைக் கொண்டு காணாததை உணர்த்துதல்**

உண்மைக்கு ஒருவனாய் வாழ்ந்த அரிச்சந்திரனை நாம் கண்டதில்லை. 'வாய்மையே வெல்லும்' என்று வாழ்ந்து காட்டிய உலக உத்தமர் காந்தியடிகளை நாம் கண்டிருக்கிறோம். கண்கண்ட தெய்வமாகிய காந்தியடிகளின் வழியே அரிச்சந்திரனையும் உண்மையின் உயர்வையும் உணர்கிறோம். கண்ட ஒன்றிலிருந்து காணாத ஒன்றை (from concrete to abstract) உணர்த்துவது தான் உலக வழக்கு, அதுபோலவே, கம்பன்தான் கண்ட இராமன் வழியே காணாத கடவுளின் தத்துவத்தைக் கண்டுணர்த்துகிறான்.

**காணததைக் கொண்டு, கண்டதைக் காட்டுதல்**

கம்பனுக்கு முன் இராமாயணத்தைப் பாடியவர்களும் பாடப் பக்கம்நின்று கேட்டவர்களும் கண்ணுக்குத் தெரியாத பரம்பொருளைக் கொண்டு கண்கண்ட (from abstract to concrete) இராமனைக் காட்டினார்கள். இந் நிகழ்ச்சி, அண்மைக்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சி யொன்றை நினைவுபடுத்துகிறது.

ஆசியஜோதி பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள், பாரதப் பிரதமராக ஒளி வீசிக்கொண்டிருந்த காலத்தில், ஒருநாள் டில்லியில் புயல் வீசிக்கொண்டிருந்தது. இந்தியா வில் வெளிநாட்டின் தூதராக அப்போது பணியாற்றிக்

கொண்டிருந்த கிறித்தவ அறிஞர் ஒருவர், நேரு பெருமானைப் பேட்டி காண்பதற்காக வந்தாராம். வந்தவர் பண்டிதரைப்பார்த்து, ''ஜெனாசரத்' (Stormof Genazereth) புயலைப் போன்றில்லையா இந்தப் புயல்?'' எனறு கேட்டா ராம். உடனே பிரதமர் அவர்கள் 'ஆம்' என்றோ, 'இல்லை' என்றோ சொல்லாமல், ''கண்ணுக்குத் தெரிகின்ற இந்தப் புயலைக் கண்ணுக்குத் தெரியாத அந்தப் புயலைக் கொண்டு விளக்க முயல்கின்றீர்களே, இது உங்களுக்கே விந்தையாக இல்லையா?'' என்று எதிர்வினா எழுப்பினார்களாம். பாரதப் பிரதமரின் தெளிந்த மெய்யறிவைக் கண்டு, வெளி நாட்டுத்தூதர் திகைத்து நின்று விட்டாராம்.

கண்காணாத ஒன்றை உணர்த்தக் கண்கண்ட ஒன்றைப் பயன்படுத்தும் உலக வழக்கம் இருக்கவும், வெளி நாட்டுத்தூதர் கண்ணுக்கெதிரே வீசும் புயலைக் காட்டச் சமயப் பற்றின் காரணமாகப் பைபிளில் பேசப்பட்ட ஜெனாசரத் புயலை வலிந்து இழுப்பதை ஆசிய ஜோதி விந்தையாகக் கொண்டதில் வியப்பொன்றுமில்லை. நேரு பெருமகனின் மெய்யறிவினைக் கொண்டு, கவிச் சக்கர வர்த்தியின் உண்மையுணர்வினை நாம் உணர வேண்டும்.

ஆசிரியர்களில் சிலர் இலக்கணப் பாடம் கற்பிக்கும் போது, சூத்திரத்தைச் சொல்லிப் பொருளுணர்த்திப் பின்னர் உதாரணந்தந்து விளக்குவார்கள். இதற்கு 'விதி விளக்கு முறை' என்று பெயர். வேறு சிலர் உதாரணங் களைச் சொல்லி, உதாரணங்களுக்கேற்ப விதிபடைத்து இறுதியாகச் சூத்திரம் சொல்லிப் போதிப்பார்கள். இதற்கு 'விதி வரு முறை' என்று பெயர். விதியைக் கொண்டு விளக்கம் தருவதைவிட, விளக்கத்தைக் கொண்டு விதிபடைத்துப் போதிப்பதே சிறந்த போதனா முறை என்று கல்வியாளர் கள் கருதுகிறார்கள். விதிவிளக்கு முறைப்படி, சமய நோக்குடைய சான்றோர் பெருமக்கள், கண்காணாத கடவுளைக் கொண்டு கண்கண்ட ராமனைக் காட்டினார்கள்.

கம்பனோ, விதிவரு முறைப்படி கண்கண்ட ராமனைக் காட்டி கண்காணாத கடவுளை உணர்த்துகிறான்.

அறிவினுக்கு அறிவு

பாலகாண்டக் கடவுள் வாழ்த்தில் பரம்பொருளின் செயற்கரிய செயல்திறனைக் காட்டிய கம்பன், அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்தில் அப்பொருள் தரித்த வேடத்தின் அடையாளம் காட்டுகிறான். கம்பன் பாடப் புகுந்த கதைக்குத் தலைவன் இராமன். இராமனோ திருமாலின் அவதாரம். திருமாலோ, பரம்பொருளின் கூறு; ஆகவே, மனித ராமனுக்குள்ளே கடவுள் தத்துவம் இருந்து இயக்கு வதைக் கண்டான் கம்பன். கால் நிலம் தோய நின்று கட்புலனுக்கு உற்ற தெய்வமாகக் கண்ட இராமனிடத்தில், ஆதி நாதனை-அறிவினுக்கு அறிவாக விளங்கும் ஆண்டவனை-அவன் தந்த மெய்யறிவினால், கம்பன் அறிந்து கொள்ளு கிறான்.

நாம் ஒரு நூலை எடுத்துப் படிக்கும்போது, எழுத்துகள் தெளிவாகத் தெரியவில்லையென்றால் கண்ணாடியணிந்து படிக்கிறோம். கண்ணாடியணிந்ததும் முன்பு தெளிவாகத் தெரியாத அதே எழுத்துக்கள் அதே கண்களுக்குத் தெளிவாகிவிடுகின்றன. இப்போது, கண்களுக்குக் கண்ணாடி கருவியாகிவிடுகிறது. இதுபோன்று, உலகத்துக் காட்சிகள் அனைத்தையும் கண்களால் கண்டு அறிவினால் அறிகிறோம். இப்போது, கண்கள் அறிவுக்குக் கருவியாகி விடுகின்றன. இதுபோன்று, அறிவினால் அறிந்ததன் உண்மை நிலையை உணரத் தலைப்படும்போது, உண்மையறிவுக்கு அறிவு கருவியாகிவிடுகிறது. கண்ணாடியைக் கருவியாக எப்படி நம்முடைய கண்கள் பயன்படுத்து கின்றனவோ, அப்படியே கண்களைக் கருவியாக நம்முடைய அறிவு பயன்படுத்துகிறது. கண்களைக் கருவியாக எப்படி நம்முடைய அறிவு பயன்படுத்துகிறதோ, அப்படியே அறிவைக் கருவியாக நம்முடைய மெய்யறிவு பயன்படுத்து கிறது.

மெய்யறிவே அறிவு. மற்றையது ஆணவ அறிவு, ஆணவ அறிவு அறிவல்ல. அறிவினுக்கு அறிவே கடவுள். அதுவே, பேரறிவு. சராசரி மனிதனுக்குள்ளது ஆணவ அறிவு; ஞானிகளுக்குள்ளது மெய்யறிவு, அதுவே மெய் ஞானம். கண்டு மகிழ உதவுவது அறிவு. உணர்ந்து மகிழ உதவுவது மெய்யறிவு. அந்த மெய்யறிவுதான் கடவுளோடு கலப்பது. கடவுளின் இயக்கமாகிய இராமனைக் கண்ட கம்பன், தன் மெய்யறிவினால் இராமன் வழியே கடவுளின் உண்மை நிலையை உணர்ந்து கொண்டான்.

**ஆதிநாதர், எம் அறிவினுக்கு அறிவு.**

கடவுளின் உண்மைத் தன்மையை அறிவது மிகமிகக் கடினம்தான். மரம் என்றும், மனிதன் என்றும், மலை என்றும் எத்தனையோ உருவங்களோடு பல பொருள் களைப் பார்க்கிறோம். பல பொருள்களும் பல்வேறு உணர்ச்சித் தன்மைகளைப் பெற்றிருக்கின்றன. எண்ணுக் கடங்காத பொருள்களெல்லாம் எண்ணிறந்த உணர்ச்சி பேதங்களைக் கொண்டு விளங்குகின்றன. எண்ணிக்கை யற்ற எல்லாப் பொருள்களும் பேதமற்ற கடவுளின் அம்சங்களேயாகும். கடலில் எழுகின்ற பேரலைகளும் சிற்றலைகளும் கடலை விட்டுப் பிரிவதில்லை. அதுபோலவே எண்ணிக்கையற்ற எல்லா உருவங்களும் உணர்ச்சிகளும் கடவுள் தத்துவத்தினின்று பிரிவதில்லை. இப்படிப் பேதித்தும் பேதியாமலும் நிற்கும் கடவுள் தத்துவத்தை அறிவது மிகமிகக் கடினம்தான்.

பேதியாது நிமிர் பேதஉருவம் பிறழ்கிலா
ஓதிஓதி உணரும்தொறும் உணர்ச்சி உதவும்
வேதம், வேதியர் விரிஞ்சன் முதலார் தெரிகிலா
ஆதிதேவர் அவர்தம் அறிவினுக்கு அறிவு அரோ!

அறிதற்கரிய கடவுள் தததுவத்தைப் பற்றி வேதங்கள் விவரிக்கின்றன. அந்த விவரிப்பு விரிவும் ஆழமும் உடைய

தாய் இருக்கின்றது. அதன் காரணமாக ஆராயும் போதெல்லாம் புதிய புதிய உணர்ச்சிகள் தோன்றுகின்றன. வேதங்களை நாமே ஓதியறிவதைவிட, ஓதுவிக்கும் வேதியர்களைக் கொண்டு அறிய முயன்றாலும் விரிந்து கொண்டே போகிறது. பிரமன் முதலிய தத்துவ ஞானி களாலும் அறிய முடியாத அந்தப் பரம்பொருளைத் தன் மெய்யறிவினால் அறிந்து கொண்டான் கம்பன். ஊனக்கண் களால் காண்டற்கரிய ஆதிநாதனை ஞானக்கண்களால் உணர்ந்து கொண்டான் அவன். மற்றவர்களால் அறிதற் கரிய பரம்பொருளாக விளங்கும் ஆதிநாதனை, அவன் தந்த மெய்யறிவினால் உணர்ந்து கொண்ட கம்பன், 'நான் அறிந்து கொண்டேன்' என்று மார்பு தட்டி மகிழ்ச்சிக் கூத்தாடுகிறான்.

ஆர்க்கிமிடீஸ் என்ற கிரேக்க நாட்டு விஞ்ஞானி, ஒரு பொருளின் அடர்த்தி எண்ணை அறிவதற்குரிய வழியினைத் தன் அறிவினால் கண்டு பிடித்தபோது ஏற்பட்ட எல்லை யில்லா மகிழ்ச்சியினைப் போன்று, கம்பன் தன் ஞானக் கண்ணால் அறிவுக்கு அறிவாக விளங்கும் ஆண்டவனை உணர்ந்து கொண்டபோது மகிழ்ச்சியால் துள்ளுகிறான். அதன் காரணமாக "ஆதிதேவர் எம் அறிவினுக்கு அறிவு, எம் அறிவினுக்கு அறிவு" என்று துள்ளித் துள்ளிக் கூத்தாடுவதைக் காணுகிறோம். சித்தமிசைக் குடிகொண்ட அறிவான தெய்வத்தை, அத்தெய்வம் அருளிய அறிவினால் கண்டுணர்ந்த கம்பன் நம் முடைய அறிவையும் தூண்டிச் சிந்திக்கச் செய்கிறான். யாம் பெற்றபேறு பெறுக இவ்வையகம் என்று வாழ்ந்த முன்னோர்கள் வரிசையிலே வாழையடி வாழையாக வந்தவன்தானே கம்பன்! மும்மூர்த்திகளில் ஒருவனாகிய திருமாலையே முழுமுதற் கடவுள் என்று கொள்ளாத கம்பன், திருமாலின் அவதாரமாகிய இராமனையே முழு முதற் கடவுள் என்று நம்பும் நம்மைத் தெளிவித்துத் தான் கண்ட கடவுளின் உண்மையினை உணர்த்த, கிட்கிந்தா காண்டத்துக்கு அழைக்கிறான். செல்வோம்.

**ஒன்றிலே மூன்று**

உலகில் எத்தனையோ அற்புத சக்திகளைக் கண் கூடாகக் காண்கிறோம். மீன் சினையினும் நுண்ணிய வித்திலிருந்து பெரிய ஆலமரம் உண்டாகிறது. பெரிய ஆல மரம் சின்னஞ்சிறு விதைக்குள்ளே அடங்கியிருப்பது அற்பு தந்தான். ஆலமரம் போன்று பல தாவரங்கள் நுண்ணிய விதைக்குள்ளிருந்து வெளிப்பட்டு, தங்களுக்கான உணவை ஆக்கிக்கொண்டு, அவற்றிற்குரிய காலம்வரை உயிர் வாழ்வ தும் அதிசயம்தான். அவ்வாறு உயிர்வாழும் ஓரறிவுயிர்கள் தங்களுக்குரிய கால எல்லை முடிந்தவுடன் மடிந்து போவதும் அற்புதந்தான். குறிஞ்சி போன்ற தாவரங்கள் பன்னிரண்டு ஆண்டுக்கொரு முறை ஒன்றாகத் தோன்றி, ஒன்றாக வாழ்ந்து ஒத்துப்பேசி ஒன்றாக மடிவது போன்று மடிந்து விடுகின்றன. இது, மிக மிக அதிசயந்தான்!

ஓரறிவுயிரிலிருந்து ஆறறிவுயிர் வரை அத்தனை உயிர் களும் தோன்றுகின்றன; வாழ்கின்றன; மடிகின்றன. இப்படியே மூன்று தத்துவங்களும் இடையறாது நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. இவைகளை முத்தொழில்கள் என்று சொல்லலாம். ஒவ்வொரு தொழிலுக்கும் கர்த்தா வாக ஒவ்வொரு தெய்வம் உண்டென்று கருதத் தோன்று கிறது. ‘படைக்கும் கடவுள்’ என்றும் ‘காக்கும் கடவுள்’ எனறும், ‘அழிக்கும் கட்வுள்’ என்றும் முப்பெருங்கடவுளர் உண்டென்று கருதுகிறோம். அந்தத் தேவர்கள் மூவருக்கும் அயன், அரி, அரன் என்று பெயர் சூட்டி அழைக்கிறோம். அந்தத் தேவதைகளை வெண்மை, கருமை, செம்மை நிறங்களையுடையனவாக நம்புகிறோம். நிறங்களுக்கேற்ப சாத்துவிகம், தாமசம், இராசசம் என்ற மூன்று குணங் களையும் உருவாக்குகிறோம். மூன்றாகி நின்றதன் பயனாகத் தோன்றும் எல்லாமும் ஒன்றிலிருந்து தோன்றின என்பதே உண்மை.

ஒன்றுமில்லாத சூனியத்திலிருந்து ஒன்றும் உண்டாவதில்லை. ஆதியில் கண்ணுக்குத் தோன்றாத ஒன்றிலிருந்து தான் எல்லாமும் தோன்றியிருக்கவேண்டும். அந்த ஒன்றே கடவுள். கண்களுக்குத் தோன்றாத கடவுளை நாம் எப்படி உண்டென்று நம்புவது? கண்களுக்குத் தோன்றாத அந்தக் கடவுள் தத்துவத்தினை கண்களுக்குத் தோன்றும் எல்லாப் பொருள்களும் காட்டி நிற்கின்றன. கண்களுக்குத் தோன்றாத ஒரு கடவுளின் மூன்று தொழில்களுக்கும் கண்களுக்குத் தோன்றுகின்ற அற்புதசக்திகள் அனைத்தும் சாட்சியம் சொல்வது போல் விளங்குகின்றன. சாட்சியங்களைக் கொண்டே உண்மையை உணர்ந்து நம்பவேண்டும். சாட்சியத்துக்கேற்ற உருவம் படைத்தவன்தான் கடவுள். நெருப்பில்லாமல் புகை பிறக்காது. நெருப்பைக் காணாமலேயே புகை நடுவினில் தீ இருப்பதைப் புரிந்து கொள்ளுகிறோமல்லவா? குயவன் வனையாமல் குடம் தோன்ற முடியுமா? குடத்தைக் கண்டு, வனைந்த குயவன் உள்ளதை நம்புவதுபோல், நம்முடைய அறிவுக்கு அகப்படாதவனாக, உணர்வுக்கு அப்பால் தாண்டி நிற்கும் பரம்பொருளைச் சாட்சியங்களைக் கொண்டே உணரவேண்டும்.

> ''மூன்றுஉரு எனத்தொழில் மும்மை ஆனவும்,
> தோன்றுஉரு எவையும்அம் முதலைச் சொல்லுதற்கு
> ஏன்றுஉரு அமைந்தவும் இயங்க நின்றவும்
> சான்றுஉரு வாயுளன் உணர்வு தாயினான்.''

**மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலம்**

கண்ணுக்குத் தோன்றும் எல்லாப் பொருள்களிலும் கலந்து நிற்கும் கண்ணுக்குத் தோன்றாத மூலப்பொருளாகிய முதலை மறந்து. ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று நம்புவது, அவலை நினைத்து உமியை மெல்லுவது போன்ற செயலாகும். ஒன்று பலவாகத் தெரிந்தால், நம்முடைய பார்வையில் பழுதென்று பொருள். அறிவுக் கண்ணாடியணிந்து பார்த்தால், பலவாகக் கலங்கித் தோன்றும்

காட்சிகள், ஒன்றாகித் தோன்றி உண்மையை உணர்த்தி விடும். இந்த உண்மையை உணர்த்தவே கிட்கிந்தா காண்டக் கடவுள் வாழ்த்துப் பாடலைப் பயன்படுத்துகிறான் கம்பன். இந்த வாழ்த்துப் பாடலில்:-

அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு

என்ற குறட்பாவின் மாட்சியை உணர்ந்துஉணர்த்துகிறான். எழுத்துகளெல்லாம் அகரத்தை முதலாக உடையன. அவை போன்று உலகத்துக் காட்சிகளனைத்தும் முழுமுதற் கடவுளை முதன்மையாக உடையன. எந்த எழுத்தையும் வாயைத் திறக்காமல் உச்சரிக்க முடியாது. எழுத்துக்களை ஒலிக்க வாயைத் திறந்ததும், நம்மையறியாமலேயே அகரம் பிறந்து விடுகிறது. "அ ஆ அங்காப்புடைய" என்பது நன்னூல் சூத்திரம். அதுபோல் உலகத்துக் காட்சிகள் அனைத்திலும் நமக்குத் தெரியாமலேயே பரம்பொருள் இருக்கிறது. இந்தஉண்மையை, ஆய்ந்தஅறிவின் அறிவால்அறிந்து, ஒன்றாகி மூலத்து உருவம் பலவாகி நின்ற குன்றாத ஞானக் கொழுந்தை-காண்பார்க்கும் காணப்படுபொருட்கும் கண்ணாகிநின்ற கடவுளை-மூவர்க்கும் முதல்வராய மூர்த்தியை-மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலத்தை-மூலமே இல்லாத முதல்வனைக் காட்டுகிறான் கம்பன்.

உலகத்துப் பொருள்கள் அனைத்தையும் உடலாகக் கொண்டவன்தான் பரம்பொருள். பரம்பொருள் என்ற அடித்தளத்திலிருந்து தான் பஞ்சபூதங்களும் அவற்றின் கூட்டாய் விளைந்த எல்லாப் பொருள்களும் தோன்றின. உலகப் பொருள்களுக்கு உயிராக நின்று இயக்கும் மூலப் பரம்பொருளை மறந்து, பஞ்சபூதங்களையும் அவற்றின் விளைவாய் விளைந்த பொருள்களையுமே நாம் கடவுளாகக் கொண்டு மயங்குகிறோம். அந்த வகையில் தான் இராமன் என்ற மானிடனையும் கடவுளாகக் கருதுகிறோம்.

சூரியனால் தோன்றிய மேகம் சூரியனை மறைக்கிறது.

இராமனிடம் கடவுள் தத்துவம் இருக்கிறது. ஆனால், இராமனையே கடவுளாகக் கண்டால், பரம்பொருளின் உண்மை நம் ஆணவ அறிவுக்குப் புலப்படுவதில்லை. பரம்பொருளின் உண்மையை நம்முடைய மெய்யறிவினால் உணர்ந்து கொண்டால் தெய்வராமன் மானுடராமனாக மாறிவிடுகிறான். இராமன் தெய்வமா? மனிதனா? என்ற மயக்க நிலை நம்மை மருட்டிக் கொண்டேயிருக்கிறது.

ஒரு சிற்பி மரத்தினால் ஒரு யானை உருவை அமைத்தான். அது உண்மையான யானை போன்றிருந்தது. அதனைக் கண்டவர்கள் மரம் என்பதனை மறந்து யானையென்றே கருதினர். அதுமரம் என்பதை உணர்த்திய பிறகு, கண்டவர்கள் கண்களுக்கு யானையென்ற உணர்வு மறைந்து, மரமாகத் தோற்றமளித்தது. அதுபோன்று, மனிதராமனைக் கண்டால் தெய்வராமனைக் காணோம்; தெய்வராமனைக் கண்டால் மனிதராமனைக் காணோம். இந்த ஒப்புயர்வற்ற உண்மையை முன்னரே திருமூலர் நமக்குச் சொல்லிச் சென்றுள்ளார்.

''மரத்தில் மறைந்தது மாமத யானை
மரத்தை மறைத்தது மாமத யானை
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்''

திருமூலரின் திருமந்திரக் கருத்தை உள்ளத்தில் வாங்கிக் கொண்ட கவிச்சக்கரவர்த்தி சுந்தர காண்டக் கடவுள் வாழ்த்தில் அதனைப் பிரதிபலிக்கிறான்.

**கடவுள் இராமனா? பரம்பொருளா?**

கம்பன், சுந்தரகாண்டம் பாடத் தொடங்கும் போது வழிபடு கடவுளைப் பாடி வணங்க நினைக்கிறான்.

அப்போது வான்மீகத்தின் வழியே இராமன் வந்து 'என்னைப் பாடு' என்று எதிரே நிற்கிறான்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"

என்ற வள்ளுவர் வாக்கிற்கு இலக்கணமாகக் கம்பன், நான்கு மறைகளின் தீர்ப்பை மெய்யுணர்வினால் கண்டுணர்கிறான். அவனை மருட்டிய அறிவு மயக்கத்திற்கு அற்புதமான உவமையைக் கையாண்டு பாடலைத் தொடங்குகிறான்.

"அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவெனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
வேறுபாடு உற்ற வீக்கம்
கலங்குவது எவரைக் கண்டால்
அவரன்றே கைவில் ஏந்தி
இலங்கையில் பொருதார் என்பர்
மறைகளுக்கு இறுதி ஆவார்."

**ஒன்றாகக் காண்பதே காட்சி**

மேட்டு நிலத்தில் பெய்த மழைநீர் கலங்களாக ஓடிவந்து பள்ளப்பகுதியில் குட்டையாக நிற்கிறது. கலங்கலாக நின்ற குட்டைநீர், சில நாட்களில் பளிங்குபோல் தெளிந்து விடுகிறது. தெளிந்த நீருக்கடியில், மண்வண்டல் பல வடிவங்களாகப் படிந்து நிற்கிறது. தண்ணீர் மட்டத்தின் மேல் வேகமான காற்று மாறிமாறி வீசியதால் நீரின் சலனத்திற்கேற்பப் பல வடிவங்கள் அமைந்து விடுகின்றன. அத்தனை வடிவங்களும் மிருதுவான மண்குழம்பால் ஆனவையே. சதுரமாகவும் வட்டமாகவும் முக்கோணக் கூம்பாகவும் இயற்கையாகப் படிந்து, பல வடிவங்களாகப் படிந்த எழிலோவியத்தைப் படிகம் போன்று தெளிந்த நீரின் வழியே கண்டு ரசித்துக் கொண்டிருக்கிறோம். அந்த

நேரத்தில் மோட்டெருமை ஒன்று ஓடிவந்து, தண்ணீரில் பாய்ந்து விழுந்து குழப்பி விட்டது. இந்தக் காட்சியை உள்ளத்திலிருத்திக் கொண்டு பஞ்சபூதச் செயல்களைச் சிந்திப்போம்.

நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களும் எத்தனையோ வேறுபாடுகளோடு விளங்குகின்றன. சில கண்ணுக்குத் தோன்றுகின்றன; சில கண்ணுக்குத் தோன்றாமல் இருக்கின்றன. சில உருவமுடையவை; சில அருவமானவை. சில மென்மையானவை; சில கடினமானவை. இப்படியே பல வேறுபாடுகளோடு விளங்கும் பூதங்களுக்குள் எண்ணிக்கையற்ற பிரிவுகள் உள்ளன. எத்தனை பிரிவுகள் இருந்தாலும் அத்தனையும் எங்குமாய் எல்லாமாயுள்ள பரம்பொருளின் பேத உருவங்கள்தான். பூதங்களின் பிரிவுகளின் விரிவுகளால் எண்ணற்று விளங்கும் எல்லாமும், பரம்பொருளோடு ஒன்றிப் பார்க்கும் ஞானிகளுக்கு ஒன்றாகவே தோன்றும். ஆண்டவன் சன்னதியில் அனைத்து வேறுபாடுகளும், எருமையால் கலங்கி அழிந்த குட்டைநீருள் படிந்த படிவங்கள் போல ஒன்றாகிவிடும்.

ஒன்றாகக் காண்பதே உயர்வு. தண்ணீர்த் தெளிவினால் அடிமட்டத்தில் படிந்து நின்ற பலவகைப் படிவின் வடிவங்கள் அனைத்தும், மீண்டும் தண்ணீரோடு கரைந்து கலந்து விட்டது போல், பரம்பொருளின் பகுதிகளாக உருவெடுத்த எண்ணற்ற தோற்றங்கள் அனைத்தும் மீண்டும் பரம்பொருளோடு கரைந்து விடுகின்றன.

### பக்தி மயக்கத்தின் விளைவு

பரம்பொருளின் கூறுகளாக விளைந்த பஞ்ச பூதங்களும், பூதங்களின் விரிவாகப் பேதப்பட்டு விளங்கும் எண்ணற்ற பொருள்களும் இறுதியில் பரம்பொருளோடு கலந்து விடுவது உண்மை. இந்த உண்மையை நன்கு

உணர்ந்த தத்துவ ஞானிகள்கூட, கடவுள் தத்துவத்தினின்று கிளைத்த திருமாலையும், திருமாலின் அவதாரமாகிய இராமனையும் கடவுள் என்று போற்றுகிறார்கள். இதனைச் சாமானிய மக்கள் சொன்னாலும் தவறில்லை; வேதங்களின் முடிவை நன்கு உணர்ந்த ஞானிகளே பக்தி மயக்கத்தால் இராமனே கடவுள் என்று கூறிவிடுகிறார்கள். கடவுள் தத்துவம் எல்லாப் பொருள்களிலும் கலந்திருப்பது போல், இராமனிடத்திலும் அமைந்திருக்கிறது என்ற ஒரே காரணத்துக்காகக் கடவுளின் முழுமையை-பூரணத்தைக் காணத் தவறிவிடுகிறார்கள். ஆகையால், கைவில்லேந்தி இலங்கையில் போர் புரிந்த இராமன்தான் கடவுள் என்று கூறிவிடுகிறார்கள். இதனை. 'இலங்கையில் பொருதார் என்பர் மறைகளுக்கு இறுதியாவார்' என்ற சொற்றொடரால் குறிக்கிறான் கம்பன். அயோத்தியாகாண்டக் கடவுள் வாழ்த்தில் வந்த 'என்ப' என்ற சொல்லுக்கும், சுந்தர காண்டக் கடவுள் வாழ்த்தில் வரும் 'என்பர்' என்ற சொல்லுக்கும் பொருள் ஒன்றே.

நான்கு மறைகளின் முடிவான பொருளைக் கண்ட ஞானிகளே, பக்தி மயக்கத்தால் யானையைக் கண்ட குருடர்கள் போல், மூலத்தை மறந்து கிளைகளையும் மிலாறுகளையும் மரம் என்று சொல்லுகிறார்களே என்று வேதனைப்படுகிறான் கம்பன். வேதனையின் வெளிப் பாடாக அற்புதமான உவமையைக் கையாண்டு பாடலைத் தொடங்கினான்.

**மாலை வேளையில் மாலை மயக்கம்:**

மாலை மயங்கி மறைந்த இருட்டு நேரத்தில் ஒருவன் நடந்து வருகிறான். வந்தவன் எதிரே ஒரு பாம்பு கிடப்பதைக் கண்டான். அந்தப் பாம்போ தலையை நீட்டுவதும் வாலை ஆட்டுவதுமாக அப்பால் இப்பால் நகராமல் கிடந்தது. பாம்பைக் கண்டால் படையும்

நடுங்குமல்லவா? பாம்புக்குப் பயந்து, வந்தவன் நின்று விட்டான். அந்த வேளையில் அந்த வழியே வேறொருவன் வந்தான். முன் வந்தவன் பின் வந்தவனுக்குப் பாம்பு கிடப்பதைக் காட்டி நிறுத்தி விட்டான் பாம்பினைக் கண்டு பின்வந்தவனும் நின்றுவிட்டான். சற்று நேரம் திகைத்து நின்றபின், பின்வந்தவன் கையிலிருந்த மின்விளக்கின் வெளிச்சத்தைப் பாம்பின் மேல் பாய்ச்சினான். அங்கே, காய்ந்து கருகிச் சருகாய்ப் போன பூமாலையொன்று அப்படியும் இப்படியும் காற்றில் அசைந்து கொண்டு கிடந்தது முந்தி வந்தவனுக்கு வியப்பாய்விட்டது. பாம்பு இல்லாமலிருந்தும், காய்ந்துபோன மாலையை எப்படித் தான் பாம்பென்று நம்பினோம் என்று காரணம் சொல்ல முடியவில்லை அவனுக்கு. இப்படித்தான் எல்லாப் பொருள் களையும் ஒன்றை வேறொன்றாகக் கருதி மயங்குகிறோம்.

**ஒன்று-பல;அன்று-ஆம்;உண்டு-இல்லை**

தெளிந்த அறிவுடைய மெய்ஞானிகளுக்கே கடவுள் தத்துவத்தை உணர முடியாத குழப்பநிலை ஏற்படுகிற தென்றால் நம்முடைய நிலை எம்மாத்திரம்? கடவுளைப் பற்றிய தெளிவான கொள்கை கம்பனுக்கிருந்தும், கடவுளின் உண்மைத் தத்துவத்தை உணரமுடியாமல் அலைமோது கின்ற உலகினருக்கு எப்படி உணர்த்துவது என்று உணரமுடியாமல் தடுமாறுகிறான் கம்பன். தெளிவில்லாத வர்களைத் தெளிவிக்க அவன் திண்டாடுகின்ற தன்மை, யுத்தகாண்டக் கடவுள் வாழ்த்துப் பாடலில் தெளிவாகத் தெரிகிறது. யுத்த காண்டக் கடவுள்வாழ்த்தின் மூலம், கம்பன் தன்னுடைய இறுதியான கடவுட் கொள்கையைப் பிழிந்து கொட்டி விடுகிறான். இதோ பாடல்-

''ஒன்றே என்னில் ஒன்றே யாம்,
பலஎன்று உரைக்கில் பலவே யாம்,
அன்றே என்றில் அன்றே யாம்,
ஆம்என்று உரைக்கில் ஆமே யாம்,

உண்டே என்னில் உண்டே யாம்,
இலதென்று உரைக்கில் இலதே யாம்,
நன்றே நம்பி குடிவாழ்க் கை!
நமக்கிங்கு என்னோ பிழைப்பு அம்மா''

உலகத்துப் பொருள்கள் அனைத்திலும் ஊடுருவி நின்று எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ஒருவனே இறைவன். இதுதான் உண்மை. ஆனால், பலவகைப்பட்ட தனி இயக்கங்கள் போலப் பலவகை வடிவங்களில் காணப்படுவதால் அந்தப் பரம்பொருளைப் பல என்று சொன்னாலும் பழுதில்லை. ஆகையால், ''ஒன்றே என்னில் ஒன்றேயாம்; பல என்று உரைக்கில் பலவேயாம்'' என்றான் கம்பன்.

எந்த ஒரு தனித்த பொருளையும் பார்த்து, இது கடவுளா? என்று கேட்டால், 'எந்தப் பொருளையும் போன்றதன்று பரம்பொருள்' என்று சொல்லுவதுதான் பொருத்தம். ஆனாலும் உலகெங்கும் நிறைந்த பரம் பொருளின் ஒரு கூறுதானே அந்தப்பொருள்! கடவுள் தத்துவம் அந்தப் பொருளில் இருக்கிறதில்லையா? என்று வினவினால், 'ஆம்' என்று விடைகூற வேண்டிவரும். ஆகையால்தான், 'அன்றே என்னில் அன்றே யாம்; ஆம், என்று உரைக்கில் ஆமேயாம்'' என்றான் கம்பன்.

கடவுள் தத்துவம் எங்கும் எல்லாவற்றிலும் நிறைந்து அனைத்தையும் இயக்குவதாய் இருப்பதால், கடவுளை உண்டு என்று சொல்வதில் உண்மை உண்டு. இருப்பினும், எண்ணிப்பார்க்க இயலாத அநாதி காலத்திலிருந்து இன்று வரை ஒரே தன்மையாய் இடையறாது இயங்கி வரும் தத்துவத்தைப் புலன்களுக்கு எட்டுகின்ற தனி வடிவமில்லாத காரணத்தால் 'இயற்கை' என்று எளிதாகக் கூறி, இயற்கை நிகழ்ச்சிகளில் இறைவன் செயலுக்கும் இடமில்லை; இறைவனும் இல்லை என்று சாதிப்பார் உளர். ஆகையால், ''உண்டே என்னில் உண்டேயாம்; இலது என்று உரைக்கில் இலதே யாம்'' என்றான் கம்பன்.

நாம் எவரைத் தலைவர் என்று கருதி அவருடைய திருவடிகளைப் பற்றுகிறோமோ, அந்தத் தலைவரின் நிலையே ஒன்று என்றும், பல என்றும், அன்று என்றும், ஆம் என்றும், உண்டு என்றும், இலது என்றும், பல என்றும் முரண்படக் கருதும் இந்த அழகில் இருக்கிறதென்றால், புல்லறிவினராகிய நாம் எம்மாத்திரம்? ஆண்டவன் பாடு இப்பாடானால், அடியார்பாடு எப்பாடாகும்? ஆகையால் அவர் திருவடிகளைப் பற்றி அவர் அருளால் வாழலாமே யன்றி ஆராய்வதில் என்ன பயன்? எல்லாம் அவர் செயலே யாதலால், "நன்றே நம்பி குடிவாழ்க்கை நமக்கு இங்கு என்னோ பிழைப்பு அம்மா!" என்று முடித்து விடுகிறான் கம்பன். நகைச்சுவையோடு முரண்பாட்டுச் சுவையும் சொட்டச் சொட்டக் கம்பன் பாடும் யுத்த காண்டக் கடவுள் வாழ்த்தின் கடைசி அடியில், நகைச்சுவை உச்ச கட்டத்தை அடைந்துவிடுகிறது.

**கம்பன் உள்ளத்தில் உண்மை ஒளி**

இராமகாதையின் கடைசிக் காண்டமாகிய யுத்த காண்டத்தின் கடவுள் வாழ்த்துப் பாடலில் கம்பனுடைய உள்ளத்தின் உண்மை ஒளி தெளிவாகப் பளிச்சிடுகின்றது.

ஒன்றே என்னில் ஒன்றே யாம்
அன்றே என்னில் அன்றே யாம்
உண்டே என்னில் உண்டே யாம்

என்ற சொற்றொடர்களையும்,

பலஎன்று உரைக்கில் பலவேயாம்
ஆம்என்று உரைக்கில் ஆமேயாம்
இலதுஎன்று உரைக்கில் இலதேயாம்

என்ற சொற்றொடர்களையும் சொல்லிப்பார்த்தால் அவனுடைய உள்ளத்தின் உண்மை உணர்வை உணர முடியும். 'என்னில்' என்ற சொல்லில் உள்ள அழுத்தமும்,

வேகமும், உறுதியும், சிறப்பும், 'உரைக்கில்' என்ற சொல்லில் காணமுடியவில்லை. மேலோட்டமும், வேக மின்மையும், போலித்தன்மையும், சிறப்பின்மையும்தான் 'உரைக்கில்' என்ற சொல்லில் காணமுடிகிறது. கடவுள் ஒன்று என்று சொல்லுவதும், கண்ட கண்ட பொருள்களை யெல்லாம் கடவுளன்று என்று சொல்லுவதும், கடவுள் உண்டு என்று சொல்லுவதும்தான் கம்பனுடைய உள்ளக் கிடைக்கை என்பது தெளிவாகத் தெரிகிறது.

**எங்கும் கடல்; எங்கும் கடவுள்:**

கங்கு கரை காணாத பெருங்கடல் போன்றது பரம் பொருளாகிய கட வுள். பெருங்கடல், கடல் என்றும்,விரிகுடா என்றும், வளைகுடா என்றும், ஜலசந்தி என்றும், கால் வாய் என்றும், பிரிந்து பலவகையாகக் காட்சியளிக்கிறது. எத்தனை வகையாகக் காட்சி தந்தாலும், அத்தனையும் கடலோடு கலப்பவைதாம். அதே போன்று கடவுள் தத்து வத்தினின்று கிளைத்துப் பிரிந்து சைவம் என்றும், வைணவம் என்றும், பௌத்தம் என்றும்,சமணம் என்றும், இஸ்லாமியம் என்றும், கிறித்தவம் என்றும் பொங்குபல சமயமெனும் நதிகள் காணப்பட்டாலும் அவையனைத்தும் கடவுள் என்ற கங்குகரை காணாத கடலோடு கலப்பனதாம். கடல்நீர் ஆவியாகி வான வீதியிலே மேகமாகச் சென்று உலாவந்து, மண்ணிலே மழையாகப்பெய்து, தண்ணீராகித் தரையிலே ஊறி உயிர்க்குலங்கள் எத்தனையோ அத்தனையி லும் நிறைந்து நிற்கிறது. மண்ணிலும், மண்ணில் முளைத்த புல்லிலும், ஏன், நம்முடைய உடலிலும் கூட கடல் பெருகியிருக்கிறது. என்றாலும், ஒவ்வொரு பொருளும் தன்னைத்தானே கடல் என்று கருதிக் கொள்ளுதல் பொருந்தாது. அதுபோன்று கடவுள் தத்துவம் எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருக்கிறதென்றாலும், ஒவ்வொரு பொருளையும் கடவுள் என்று கணக்கிடுதலும் கூடாது.

அநாதி காலந்தொட்டு இன்றுவரை, எங்கும் எல்லா வற்றிலும் ஊடுருவி நின்று திருவிளையாடல் புரியும் கடவுள் தத்துவத்தின் உண்மை நிலையை உணர்த்துவதற்கு, அரிய பெரிய சமய தத்துவங்களோடு கம்பன் எப்படி விளையாடுகிறான் என்பதைக் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் நமக்குக் காட்டுகின்றன. யுத்தகாண்டக் கடவுள் வாழ்த்தில் கடவுள் ஒன்றென்றிரு! கடவுள் பல அன்றன்றிரு; தெய்வம் உண்டு என்றிரு! என்ற உண்மையினை உணர்த்துகிறான் கம்பன். ஒன்றான கடவுளைப் பலவாகப் போற்றாதே! கண்டவற்றையெல்லாம் கடவுள் என்று கருதாதே! கடவுள் உண்டு என்று உணர்! இல்லை என்று சொல்லாதே! என்று அறிவுறுத்துகிறான் அவன்.

உண்மையும போலியும்

போலித் தத்துவங்களை நம்பி உண்மைத் தத்துவத்தை இழக்கும் நிலையிலுள்ள மனித சமுதாயத்தை 'ஒன்று-பல; அன்று-ஆம்; உண்டு-இல்லை' என்று முரண்பாட்டுச் சுவையோடு சொல்லி நன்னெறிப்படுத்துகிறான் கம்பன். போலிகள் மலிந்துவிட்ட இந்தப் பொல்லாத உலகத்தில் மக்கள் உண்மையை உணர்ந்து பயன்பெற வேண்டு மென்பதே கம்பனுடைய குறிக்கோள். இந்த உயர்ந்த குறிக்கோளின் காரணமாகக் கம்பன் போலிகளைக் கண்டு ஏமாறாதே! என்று அறிவுறுத்தச் சுந்தரகாண்டக் கடவுள் வாழ்த்தை அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவினைக் காட்டித் தொடங்கினான். பூமாலை உண்மை; அரவுபோலி. அதுபோன்று வேறுபாடற்ற கடவுள் உண்மை; பூதங்களின் பேதங்கள் போலி. அவை போல, பரம்பொருள் உண்மை; இலங்கையில் இராமன் போலி. உண்மை முந்தியது; போலி பிந்தியது. பின்னர்த் தோன்றிய போலி முன்னர்த் தோன்றிய உண்மையை மறைக்கிறது; மருட்டியும் விடுகிறது. பாம்பென்று அடிக்கவும் முடியாமல்

பழுதையென்று விடவும் முடியாமல் திகைத்து நிற்க வேண்டியநிலை நமக்கு ஏற்பட்டு விடுகிறது.

மணமுள்ள ரோஜா மலர்களைக் கொண்டு தொகுத்த மாலையும், வண்ணக் காகிதங்களைக் கத்தரித்துத் தொகுத்த மாலையும் கண்களுக்கு ஒன்றாகவே காட்சியளிக்கின்றன. உண்மை மாலையும் போலிமாலையும் நம்முடைய மதியை மருட்டும்போது மாலையில் வீசும் மணம் உண்மை மாலையைக் காட்டி விடுகிறது. காணும் பொருள்களின் வேறுபாடுகளை அவற்றின் பண்புகளைக் கொண்டு கண்டு பிடித்து விடுகிறோம். காணமுடியாத ஒன்றின் உண்மைத் தன்மையை அவற்றின் இயக்கச் சாட்சியங்களைக் கொண்டு அறிய வேண்டும் என்று கிட்கிந்தா காண்டக் கடவுள் வாழ்த்தில் கூறினான் கம்பன்; படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய இயக்கங்களின் விளைவே சாட்சியங்கள். உலகத்துக் காட்சிகளாகக் கொண்டு இயக்குகின்றவனே கடவுள். நம்முடைய உணர்ச்சிகளுக்கப்பால் விளங்கும் அந்த ஒருவனைக் கண்களால் காண முடியாது என்று சொல்லுகிறது, கிட்கிந்தா காண்டக் கடவுள் வாழ்த்து.

### காணும் பொருளிலெல்லாம் கடவுள்

வேத வேதியர்களாலும், நான்முகனுக்கு நிகரான தத்துவ ஞானிகளாலும் காண முடியாத, ஆதியாகிய கடவுள் தத்துவத்தை நம்முடைய ஆணவ அறிவினால் அறிய முடியாது; மெய்யறிவினால் தான் உணர முடியும் என்று உணர்த்துகிறது, ஆரண்ய காண்டக் கடவுள் வாழ்த்து. காணும் பொருள்களிலெல்லாம் கலந்து நிற்கும் பரம் பொருளின் தத்துவத்தை, மெய்ஞ்ஞானத்தால் உணர வேண்டும் என்பதே கம்பன் கணக்கு. இந்தக் கணக்கின்படி விடை கிடைக்க அயோத்தியா காண்டம் வழிகாட்டுகிறது.

அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்து 'இராமனை எங்கும் நிறைந்த கடவுளாகவே சொல்லுவார்கள்' என்று சொல்லுகிறது. ஒரு தலைவரிடம் செல்வாக்குள்ள வேறொருவரை இவரேதான் தலைவர் என்று சிறப்பித்துக் கூறுவதுபோலக் கடவுளின் தத்துவங்கள் நிறைந்து விளங்கும் இராமபிரானை 'இராமபிரானே கடவுள்' என்று விபரமறிந்தோர் கூறுவார்கள். செல்வாக்குப் பெற்றவரைக் கொண்டு செல்வாக்குள்ள தலைவரை அணுகுவது போன்று கடவுள் தத்துவம் நிறைந்த இராமபிரானைக்கொண்டு கடவுளை அணுகினான் கம்பன். கடவுளின் திருக் கோயிலுக்குள் கம்பனோடு செல்லும் நாம், கருப்ப கிருகத்தை அடைந்துவிட்டோம். கருப்பகிருகம் போன்றது தான் அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்து. அங்கே கடவுளின் கருப்பத்தில் நிலம், நீர், தீ, காற்று ஆகிய நான்கு பூதங்களும், வான் என்ற பூதத்தின் தலைமையில் தங்களைப் படைத்த பரம்பொருளை வாழ்த்தி வணங்கு கின்றன. பிறப்பு வரிசையில் நிற்கும் பஞ்ச பூதங்களின் வரிசையில், பரம்பொருளை யடுத்து நெருங்கி முன்னே நிற்பது, 'வான்' என்ற பூதம்தான். அதனால்தான் கம்பன் அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்தை "வான்நின்று இழிந்து" என்று தொடங்கினான் போலும்!

### வள்ளுவன் வழியில் கம்பன்

வான் மறைந்த தெய்வவள்ளுவன், அதிகார முறைப்படி, கடவுள் வாழ்த்தையடுத்து வான்சிறப்பைப் பாடியதன் சிறப்பை நன்குணர்ந்த கம்பன்; 'உலகம் யாவையும்' என்று பாலகாண்டக் கடவுள் வாழ்த்தைத் தொடங்கி அடுத்து, 'வானின்றிழிந்து' என்று அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்தைத் தொடங்கினான். தமிழுக்குக் கதியாகிய கம்பனும் திருவள்ளுவரும் கடவுள் வாழ்த்தை உலகிற்குப் படைத்து வழங்கினார்கள். திருக்குறளில் கடவுள் வாழ்த்து

அதிகாரத்தையடுத்து வந்த இரண்டாவது அதிகாரமாகிய ‘வான்சிறப்பு’ அதிகாரம் ‘வானின் றுலகம்’ என்று தொடங்கும் குறளால் தொடங்குகிறது. அதேபோன்று இராமகாதையின் இரண்டாவது காண்டத்தின் கடவுள் வாழ்த்து ‘வானின்றிழிந்து’ என்று தொடங்குகிறது. பரம்பொருளின் முதல் படைப்பு ‘வான்’ என்பது வள்ளுவர் கருத்து. கம்பன் கருத்தும் வள்ளுவர் கருத்தே. கடவுட்கொள்கையில் வள்ளுவர் வழியிலேயே கம்பன் செல்கிறான்.

### கடவுள் வழிபாடு

சமயம் கடந்து, மதம் கடந்து நிற்கும் உலகப் பொதுக் கடவுளையே வள்ளுவரும் கம்பனும் வழிபடுகின்றனர். வள்ளுவர் தாம் வழங்கிய முப்பாலின் முதற்பாலில் ‘கடவுள் வாழ்த்து’ என்று ஓர் அதிகாரத்தைப் படைத்துத் தொடங்கினார். கம்பனும் தான் படைத்த காவியத்தை, முதலில் ‘கடவுள் வணக்கம்’ பாடித்தொடங்கினான். பாலகாண்டத்தின் முதலில் வந்த பாயிரத்தில் பாடப்பெற்றதே காவியத்தின் கடவுள் வாழ்த்து. மற்றைய ஐந்து காண்டங்களின் முதலில் அமைந்தவையனைத்தும், முதற் காண்டத்தின் முதலில் அமைந்த கடவுள் வாழ்த்துக்குரிய விளக்கமாகவும் விரிவுரையாகவும் விளங்குகின்றன. எனவே, கம்பன் காவியத்துக்குக் கடவுள் வாழ்த்தாக வந்த பாடல், ‘உலகம் யாவையும்’ என்று தொடங்கும் ஒரே பாடல்தான் மற்றைய கடவுள் வாழ்த்துக்கள், அந்த ஒரு பாடலுக்குரிய வியாக்கியானங்கள் என்று கொள்ளுதல் வேண்டும்.

தனக்குவமையில்லாத தனிப் பரம்பொருளின் தாளினைப் பற்றினால் மனக்கவலையின்றி வாழலாம் என்றார் வள்ளுவப் பெருமான். கம்பனோ, சரணாகதித் தத்துவத்தின் சிறப்பினை எடுத்தோதவந்த இராமகாதையின் கடவுள் வாழ்த்தில், எம்மதத்திற்கும் சம்மதமாய்

விளங்கும் கடவுளின் திருவடிகளையே சிந்தையில் நினைந்து சென்னியால் வணங்குகிறான். எல்லோரையும் வணங்கச் செய்கிறான். நாமும் அந்தப் பரம்பொருளை நினைந்து, நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து, வாழ்த்தி வணங்குவோம். அதுவே, சாதி, சமய மதங்களின் விளைவால் விளையும் சஞ்சலங்களைத் தீர்க்கும் மருந்து.

"உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகுஇலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே."

# தொட்டுப் பாடியதைத் தொடுத்துப் பாடினான்

அமரர் கம்பன் அடிப்பொடியவர்கள், தமிழறிஞர்கள் பலரோடு கூடி ஆராய்ந்து கவிச்சக்கரவர்த்தி கம்பனுடைய காலத்தைக் கணித்தார்கள். கலியாண்டு 3986; சகாப்தம் 807; விசுவாவசு — பங்குனி—4-ஆம் தேதி; (கி. பி. 886 பெப்ருவரி) புதன்கிழமை; துதியை திதி; அத்த நட்சத்திரம் கூடிய நன்னாளில், வெண்ணெய் நல்லூரில் இராமாவதாரத்தை அரங்கேற்றிக் கம்பன் கவிச்சக்கரவர்த்தி ஆனான். இது, கம்பன் அடிப்பொடியவர்களின் கணிப்பு. இந்தக் கணிப்பிலிருந்து, கம்பன், கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டினன் என்று கொள்ள முடிகிறது.

ஒன்பதாம் நூற்றாண்டில் இராமாவதாரத்தைப் பாடிய கவிச்சக்கரவர்த்தி, தற்சிறப்புப் பாயிரத்தில், நூல் வரலாறு பாடுகிறார்.

> ‘‘தேவ பாடையின் இக்கதை செய்தவர்
> மூவ ரானவர் தம்முளும் முந்திய
> நாவினார் உரையின்படி நான்தமிழ்ப்
> பாவினால் இது உணர்த்திய பண்புஅரோ’’

‘வடமொழியில் இராம காதையைச் செய்தவர் மூவராவர். அந்த மூவருள்ளும் முந்திய நாவீறுடைய வான்மீகி

முனிவர் சொல்லிய முறையைத் தழுவித் தமிழ்ப் பாடலால் நான் இதனைப் பாடுகின்றேன்' என்றான் கம்பன். வட மொழியில் இராமகாதை செய்த மூவர்; வான்மீகர், போதா யனர், வசிட்டர் என்றும்; வான்மீகர், வசிட்டர், அகத்தியர் என்றும்; வான்மீகர், வியாசர், போதாயனர் என்றும்; வான்மீகர், பாசகவி, காளிதாசர் என்றும் கூறுவர். எவர் கூற்றிலும் மாறாமல் முன்னே நிற்பவர் வான்மீகர்தாம். 'வான்மீகரின் வடமொழி இராமாயணத்தைத் தமிழிலே வாங்கித் தமிழ்ப் பண்பாட்டையே கெடுத்துவிட்டான் கம்பன்' என்று பலர் பின்னாளில் தன்னை இகழ்ந்து தூற்றி மாசேற்றுவார்கள் என்று முன்கூட்டியே உணர்ந்த கம்பன், 'தெய்வப்புலவர் திருவள்ளுவர் வகுத்த வாழ்விலக்கணத்துக்கு இலக்கியமாக இராம காதையைப் படைத்தேன்' என்று காரணம் கூறுகிறான்.

"வையம் என்னை இகழவும், மாசுஎனக்கு
எய்தவும் இது இயம்புவது யாது? எனில்
பொய்யில் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே"

வான்மீகி பாடிய இராமகாதையை, வள்ளுவன் செய் திருக்குறளுக்கு ஏற்பக் கதைப் போக்கினைத் தேவையான இடங்களில் மாற்றியும், புதிதாகச் சில காட்சிகளைப் படைத்தும் இராமாவதாரமாகப் படைத்தான் கம்பன். இது, கம்பன் தமிழுக்குச் செய்த சிறந்த தொண்டாகும்.

கம்பன் காவியம் தோன்றுவதற்கு முன்னமே தமிழ் கூறு நல்லுலகில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களும் சான்றோர் பெருமக்களும், தங்கள் பாடல்களில் இராமாயணச் செய்தி களைக் கையாண்டிருக்கிறார்கள். அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, பரிபாடல், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய பழந்தமிழ் நூல்களிலும், ஆழ்வார் பாசுரங்களிலும் தேவாரத் திருவாசகங்களிலும், இராமாயணச் செய்திகள் வருகின்றன. கம்பன் காலத்துக்கு முன்னையோர்மொழிந்த

வற்றைத் தான் பொன்னே போல் போற்றிக் காவிய மாகப் படைத்தான் கம்பன். முன்னைய புலவர்கள் துண்டு துண்டாகச் சொல்லிய இராமாயணச் செய்திகளைத் தொகுத்துக் காவியமாக்கினான் கம்பன். கவிப்படைப்புக்கு வழிகாட்டினான் வான்மீகி. வான்மீகிக்கும் இராமாயணம் சொந்தமில்லை; அவன் காலத்துக்கு முன்னமே பாரதம் முழுதும் பரவிக்கிடந்த கதை இது. ஏன்! அண்டைநாடு களிலும் கூட இக்கதை படர்ந்திருந்தது. கணிப்புக்கு எட்டாத காலந்தொட்டு வழங்கி வந்த கதையை வடமொழி யில் முதன் முதலாகப் பாடியவன் தான் வான்மீகி. வான் மீகியைச் சார்ந்து தமிழ்ச் சுவை கனியக் காவியம் பாடிய வன் கம்பன். பிற தமிழ்ப் புலவர்கள் தொடாத கதையை முதன் முதலில் தொட்டுப் பாடவில்லை கம்பன். வழி மொழிந்தே பாடினான்.

"ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி"

என்பது தெய்வப் புலவரின் ஒரு குறட்பா. இப்பா, திருக் குறள் 'நீத்தார் பெருமை' அதிகாரத்தில் வருகிறது. இக்குறட் காட்சியைப் பரிபாடல் பாட்டொன்று ஓவியம் தீட்டிக் காட்டு கின்றது இக்காட்சி செவ்வேள் திருக்கோயில் கொண்ட திருப்பரங்குன்றத்து மலையில், வழுதியுடன் ஏறியோர் கண்ட காட்சிகளுள் ஒன்றாகக் காட்டப் பெறுகின்றது

"இந்திரன், பூசை; இவள், அகலிகை; இவன்
சென்ற கௌதமன்; சினன்உறக் கல்உரு
ஒன்றிய படி இது"

கௌதம முனிவனின் மனைவியாகிய அகலிகையை, இந்திரன் முனிவனுருக் கொண்டு அணைந்தனன். இதனை யறிந்த கௌதமன் இந்திரனையும் அகலிகையையும் சபித் தனன். இந்தக் காட்சி வான்மிகத்தில் முனியுருக் கொண்டு இந்திரன் மீண்டு சென்றதாகப் பாடப் பெற்றுள்ளது.

கம்பனோ, இந்திரன் பூனையுருக் கொண்டு சென்றதாகப் பாடினான். பரிபாடல் வரிகளைக் காணும் போது, இந்திரன் பூனையாய்ச் சென்றதும், அகலிகை கல்லுரு வாய்ச் சபிக்கப் பெற்றதும், கம்பனுக்கு முன் தமிழ்நாட்டில் வழங்கிய பழைய வரலாறுகள் என்பது புலனாகும். இராமாவதாரத்தில் கம்பன் 'அகலிகைப்படலம்' பாடுதற்கு முன்னரே பரிபாடலில் இக்காட்சி பாடப்பெற்றுள்ளது என்பதை நன்கு உணரலாம்.

அடுத்து, அகநானூற்றில் ஒரு காட்சி. களிற்றியானை நிரைப் பகுதியில் உள்ளது. நெய்தல் திணையில், தலை மகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகட்குச் சொல்லிய தாக, மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார் பாடிய பாடல் அது. தலைவனும் தலைவியும் கேண்மை கொண்டிருந்ததைப் பலரும் அறியும்படி ஊர்ப் பெண்டிர் அலர் தூற்றினர். அத்தலைவன் திருமணம் புரிந்து கொள்ள முடிவெடுத்த காரணத்தால், ஊரார் அலர் தூற்றுவது இனி அடங்கிப்போகும். எவ்வாறெனில், சேதுக்கரையில் பெரிய ஆலமரத்தின் கீழ்,இராமன் தன் துணைவர்களோடு மந்திரா லோசனை நடத்திக் கொண்டிருந்தான். அப்போது, மரத்துப் பறவைகள் இரைச்சலிட்டுக் கொண்டிருந்தன. இராமன் தன் ஆணையால் பறவைகள் ஒலிக்காதவாறு அடக்கினான் என்பது இராமாயணச் செய்திகளுள் ஒன்று, இச்செய்தியினை உவமையாக்கி அலர் அவிந்தமையைப் பாடுகின்றது அகநானூறு.

"வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலி அவிந்தன்று இவ்வழுங்கல் ஊரே"

கம்பனுக்கு முன்னரே இராமாயணச் செய்தியை அக நானூறு பாடியுள்ளது என்பதை இந்த எழுபதாம் பாடல் காட்டுகின்றது.

அகநானூறேயன்றிப் புறநானூற்றிலும் இராமாயணச் செய்தி வருகின்றது. பாடாண்டிணை—இயன்மொழித் துறையாக வந்துள்ள இப்பாடல், சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது. யாழ் மீட்டிச் சோழனைப் பாடிய பாணன், ஆபரணங்களைப் பரிசாகப் பெற்ற சிறப்பினை இப்பாடல் கூறுகின்றது. "வஞ்சிப் பண்ணைப் பிழையின்றிப் பாடிய எனக்கு மிகப்பல ஆபரணங்களைச் சோழன் தந் தான். வறுமையிலே வாடிய என் உறவினர் அவற்றைக் கண்டு, எந்த நகையை எங்கே அணிவது என்று அறியாமல், விரலில் அணியும் மோதிரத்தைக் காதிலே அணிந்தார்கள். காதிலே அணியும் குழையை விரலிலே அணிந்தார்கள் இடுப்பில் அணியும் அரைஞாணைக் கழுத்திலே அணிந்தார்கள். கழுத்திலே அணியும் அட்டிகையை இடுப்பிலே அணிந்தார்கள்" என்று நகைகளைப் பெற்ற பாணனது குடும்பத்தாரின் செயல்களை நகைச்சுவையோடு பாடுகிறார் கவிஞர். ஆபரணங்களை அணியத் தெரியாமல் அணியும் காட்சிக்கு அறபுதமான உவமையும் காட்டிப் பாடுகின்றார் ஊன்பொதி பசுங்குடையார். இராமன் மனைவியாகிய சீதையை இராவணன் கவர்ந்து புட்பகத்தேரில் விண்வழியே சென்ற போது, அச்சீதை தன்னுடைய ஆபரணங்களைக் கழற்றி எறிய அவை தரையில் விழுந்தன. விழுந்தவற்றை வனத்தில் வாழும் வானரங்கள் எடுத்து, எதனை எங்கே அணிவது என்று அறியாமல், மரபினை மாற்றி மாற்றி அணிந்ததாகச் சுவை சொட்ட ச் சொட்டப் பாடுகிறார் புலவர் பெருமான்:—

"..............................மிகப்பல
மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே அதுகண்டு
இலம்பாடு உழந்தஎன் இரும்பேர் ஒக்கல்,

விரற்செறி மரபின செவித் தொடக்குநரும்
செவித் தொடர் மரபின விரற்செறிக்குநரும்
அரைக்கு அமைமரபின மிடற்று யாக்குநரும்
மிடற்று அமைமரபின அரைக்கு யாக்குநரும்
கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை,
நிலஞ்சேர் மதர்அணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தாங்கு
அறாஅ அருநகை இனிது பெற்றிகுமே.''

இது, புறநானூற்றின் 378 ஆவது பாடலின் ஒரு பகுதி கம்பனுக்கு முன் இராமாயணக் காட்சி காட்டப்பெற்ற மைக்குச் சாட்சி இப்பாடல்.

மேலும், கலித்தொகை என்ற நூலிலும் இராமாயணக் கதை பேசப்பெறுகிறது. கலித்தொகையில் குறிஞ்சிக்கலி, கபிலரால் பாடப்பெற்றது. குறிஞ்சிக்கலியில், தோழிகூற்றாக ஒரு பாடல் வருகிறது. இரவுக்குறி வந்து நீங்கும் தலைவனை எதிர்ப்பட்டு, தோழி தலைவியது நிலைமை கூறி, அவனை வரைவு கடாவ, அவன் வரைய வருகின்றமை தோழி தலைவிக்கு வரைவு மலிந்துகூறியது இது

இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தன னாக,
ஐ-இரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையின் கீழ்ப்புகுத்து, அம்மலை
எடுக்கல் செல்லாது உழைப்பவன் போல—
உறுபுலி உருஏய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண்டு, அதன்முதல் குத்திய மதயானை
நீடு இரு விடர்அகம் சிலம்பக் கூய், தன்
கோடுபுய்க் கல்லாது, உழக்கும் நாட! கேள்''

என்று தொடங்குகிறது இப்பாடல். இரவில் குறித்த இடத்தில் வந்து தலைவியைச் சந்தித்து விட்டு, பிரிய மனமின்றி

மீளும் தலைமகனைத் தோழி விளிக்கிறாள். அவளுடைய விளியில் இறைச்சிப் பொருள் உள்ளடங்கி அழகு செய் கிறது :-

பூத்துக் குலுங்கி நிற்கும் வேங்கை மரத்தைப் புலி யென்று கருதிச் சினங்கொண்ட யானை அம்மரத்தைக் கோடுகளால் குத்தியது. யானையின் தந்தங்கள், மரத்தில் ஆழப்புகுந்ததனால் இழுக்க முடியாமல் திணறி யானை அலறியது.இக்காட்சியைக் கொண்டு, தலைவன் தலைவி யிடம் உள்ளத்தைப் பறிகொடுத்து மீட்க முடியாமல் திண்டாடுகிறான் என்பதை உய்த்துணரச் செய்கிறாள் தோழி. மேலும், தோழி கூற்றில் இராமாயணச் செய்தி உவமையாகக் கையாளப்பட்டுள்ளது.

வேங்கை மரத்தில் குத்திய தந்தத்தை இழுக்க முடியாத யானைக்கு, இமயமலையைப் பெயர்த்தெடுக்கக் கருதி, மலை யின் கீழே கையைப் புகுத்தி மலையையும் எடுக்க முடி யாமல், கையையும் இழுக்க முடியாமல் குரலெடுத்து அலறிய இராவணன் உவமையாகக் காட்டப் பெறுகிறான். குறிஞ்சி நிலத்து யானையின் பிளிறலுக்கு இலங்கை நாட்டு இராவணன் அலறலை உவமை காட்டிய கபிலர் பெருமான், இராமாயணச் செய்தியை உணர்ந்து ஓதினார் என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

மற்றும், சிலப்பதிகாரத்திலும் இராமாயணச் செய்திகள் வருகின்றன. சிலப்பதிகாரம்— மதுரைக்காண்டம் —புறஞ் சேரியிறுத்த காதையில் ஒரு செய்தி :—

கோவலனுக்கு மாதவி எழுதிய முடங்கலைக் கொண்டு வந்த கோசிகமுனிவன், பூம்புகார் நிலைமைகளைச் சொல்லுகிறான். மணியிழந்த நாகம் போலப் பெற்றோர்கள் துயருற்றதும், உயிரிழந்த உடல் போலச் சுற்றத்தார் துயர்க் கடல் வீழ்ந்ததும், ஏவலாளர்கள் கோவலனைத் தேடி எல்லாத் திசைகளுக்கும் சென்றதும், கோவலனைப் பிரிந்த

தால் புகார் நகரம் பேதுற்றதும், பிரிவெனும் துயரால் மாதவி படர்நோயுற்றுப் படுக்கையில் வீழ்ந்ததும் ஆகிய செய்தி களைக் கூறுகிறான் கோசிகன். செய்திகளில் பூம்புகார் நிலையை :—

''பெருமகன் ஏவ லல்ல தியாங்கணும்
அரசே தஞ்சமென் றருங்கான் அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றதும்''

'தந்தை சொற்படி இராமனைப் பிரிந்த அயோத்தி போல, கோவலனைப் பிரிந்த புகார் நகரம் விளங்குகிறது' என்று கோசிகன் கூற்றாக விளக்குகிறார் இளங்கோவடிகள். நீர் துறந்த நிலம், ஏர் துறந்த வயல், நகையிழந்த முகம்; புகை யிழந்த மாடம் என்று அணியிழந்த அயோத்தியின் அலங் கோலத் தோற்றத்தைக் கம்பன் பாடுதற்கு முன்னரே இளங்கோவடிகள் பூம்புகாரைப் பாடி வழி காட்டியிருக் கிறார்.

மேலும், இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம்— புகார்க் காண்ட கால்கோட்காதை மறக்கள விருந்து—முன்தேர்க் குறவைப் பாடலில் 'கடலகழ் இலங்கையில் எழுந்த சமரம்' சுட்டப் பெறுகிறது.

இளங்கோவடிகளேயன்றி, மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனாரும் இராமாயணச் செய்தியைக் கூறு கின்றார். மணிமேகலைச் சமயக்கணக்கர்தந்திறம் கேட்ட காதையில் இராமாயணச் செய்தி வருகின்றது. பத்து அளவைகளை விளக்குமிடத்து 'மீட்சி' அளவைக்கு விளக்கம் தரப்படுகிறது.

''மீட்சி யென்ப திராமன்வென் றானென
மாட்சியில் இராவணன் தோற்றமை மதித்தல்''

இராமன் வென்றானென்றால் இராவணன் தோற்றான் என்று பொருள். இவ்வாறு கணக்கிட்டறிவதற்கு 'மீட்

என்று பொருள். மணிமேகலை பாடிய சாத்தனார் கொள்கை இது. இதனைச் சமயக்கணக்கர் வாயிலாக வெளிப்படுத்துகிறார் சீத்தலையார்

கம்பன் காலத்திற்கு முந்திய மேற்கண்ட சங்க இலக்கிய நூல்களில் இராமாயணச் செய்திகள் வருவதோடன்றி, ஆழ்வார் பாசுரங்களிலும் இராமாயணச் செய்திகள் பேசப்படுகின்றன. ஆழ்வார்களில் குலசேகர ஆழ்வார், இராமாவதாரத்தில் ஈடுபட்டு உள்ளத்தைப் பறிகொடுத்தவர்.

"மன்னுபுகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்த்
தவனே!"

"தென் இலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய்!"

"திண்திறளாள் தாடகைதன் உரம்உருவச்
சிலைவளைத்தாய்!"

"தங்குபெரும் புகழ்ச் சனகன் திருமருகா!"

"மைதிலிதன் மணவாளா!"

என்றெல்லாம் பாடிப் பரவுகிறார் குலசேகராழ்வார். மற்றைய ஆழ்வார்களும் அப்படியே.

ஆழ்வார்களேயன்றி நாயன்மார்களும் தங்கள் பாடல்களில் இராமாயணச் செய்திகளைக் கையாண்டிருக்கிறார்கள். அவற்றை விரிக்கிற் பெருகும். கைப்புண்ணுக்குக் கண்ணாடி தேவையில்லை. சமயகுரவர் நால்வருள் மணிவாசகர் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். எட்டாம் நூற்றாண்டின் இளஞாயிறு ஞானசம்பந்தர். அதே எட்டாம் நூற்றாண்டின் திங்கள் திருநாவுக்கரசர். சுந்தரரும் கம்பனுக்கு முன்னவரே. முன்னைய நூற்றாண்டுக்காரர்கள் செய்யாததை ஒன்பதாம் நூற்றாண்டுக் கம்பன் செய்து விடவில்லை. முன்னையோர் தொட்டுப் பாடியதைத்தான் கம்பன் தொடுத்துப் பாடினான். இராமகாதைக்கு, எல்லோரும் பொறுப்பானவர்களே.

''என்புகழ் கின்றது? ஏழை
எயினனேன்; இரவி என்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை
ஒளிகளைத் தவிர்க்கு மாபோல்,
மன்புகழ் பெருமை நுங்கள்
மரபினோர் புகழ்கள் எல்லாம்
உன்புகழ் ஆக்கிக் கொண்டாய்!
உயர்குணத்து உரவுத் தோளாய்!''

இது, குகன் கூற்றாகப் பரதனைக் கம்பன் பாராட்டிய பாடல். பரதன், முன்னையோர் புகழ்களையெல்லாம் ஒரு சேரச் சேர்த்துத் தன் புகழாக ஆக்கிக் கொண்டு பெருமை பெற்றான். அதுபோல, கம்பன் தனக்கு முன்னோர்கள் ஆங்காங்கே அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பாடிய இராமாயணச் செய்திமலர்களைக் காவியமாலையாகத் தொடுத்துத் தமிழன்னைக்கு மாலையாகச் சூட்டி மகிழ்ந் தான், இதனால், கம்பன் முன்னையோர் புகழ்களை யெல்லாம் தன் புகழாக்கிக் கொண்டான். அந்தக் கவிச் சக்கரவர்த்தி கம்பனை வாழ்த்துவோம், வணங்குவோம், வாழ்த்தி வணங்குவோம்.

# நெஞ்சினால் பிழைப்பிலாள் நெடும்பழி பூண்டாள்

மனமறிந்து தவறு செய்தவர்கள் தண்டனைக்குள்ளாவதில் தவறில்லை. தண்டிக்கப்பட வேண்டியவர்கள் தப்பித்துக் கொண்டாலும் கவலையில்லை. ஒரு நிரபராதி தண்டிக்கப்படுவதை நினைத்தால் நெஞ்சு நெகிழ்கிறது. அந்த நிரபராதி ஆணாக இருந்தாலும் அவர்களது நெஞ்சுரம் கருதிக் கொஞ்சம் பொறுத்துக் கொள்ளலாம். பெண்ணாக இருந்தால் தாங்க முடியாத வேதனை நம் உள்ளத்தைத் தழுதழுக்கச் செய்கிறது. பெண்ணென்றால் பேயும் இரங்கும் என்பார்கள். மனித மனம் படைத்தவர்களால் இரங்காமலிருக்க முடியுமா?

கம்பன் காவியத்துள் நம்முடைய அனுதாபத்துக்குரியவள் அகலிகை என்னும் அபலை. அவள் கன்னிப் பெண்ணல்லள். கோதம முனிவன் என்ற கணவனோடு வாழ்ந்த இல்லத்தரசி. மிதிலை முனிவன் சதானந்தனுக்குத் தாய். மனத்தில் சிறு மாசுமின்றி மனையறங் காத்தவள். இந்திரன் இழைத்த வஞ்சகச் செயலாள் பழிப்புக்கு இலக்கானாள். நெஞ்சறியப் பிழை செய்யாத அவள் பழி பூண்டாளே என்று நினைக்கும் போது, உள்ளம் குமுறுகிறது. அன்று அவள் பூண்டபழி, இன்றுவரை வளர்ந்து நெடும்பழியாகி விட்டதே என்று நினைக்கும் போது நெஞ்சு பதைக்கிறது.

அஹல்யா என்ற வடமொழிப் பெயரைத் தமிழில் அகலிகை என்று அழைத்தான் கம்பன். ஹல்யம்-அழகின்மை. அஹல்யம்-அழகின்மையற்றவள். அதவாது 'பேரழகி' என்று பொருள்,

அஹல்யா பிரமனது ஓமகுண்டத்தில் பிறந்தவள். படைப்புக் கடவுளாகிய பிரமன், மாதர்களின் அங்கங்களில் அழகு மிக்கனவற்றை யெல்லாம் ஒன்று சேர்த்து, ஒரு பெண்ணாகப் படைத்து, 'அஹல்யா' என்று பெயரிட்டான் என்று புராணம் கூறும். அகல்யா ஒளிவடிவமாக விளங்கினாள்.

ஒளி புகையற்றது; தழலற்றது; குற்றமற்றது; வீரியத்தோடு விளங்குவது; புண்ணியம் மிகுந்தது; ஒரு நொடிக்குள் உலகம் முழுவதும் பரவுவது. ஒளிக்கும் மேகத்துக்கும் உறவுண்டு. மேகம், ஒளியை விரும்புகிறது; அதனால் விளக்கமுறுகிறது! அதனைத் தனக்குள்ளே ஒளித்துக் கொள்ளுகிறது. ஒளியும் மேகத்தோடு உறவாடுகிறது; உலாவுகிறது; தவழ்ந்து விளையாடுகிறது. இது வேதத்தின் உட்பொருள்.

வேதவாக்கிய இலக்கணத்திற்கு, கவிஞர்கள் தங்கள் கற்பனைகளைக் கூட்டிக் கதைகள் கட்டிக் கலைவடிவம் தந்தார்கள். அஹல்யா, பிரமனுக்கு மகள். அஹல்யாவின் விளையாட்டுத் தோழன் இந்திரன். பேரழகு படைத்த அஹல்யாவுக்குக் கணவனாகும் தகுதி தனக்கேயுண்டென்று இந்திரன் செருக்குற்றிருந்தான். பிரம்மனோ, அஹல்யாவைப் பாதுகாக்கும்படி கோதமனிடம் கட்டளையிட்டான். கோதமனும் குறித்த காலம்வரை அஹல்யாவைப் பாதுகாத்துப் பழுதுறாமல் பிரமனிடம் ஒப்படைத்தான். கோதமனுடைய மனக்கட்டுப் பாட்டினைக் கண்ட நான்முகன் அஹல்யாவை அவனுக்கே மணமுடிக்க விரும்பினான். ஒரு நொடிக்குள் உலக முழுவதும் பரவும் ஒளிமயமான பேரழகு படைத்த தன் மகளுக்குக் கணவனாகும்

தகுதியும் ஆற்றலும் கோதமனுக்கு உண்டா என்று சோதிக்க ஒரு போட்டி ஏற்படுத்தினான். உலகத்தை எவன் முதலில் சுற்றி வருகின்றானோ, அவனுக்கே தன் மகளை மணமுடிப்பதாகப் பணயமிட்டான். உலகம் சுற்றும் போட்டியில் கலந்து கொண்டவர் இருவர். ஒருவன் விண்ணுலக வேந்தனாகிய இந்திரன், மற்றொருவன் மண்ணுலக முனிவனாகிய கோதமன். விண்ணரசன் தோற்றான், மண்முனிவன் வென்றான். வென்றவனுக்கு அஹல்யா மனைவியானாள். இதனால் பொறாமை கொண்ட இந்திரன் மாறுவேடம் கொண்டு சென்று அவளைக் கற்பழித்தான். இது வேதப் பொருளுக்கு விளக்கமாகக் கவிஞர்கள் வழங்கிய கற்பனைக் கலைக்கதை.

வேதத்தில் அஹல்யாவைப் பற்றி 'ஒளி' என்று முதலில் பொருள் தரப்பட்டது. பின்னர், கலப்பையால் உழுது பண்படுத்திப் பயிரிடப்படாத பூமிதேவியை 'அகல்யா' என்று அழைக்கும் கொள்கையும் எழுந்தது. பொறுமைக்கு அடையாளமாகப் பூமிதேவியைச் சொல்லுவார்கள். பூமியின் சிறப்பை நாம் நேரில் காண முடியாது. அதில் விளையும் பயிரில் காணமுடியும். காலங்காலமாக உழுது பயிரிடாத பூமியில் இயற்கையிலேயே மண்வளம் மண்டிக்கிடக்கும். அந்நிலத்தைக் கொழு முகத்தால் உழுது பயிர் செய்தால், விளையும் பயிர் பச்சைப் பசேலென்று கண்களுக்குக் குளிர்ச்சியூட்டும். பூமிதேவி தன் பேரழகைப் பயிர்களின் வாயிலாகக் காட்டுவாள். சீதா தேவி உழுகின்ற கொழு முகத்தில் தோன்றிய குழந்தை. பூமிதேவியின் உருவமே சீதையாக வெளிப்பட்டது. சீதையின் பேரழகு, இலக்குமி தேவியும் தொழத் தகும் பேரழகு.

அழகுத் தெய்வம், 'ஒளியாய் நின்று திருவிளக்கில் சிரிக்கின்றாள்' என்றும் 'விளைந்த நன்செய் நிலத்தினிலே என் விழியை நிறுத்தினாள்' என்றும் பாவேந்தர் பாரதி தாசனார் பாடிப் பூரித்துப் போகிறார். அந்த 'அழகு' என்பாள் தனக்குக் கவிதை தந்ததாகவும் களித்துப் பாடு

கிறார் அவர். இன்றைய தமிழ்க் கவிஞன் பாரதிதாசன் அழகின் சிறப்பைக் கவிதையாக்கித்தந்ததுபோல அன்றைய வடமொழிக் கவிஞன் வான்மீகியும் அகலிகை, சீதை என்ற பேரழகுப் பெட்டகங்களை இணைப் பாத்திரங்களாக ஏற்றுக் காவியம் பாடித் தந்தான். வான்மீகி வடமொழியில் பாடிய இராமாயணத்தைத் தமிழில் பாடியவன் கவிச் சக்கரவர்த்தி கம்பன்.

"நாரணன் விளையாட்டு எல்லாம்
நாரத முனிவன் கூற,
ஆரணக் கவிதை செய்தான்,
அறிந்த வான்மீகி என்பான்;
சீர்அணி சோழ நாட்டுத்
திருவழுந் தூருள் வாழ்வோன்,
கார் அணி கொடையான்,
கம்பன் தமிழினால் கவிதை செய்தான்"

நாரணன் விளையாட்டை வேதப் பொருளுக்கு ஏற்ப வான்மீகி வடமொழியில் பாடினான் அந்த இராமாய ணத்தைத் தமிழ்ப் பண்புகளுக்கேற்பக் கம்பன் தமிழினால் பாடினான். இருவரின் படைப்புக்களிலும் அகலிகையைப் பற்றிய பகுதிகளைக் காண்போம்.

வான்மீகி வழங்கியஅஹல்யாவின் கதை :—

தாடகை வதம் முடிந்தபின் விசுவாமித்திரருடன் இராமலக்குவர் மிதிலையை நோக்கிச் செல்கின்றனர். மிதிலைக்குப் புறத்தே ஒரு பழமையான ஆசிரமம் அழ கிழந்து பாழ்பட்டுக் கிடக்கிறது: ஆசிரமம் பாழடைந்து கிடப்பதன் காரணத்தை இராமன் விசுவாமித்திரரிடம் கேட் கிறான். இராமன் கேள்விக்கு முனிவர் பின்வருமாறு பதில் சொல்கிறார்.

இது, கௌதம முனிவருடைய ஆசிரமம். கௌதம முனிவர் இங்கே தன் மனைவி அஹல்யாவோடு வாழ்ந்து வந்தார். இந்திரன் ஒருநாள் முனிவரில்லாத சமயம்

பார்த்து, கௌதமரைப் போன்று உருவங்கொண்டு ஆசிரமத்திற்குள்ளே நுழைந்தவன் அஹல்யாவை நோக்கி, "அழகியே உன்மீது ஆசை மேலிடுகிறது. உன்னைக்கூட விரும்புகிறேன். கலந்து உறவாடக் காலப் பொருத்தம் பார்க்காதே" என்று முனிவர்போல் பேசினான். இந்திரனே மாறுவேடத்தில் வந்துள்ளான் என்பதை மகரிஷியின் மனைவி உணர்ந்து கொண்டாள். எனினும், இந்திர னுடைய வேட்கைக்கு இசைந்து விட்டாள். இந்திரனோடு உடன்பட்டுக் கூடிய அஹல்யா, கணவன் வருமுன்னே அவன் காணாதவாறு சென்றுவிடும்படி இந்திரனை எச்சரித்து அனுப்பினாள்.

இந்திரன் அகலிகைக்கு நன்றி தெரிவித்து விட்டு வெளி யேறும்போது, கௌதம முனிவர் வந்துவிட்டார். கௌதம முனிவர் என்றால் இந்திரனுக்கு எப்போதுமே நடுக்கம். நீராடிய ஈர ஆடையோடும் நெருப்புமிழும் கண்களோடும் வரும் முனிவரைக் கண்டதும், குற்றம் புரிந்த இந்திரன் குலை நடுக்க முற்றான். இந்திரன் புரிந்த தகாத செயலை உணர்ந்த முனிவர், சினந்து, ஆண்மை அங்கத்தை இழந்து பேடியாகும்படி சபித்து விட்டார்.

பின்பு, அஹல்யாவை நோக்கி, "நீ செய்த பாவத்துக் காகப் பல வருடங்கள் யார் கண்ணிலும் படாமல், சாம்பலில் கிடந்து, அன்ன ஆகாரமின்றி காற்றையே உண்டு இங்கேயே தவம் கிடப்பாயாக. பலகாலம் கழித்து தசரத ராமன் இங்கே வருவான். அப்போது, உன் பாபம் நீங்கும்" என்று சபித்து இமயமலைக்குத் தவம் செய்யச் சென்று விட்டார். அன்று முதல் அஹல்யா பனியினால் மூடப் பட்ட மதி போலவும், புகையினால் சூழப்பட்ட தீக்கொழுந்து போலவும், நீரில் தோன்றும் சூரிய பிம்பம் போலவும் மங்கி மறைந்து கிடக்கிறாள். 'இராமா! நீ ஆசிரமத்திற்குள்ளே சென்றால் அவள் சாபம் நீங்கும்' என்றான்.

இராமன் ஆசிரமத்திற்குள் போனான். கௌதமன் இட்ட சாபமும் போயிற்று. அஹல்யா முன்னையினும் ஒளிமிகுந்து விளங்கினாள். இராம லக்குவர் அஹல்யாவை வணங்கினார்கள். அஹல்யாவும் அவர்களை உபசரிக்கிறாள். அங்கே கௌதமரும் வந்து அஹல்யாவை அங்கீகரிக்கிறார். பின்பு இராமலக்குவர் விசுவாமித்திரரின் பின்னே மிதிலையை நோக்கிப் போகிறார்கள்.

கவிச்சக்கரவர்த்தி கம்பன், வான்மீகி வார்த்தெடுத்த அஹல்யாவை, அகலிகையாக்கி மாசறு கற்பின் மிக்க அணங்காகச் செப்பம் செய்து சீர் படுத்துகிறான்.

தாடகை வதை முடிந்த பின்பு, விசுவாமித்திர முனிவரோடு இராமலக்குவர் விதேக நாட்டின் தலைநகரமாகிய மிதிலை மாநகரை நோக்கிச் செல்கின்றனர். செல்லும் போது மிதிலையின் புற மதிலுக்கப்பால் ஒரு கருங்கல் கிடக்கும் மேட்டினைக் கண்டார்கள். அந்த மேடு, 'மனையின் மாட்சியை அழித்து இழிமாதவன்' மனைவியாகிய அகலிகை, சாபத்தின் காரணமாகக் கருங்கல்லாய்க் கிடக்கும் இடமாகும். அந்தக் கல்லுருவம் காகுத்தனுடைய கால் துகள் பட்டதும், தொல்லுருவம் பெற்றது பெண்ணுருவம் பெற்று மின்னல் கொடி போன்று ஒதுங்கி நிற்கும் இவள், தீவினையை விரும்பிச் செய்த இந்திரனுக்கு ஆயிரம் கண்களை அளித்த கோதமனுடைய பத்தினியாகிய அகலிகையாவாள் என்று காகுத்தனுக்குக் காட்டினான் விசுவாமித்திரன். இராமன் முனிவனை நோக்கி, "அன்னையைப் போன்று விளங்கும் இந்தஅகலிகைக்கு இப்படிக் கேடு நேர்ந்தது, முற்பிறப்பில் செய்த பாவத்தின் பயனா? இப்பிறப்பில் செய்த செயலின் விளைவா? கூறியருளுக" என்று கேட்டான்.

விசுவாமித்திரன் அகலிகையின் சாப வரலாறு கூறுகிறான் :

முன்னொரு காலத்தில் வச்சிராயுதத்தையேந்திய இந்திரன், கோதம முனிவர் ஆசிரமத்தில் அவனில்லாத சமயம் பார்த்து, அங்கு சென்று அகலிகையை அடைய விரும்பினான். அகலிகையின் கண்ணழகில் ஈடுபட்ட இந்திரன் காம நோயுற்றான். அனங்கனின் அம்பினால் விளைந்த காம மிகுதியால் அறிவு நீங்கி அலைந்தான். ஒரு நாள் தந்திரமாக முனிவனைக் குடிலை விட்டு வெளியேறச் செய்தான். வெளியேறியதும், அந்தக் கோதமனுடைய உருவைப் போல் மாறுவேடம் பூண்டு, குடிலுக்குள் புகுந்தான்.

புகுந்தவன், அகலிகையோடு உடலுறவு கொண்டான். கணவனுடைய விருப்பத்திற்கு மாறாக என்றுமே நடந்தறி யாத அகலிகையும், அன்றும் உடலுறவுக்கு உடன்பட்டு ஒத்திருந்தாள். உடலுறவில் வழக்கத்திற்கு மாறான ஊற்று ணர்வினை உணர்ந்தாள். இந்திரன் தான் கணவனுருவில் கள்ளத்தனமாக வந்துள்ளான் என்று அகலிகை அறிய வில்லை. உடலுறவின் வேறு பாட்டின் காரணம் பற்றிச் சிந்தித்திருக்கையில் சிறிது காலந்தாழ்ந்தது அதே சமயத் தில் நெற்றிக் கண்ணனை நிகர்த்த கோதமனும் வேகமாக வந்து விட்டான். ஒரே உருவில் இருவரைக் கண்டதும், தன் உண்மைக் கணவன் எவன் என்று உணர முடியாமல் தடு மாறினாள் அகலிகை. அழியும் உலகில் அழியாது நிற்கும் நெடும் பழிக்கு ஆளாகி விட்டோமே என்று அஞ்சி நடு நடுங்கி நின்றாள். அப்போது, மாறுவேடத்தில் வந்த இந்திரன், தன் அடாத செயலுக்கு அஞ்சி நடுங்கிப் பூனை யுருக்கொண்டு ஓடத்தொடங்கினான்.

ஓடத்தொடங்கிய தீயவனைத் தூயவனாகிய கோதமன், "ஆயிரம் மாதர்க்குள்ள அறிகுறிகள் உன் உடம்பெல்லாம் உண்டாகுக" என்று வில்லம்பினும வேகமுடைய சொல்லம் பினால் சபித்து விட்டான். இந்திரன், எல்லையில்லாத நாணமடைந்து, எல்லோரும் நகைக்கும்படி சென்ற பின்பு,

கோதமன் தன் மனைவியை நோக்கி ''விலைமகள் அனைய நீயும் கல்லியலாதி'' என்று சபித்தான். கருங்கல்லாய் விழு கின்ற அகலிகை, ''சிறியவர்கள் அறியாது செய்த பிழையைப் பெரியவர்கள் பொறுப்பது கடமையாகும்'' என்று சாப விமோசனம் வேண்டினாள். ''தசரதராமனின் பாததூளி படும் போது உன் கல்லுருவம் நீங்கி நல்லுருவம் பெறுவாய்'' என்று கோதமன் அருளினான். அவ்வாறே, இராமா! இன்று உன் அடிப்பொடியின் ஆற்றலால் இந்த அகலிகை உய்ந்தாள்.

''இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்;
இனி இந்த உலகுக் கெல்லாம்
உய்வண்ணம் அன்றி, மற்று ஓர்
துயர்வண்ணம் உறுவது உண்டோ?
மைவண்ணத்து அரக்கி போரில்
மழைவண்ணத்து அண்ணலே! உன்
கைவண்ணம் அங்குக் கண்டேன்,
கால்வண்ணம் இங்குக் கண்டேன்''

என்று அகலிகையின் சாப வரலாற்றினைக் கூறி முடித்தார் விசுவாமித்திரர்.

பின்னர் விசுவாமித்திரன் கோதமனிடம் ''நெஞ்சினால் பிழைப்பிலாளை நீ அழைத்திடுக!'' என்று கூறினான். குணங்களால் உயர்ந்த வள்ளலாகிய இராமபிரானும் கோதமனை வலங்கொண்டு வணங்கி, மாசறு கற்பின்மிக்க அணங்காகிய அகலிகையை அவனிடத்தில் ஒப்படைத்தான்

கம்பன் காவியத்துள் அகலிகைப் படலம் இவ்வாறு சித்திரிக்கப் பெறுகிறது. மனமறிந்து இந்திரனோடு கூடிய வான்மீகியின் அஹல்யாவை, மனத்தினால் மாசற்றவளாக மாற்றிச் செப்பம் செய்து, கம்பன் தமிழ்ப் பண்பாட்டினைக் காப்பாற்றினான்.

கம்பன் செய்த திருத்தமும் பொருத்தமில்லையென்று வருத்தமுற்றனர் புலவர்கள் சிலர். அதனால், கம்பன் செய்த திருத்தத்திற்குத் திருத்த நூல் செய்தனர்.

அகலிகை வெண்பாப் பாடிய வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார் அவர்கள், ஷேக்ஸ்பியரின் சாதுரியத்தோடு, ஆங்கில நூல் முறையில், திராவிடப் பண்பாட்டிற் கேற்ப சிலமாற்றங்கள் செய்து, வெண்பாக்களினால், அகலிகை கதையைப் பாடினார்கள். "அம்மி மிதித்து அருந்ததியைப் பார்த்தல்" என்னும் பழக்கம் முதலியாருடைய உள்ளத்தைக் குத்தியிருக்கிறது. அம்மி—அகலிகை-கணவனைப் பிரிந்து கல்லுருவானவள். அருந்ததி, கணவனைப் பிரியாது நட்சத்திர மண்டலத்தில் விளங்கினவள். அகலிகை குற்றமுடையவளாதலால் கணவனைப் பிரிந்து கல்லாய்க் கிடக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. அந்த நிலையை மாற்ற முதலியார் அவர்கள் சில மாற்றங்கள் செய்தார்.

அகல்யாவின் மீது பெருங்காதல் கொண்ட இந்திரன் தந்திரமாகக் கௌதமரை வெளியேறச் செய்து, ஆசிரமத்திற்குள் கௌதமரின் வேடம் பூண்டு நுழைகிறான். வெளியே சென்ற முனிவரே மீண்டும் வந்தார் என்று அகல்யா வரவேற்கிறாள். இந்திரன் அகல்யாவின் கரத்தைப் பற்ற, அப்பற்றுதல் கணவன் பற்றும் முறையினின்றும் வேறாயிருப்பதையுணர்ந்து, "சீ விட்டிடு" என்று உதறிப் பின்னடைகிறாள்.

"மேகமின்றி மின்னின்றி வெள்ளிடிமேல்
வீழ்ந்தாற்போல்
மாகொடுந்துன் பாம்விபத்து வந்ததே"

என்று வருந்துகிறாள். தன் மேலுள்ள காதலை விட்டுவிடும்படி இந்திரனிடம் வேண்டுகிறாள்.

"என்னுயிரை விட்டிடினும், என்னுயிரின் மிக்கினிய
நின்னைவிட ஒண்ணாதால் நேரிழையே!"

என்று இந்திரன் பிடிவாதம் செய்கிறான். அகல்யா தன் வலியற்ற நிலையை உணர்ந்து மயங்கி மூர்ச்சித்து விழுகிறாள். இந்திரனோ, பிணத்தைத் தழுவுவது போலத் தன் வேட்கையைத் தீர்த்துக் கொள்ளுகிறான். வெளியே சென்ற முனிவர் மீண்டு வந்து அகல்யாவைக் கற்பழித்த இந்திரனைச் சபிக்கிறார். பின்பு அகல்யாவை நோக்கி,

''வஞ்சன் உடல் நிறையை மாற்றினான், அன்று உன்றன்
நெஞ்சின் நிறைசிறிதும் நீங்கிலது''

என்று ஆறுதல் கூறுகிறார்.

பாலபாரதி, ச. து. சுப்பிரமணிய யோகியவர்கள் முன்னைய மூன்றிலிருந்து அகல்யாவின் கதையை மாறுபடுத்திக் காட்டுகிறார்கள்:

ஒரு நாள் இந்திரன் அகல்யாவைக் கண்டு தன் உள்ளக் காதலை உரைக்கிறான். அப்பொழுது அகல்யா, ''கற்புக்கனல் நான்; காமச் சிறு புழு நீ!'! என்று அவனை உதாசீனப்படுத்தி ஒதுக்குகிறாள். பின்னர் ஒரு நாள் இரவு இந்திரன் ''கொக்கரகோ'' என்று கோழியாய்க் கூவினான். கோதமன் சேவல் கூவுவது கேட்டுக் காலைக்கடன் முடிக்க வெளியே சென்றான். அந்தச் சமயத்தில் இந்திரன் கோதமர் வேடங்கொண்டு உள்ளே நுழைந்தான். கற்றை இருள் நடுவோர் கதிர் மதியம் போல் கண் வளர்ந்த அகலிகையைக் கண்டான். தீங்கு தடுப்பாரில்லை, தீமை புரிந்து விட்டான். அகல்யாவும்,

''என்றுமிலாப் பேராசை என் கணவர் கொண்டாரே!
இன்று கண்டேன் பேரின்பம்''

என்று தான் இணங்கியிருந்தாள். வெளியே சென்ற கோதமன் திரும்பி வந்ததும், இந்திரன் தன் மாறுவேடத்தை மாற்றிக்கொண்டு ஓடும் போதுதான் தன்னோடு கூடியவன் அந்நியன் என்று அறிகிறாள் அகல்யா. இதனைக்

"கண்ணால் உனைக்கண்டாள், வானரசைக்
காணவில்லை;
எண்ணத்து உனை ஏற்றாள், வானரசை
ஏற்கவில்லை"

என்று இராமனைக் கொண்டு கோதமனுக்குச் சொல்லச் செய்து, அகல்யாவைக் குற்றமற்றவளாக்கிக் காட்டுகிறார் ச. து. சு. யோகியார்.

வான்மீகி, கம்பன், வெ. ப. சு. முதலியார், ச. து. சு. யேகியார் ஆகிய நால்வருமே அகலிகை கற்புக்கரசி என்ற கொள்கையை நிலைநாட்டுகின்றனர்; ஏற்றுக்கோள்ளு கின்றனர். ஆனால் இந்திரனுடைய வஞ்சக வேடத்தால் அந்த மாதரசிக்கு விளைந்த மாசினை அகற்றும் வழியில் மட்டுமே மாறுபடுகின்றனர்.

மாறுபாட்டின் மயக்கத்தினைத் தீர்த்துக் கொள்ள ரசிகமணி, டி. கே. சிதம்பரநாத முதலியாரை அணுகினால், அவர் தாம் வழங்கிய 'கம்பர் தரும் ராமாயணம்' என்ற நூலில் அகலிகை கதையைச் சொல்லுகிறார். எப்படி?

கம்பராமாயணம் அகலிகைப் படலத்திலுள்ள கதையை உரைநடையாகச் சொல்லிவிட்டு, "இந்தக்கதைக் குரிய கம்பர் பாடல்கள் தொலைந்து போய்விட்டன" என்று சுலபமாகச் சொல்லி விடுகிறார். "இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்" என்று தொடங்கும் பாடலைக்கூட ஏற்றுக் கொள்ள அவரது மனம் இடந்தரவில்லை. இப்படிப் பல சுவை சொட்டும் பாடல்கள் அவருடைய கழிப்புக் கணக்கில் பதராகி விடுகின்றன. ரசிகமணியவர்கள் அகலிகைப் படலத்துப் பாடல்களைப் பதராக்கிவிட்டாலும் அகலிகை கதையை ஏற்றுக்கொள்ளுகிறார். இதனைக் குலமுறை கிளத்து படலத்தின் கடைசிப் பாடலால் அறியமுடிகிறது.

''கோதமன்தன் பன்னிக்கு
முன்னையுருக் கொடுத்த (து) இவன்
போதுவென்ற தெனப்பொலிந்த
பொலன் கழற்கால் பொடிகண்டாய்!
வேதம் என்ற உருவுடையாய்!
மிதிலையர்தம் உயிரனையாய்!
ஈ (து) இவன்தன் வரலாறும்
புயவலியும்என உரைத்தான்''

இந்தப்பாடலின் மூன்றாவது அடி, ரசிகமணியால் திருத்தம்பெற்றது. பாடலைத் திருத்தம் செய்து அகலிகையின் சாபவிமோசனத்தை ஏற்றுக் கொள்கிறார் டி.கே. சி அவர்கள்.

சாபவிமோசனம் என்றதும் சிறுகதை இலக்கியத்தில் சிறந்து விளங்கிய புதுமைப்பித்தன் அவர்கள் எழுதிய ''சாபவிமோசனம்'' தான் நினைவுக்கு வருகின்றது. அந்தச் சிறுகதையின் சிலபகுதிகள் நெஞ்சைத் தொட்டு நினைவைத் தூண்டுகின்றன.

''எப்போதோ ஒருநாள் நிகழ்ந்த நிகழ்ச்சி இன்றும் நின்று நம் இதயத்தைத் துடிக்கச் செய்கின்றது.''

''சாப விமோசனத்துக்குரியவள் அகலிகை. இவள் கோதமனின் மனைவி. இந்திரனுடைய மாயவேஷத்துக்கு ஏமாறிய பேதை. கணவன் மீதிருந்த அளவுக்குள் அடங்காத பாசத்தின் விளைவாகத் தன் உடம்பை, மாய வேஷத்தால் ஏமாறி மாசு படுத்திக் கொண்டவள்.''

''தெய்வமே! சாபவிமோசனம் கண்டாலும், பாப விமோசனம் கிடையாதா?' என்று தேம்பினாள் அகலிகை.'

''அகலிகையின் மனப்பாரத்தை நீக்க வந்த மாடப் புறா சீதை. அவளது பேச்சும் சிரிப்பும் தன் மீதுள்ள கறையைத் தேய்த்துக் கழுவுவது போல் இருந்தன' அகலிகைக்கு.''

''மிதிலையில் மணவினை இருகைகளை நீட்டி அழைக்கிறதே.''

மேற்கண்ட புதுமைப் பித்தனின் சொற்றொடர்கள் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன.

ஆம்! இராமாவதாரத்தில் அகலிகைக்கு நிகரானவள் சீதை. கோதமனை நிகர்த்தவன் இராமன். இந்திரனுக்குச் சமமானவன் இராவணன். பிரமனை யொத்தவன் சனகன். இவர்களில், அகலிகையும் சீதையும் நம்முடைய இன்றைய சிந்தனைக்குரியவர்கள். சீதையைக் காட்டி அகலிகையைப் பற்றிச் சிந்திக்க வைக்கிறார் புதுமைப்பித்தன் அவர்கள்.

திருமணக் காலங்களில் ஓதும் வேத மந்திரங்களில், கற்பொழுக்கமுடைய பெண்டிர்களாகப் பஞ்சகன்னியர் பேசப்படுகின்றனர். அவர்கள் அகலிகை, சீதை, தாரை, மண்டோதரி, திரௌபதி ஆவர். ஐவரில், திரௌபதி நீங்கலாக மற்றைய நால்வரும் இராமாயணப் பாத்திரங்கள் நால்வரில் அகலிகை, சீதை ஆகிய இருவர் வாழ்க்கையையும் இணைத்துச் சிந்திப்போம்.

அகலிகை : நெஞ்சினால் பிழைப்பில்லாதவள்- இந்திரனுடைய மாயவேடத்திற்கு மயங்கியவள்—கணவன் சாபத்திற்கு இலக்கானவள்—இறுதியில் கோதமனால் ஏற்றுக்கொள்ளப்பெற்றவள். மாசறு கற்பின் அணங்காகப் போற்றப் பெற்றவள்.

சீதை: மனத்தினால் மறுவுறாதவள்— இராவணனுடைய மாயவேடத்தை நம்பி ஏமாந்தவள்—கணவன் சீற்றத்திற்கு இலக்கானவள்—இறுதியில் பழிப்பில்லாதவளாக இராமனால் ஏற்றுக் கொள்ளப்பெற்றவள்—கற்பின் கனலியாகப் போற்றப்பெற்றவள்.

ஒரு காவியத்தைப் படைக்கின்ற கதையாசிரியனுக்கு, மூலக்கதைக்கு இணையாக—ஒரு போகாகக் கிளைக் கதையொன்றைப் படைக்கும் பழக்கமுண்டு; உரிமையு முண்டு. இராமகாதையைப் பாடிய கம்பனும் மூலக்கதை நாயகியாகிய சீதைக்கு நிகராக கிளைக்கதை நாயகியாகிய அகலிகையைப் படைத்தான். அகலிகை மீட்சி இராம னுடைய கால் வண்ணத்தால் நிகழ்ந்தது. சீதையின் மீட்சி காகுத்தனுடைய கைவண்ணத்தால் நிகழ்ந்தது. இரு வருக்கும் அருள் சுரந்தவன் இராமன் ஒருவனே.

இராவணனது வீழ்ச்சிக்குப் பிறகுதான் சீதையின் மீட்சி நிகழ்ந்தது. இராவணவதத்திற்கு முந்தி உற்பாதமாகத் தாடகைவதம் நிகழ்ந்தது. முன்னைய தாடகைவதத்தின் முடிவு பின்னைய இராவணவதம். இராகவன் தாடகை வதத்தில் காட்டிய கைவண்ணத்தால்தான் இராவண வதத்தையும் நிகழ்த்தினான். அதனால்தான், கைவண்ணம் காட்டிக் கன்னிப் போர் நிகழ்த்திய காகுத்தனை, அகலிகைப் படலத்தில் கோசிகனைக் கொண்டு போற்றச் செய்தான் கம்பன்.

தாடகையை வதைத்த அம்பினை “சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்” என்றான் கம்பன். வில்லம்புக்குச் சொல்லம்பு உவமையாயிற்று. இராமனுடைய வில்லம்பு இராவணனது உடலை எள்ளிருக்கும் இடமின்றித் துளைத்தது. கோதமனுடைய சொல்லம்பு இந்திரனுடைய உடலை ஆயிரம் கண்ணுடையதாக்கியது.

“ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி”

புலனடக்கமில்லாத இந்திரன் பட்ட பாட்டை உணர்ந் தாவது, இராவணன் ஐம்புலன்களை அடக்கியிருந்தால் அவனுக்கு அழிவு ஏற்பட்டிருக்காது. இந்திரன் அகலிகையை விரும்பி மாறு வேடத்தில் சென்றான். இராவணன் சீதையை விரும்பி மாறு வேடத்தில் சென்றான். இந்திரனுக்குக்

கிடைத்தது கோதமனுடைய சொல்லம்பு; இராவணனுக்குக் கிடைத்தது இராமனுடைய வில்லம்பு. இந்திரனும் இராவணனும் பிறன்மனை விழைந்ததால் பெருங் கேடுற்றார்கள். இந்திரன் கேட்டுக்குக் காரணமானாள் அகலிகை. இராவணன் கேட்டுக்குக் காரணமானாள் சீதை. அகலிகையின் கற்புக்கு இணையான கற்பு சீதையின் கற்பு. சீதையின் கற்பின் மாண்பினை உணர்த்துவதற்கு முன்னோட்டம் அகலிகையின் கற்பின் மாண்பு. இந்த முன்னோட்டத்தை உணர்த்தவே மிதிலைக் காட்சிப் படலத்துக்கு முன்னே அகலிகைப்படலம் அமைந்தது. இந்த இரு படலங்களின் அமைப்பு முறையினைப் பொருத்திக் காட்டவே புதுமைப்பித்தன் அவர்கள் "மிதிலையில் மணவினை இரு கைகளை நீட்டி அழைக் கிறதே" என்று சுட்டினார்கள்.

அகலிகையின் கதையைக் கூறித்தான், சீதாராம திருமணத்திற்கு ஏற்பாடு செய்கிறான் விசுவாமித்திரன். எங்கே? ஜனக மன்னன் அரண்மனையில் குலமுறை கிளத் தும் போது,

"கோதமன் தன் பன்னிக்கு
முன்னை யுருக் கொடுத்தது இவன்
போது வென்றது எனப்பொலிந்த
பொலன் கழற்கால் பொடிகண்டாய்"

என்று குறிப்பிடுகிறான். அகலிகைக்கு வாழ்வளித்த இராமன், உன்மகள் சீதைக்கும் வாழ்வளிப்பான் என்று ஜனகனிடம் சொல்லாமல் சொல்லுகிறான் கோசிகன். கோசிக முனிவன் கூற்றை நம்பித்தான் ஜனகமன்னன் இராமனுக்குத் தன் மகளை மணமுடிக்க இசைந்தான். அவ்வாறு ஜனகன் இசைந்ததற்குக் காரணம் என்ன?

நெடும் பழி பூண்டு கல்லாய்க் கிடந்த அகலிகையைக் கால்துகளால் அருளி, அவளை நெஞ்சினால் பிழைப் பில்லாதவள் என்று உலகுக்குக் காட்டினான் காகுத்தன்.

அந்தக் கருணையுள்ளங் கொண்டவனுக்குத் தன் மகள் சீதையை மணமுடித்தால், அவள் அறிந்தோ அறியாமலோ தவறிழைக்க நேரிட்டால் அவளையும் ஆட்கொண்டருளு வான் என்ற நம்பிக்கையால் இசைந்தான் ஜனகன். ஆகையால் சீதையின் வாழ்வுக்கு அகலிகையின் வாழ்வு அடிப்படையாயிற்று என்று கொள்ள வேண்டும்.

அடிப்படைக் கதைக்குத் தலைவியாகிய அகலிகையின் வாழ்வு பழிப்புடையதாயின், காவியத் தலைவியாகிய சீதையின் வாழ்வு பழிப்புடையதாகும். சோகத்தாளாய சீதையின் கற்புச் சிறப்பினைக் காட்டி உலக மாதர்களின் பெருமையை உயர்த்தக் காவியம் பாடிய கம்பன், அகலிகை யின் வாழ்வில் அசுத்தம் கண்டிருந்தால், சிறந்த சீதையின் கதைக்கு, அருவருக்கத்தகும் அகலிகையின் கதையை அடிப்படையிடுவானா? அகலிகைப் படலத்தையே அகற்றி யிருப்பானே. அகலிகைப் படலம் இல்லையென்றால், கம்பன் படைத்த கலைக் கோயிலுக்குக் குறையேதும் நேரப் போவதில்லை. கம்பன் பாடிய கலைக் கோயிலுக்குக் கலை விளக்கு அகலிகைப் படலம். காவியத்துக்குக் கலையழகூட்டவே அகலிகைப் படலத்தை அகற்றாது பாடினான் கம்பன்.

இத்தனை பெருமைக்குரிய அகலிகைப் படலம் அன்று தொட்டு இன்றுவரை பிரச்சினைக்குரிய படலமாகவே இருந்து வருகிறது. அப்படலத்தில் வரும் ஒரே ஒரு பாடல் அகலிகையின் கற்பொழுக்கத்தையே களங்கப்படுத்தி விட்டது. அவள்மீது நீங்காத நெடும்பழியை நிலை நிறுத்தி விட்டது. அந்தப் பாடல் இது.

''புக்கு, அவளோடும், காமப்
புதுமண மதுவின் தேறல்
ஒக்கஉண்டு இருத்தலோடும்
உணர்ந்தனள்; உணர்ந்த பின்னும்

'தக்கது அன்று' என்ன ஓராள்;
    தாழ்ந்தனள் இருப்ப, தாழா
முக்கணான் அனைய ஆற்றல்
    முனிவனும் முடுகி வந்தான்''

இந்தப்பாடலின் கருத்துரை:—

கோதமமுனிவர் இல்லாத சமயத்தில், வேற்றுருவம் கொண்டு ஆசிரமத்தில் புகுந்த இந்திரன், அகலிகையோடு காமவின்பத்தைச் சமமாக அனுபவித்துக் கொண்டிருந்தான். அப்போது தன்னைப் புணர்பவன் கணவனல்லன் என்று உணர்ந்து கொண்டாள். உணர்ந்த பின்பும், இது தகாத செயலென்று அவனை விலக்காமல் உடன்பட்டிருந்தாள். அந்தச் சமயத்தில் நெற்றிக்கண்ணனை யொத்த கோதமனும் விரைவாய் வந்து விட்டான்.

இப்படிப் பொருள்படுமாறு அமைந்துள்ள பாடலைப் படிப்பவர்கள் அகலிகை ஒழுக்கக் கேடுற்றவளே என்று ஓராயிரம் கோயிலில் சத்தியம் செய்துவிடலாம். இப்படிப் பட்ட களங்கப்பாடலை ஏற்க முடியாத காரணத்தால்தான் ரசிகமணியவர்கள் 'இது கம்பன் பாட்டு இல்லை' என்றார்கள்; வெள்ளக்கால் முதலியாரவர்கள் 'அகலிகை வெண்பா', என்ற திருத்தநூல் இயற்றினார்கள்; ச. து. சு யோகியார் 'அகல்யா' என்ற திருத்தக்கவிதை பாடினார்கள்; புதுமைப்பித்தன் அவர்கள் ராமாயண பரிச்சயமுள்ளவர்களுக்குப் பிடிக்காதென்று தெரிந்தும், அதனைப் பொருட்படுத்தாமல் 'சாபவிமோசனம்' என்ற சிறுகதை எழுதினார்கள்; சும்மா கிடந்த வாய்க்கு அவல் கிடைத்த மாதிரி அவரவர்களும் கண்டகண்டபடி விமர்சிக்க ஆரம்பித்து விட்டார்கள். கல்வியில் பெரிய கவிச்சக்கரவர்த்தி கம்பன், அகலிகையை இந்த இழி நிலைக்கு ஆளாக்கியிருப்பானா? வான்மீகி படைத்த அஹல்யாவின் கோணலை நிமிர்த்தப் புகுந்தவன் முற்றும் கோணலாக்குவானா? பாத்திரத்தின் ஒடுக்கெடுக்கப் பாடுபட்டவன், பயன் படாதவாறு பாழாக்கி விடுவானா? என்று சிந்திக்க வேண்டும்.

'எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான்' என்பது பழமொழி. ஓலைச் சுவடிகளில் பெயர்த்தெழுதியவர்கள், வான்மீகத்தில் பதிந்து கிடந்த தங்கள் உள்ளத்தைப் பெயர்த்தெடுக்க சக்தியின்றி, அவர்கள் புலமையைப் பயன் படுத்திப் பாடவேறுபாடுகளோடு பெயர்த்தெழுதி விட்டார் கள் என்று கொள்ள வேண்டும். பாட வேறுபாடுகளால்தான் கருத்து வேறுபாடுகள் தோன்றின; விபரீதப் பொருள் விளைந்தது. பெயர்தெழுதியவர்கள் காவியம் படைத்த கவிஞனுடைய உள் மனத்தில் ஊன்றி நின்று, பாடபேத மின்றி மூல ஏட்டில் உள்ளதை உள்ளவாறே எழுதியிருந் தால் இந்த வேதனைப் பொருள் விளைந்திரா து.

''முள்ளை முள்ளைக் கொண்டுதான் எடுக்க வேண்டும்'' என்பது முதுமொழி. பாட வேறுபாட்டினால் விளைந்த கேட்டினைப் பாட வேறுபாடுகளைக் கொண்டே களைய முடியும். இனிக் கம்பனுடைய உள்மனத்தை உணர முற்படுவோம். அவ்வாறு உண்மையை உணர்தற்கு நிகழ்ச்சிக்குரிய சந்தர்ப்ப சூழ்நிலையை நம் மனக்கண்முன் நிறுத்துவோம்.

விசுவாமித்திரருடன் இராமலக்குவர் நிற்கிறார்கள். கல்லுருவாய்க் கிடந்து இராமனது பாததூளியால் பெண்ணுருவம் பெற்ற அகலிகை மூவருக்கும் அருகில் சற்று ஒதுங்கி நிற்கிறாள். அகலிகையின் சாப வரலாற்றினை விசுவாமித்திரனிடம் கேட்கிறான் ராமன். விசுவாமித்திரன் அகலிகை வரலாற்றினைக் கூறுகிறான்: —

''கோதமன் இல்லாத சமயம் பார்த்து, இந்திரன் கோதமனுடைய உருவெடுத்து ஆசிரமத்திற்குள் புகுந்தான்'' என்று கூறியதும் தொடர்ந்து நம் சிந்தனைக்குரிய பாடல் வருகிறது.

'புக்கு இவளோடும் காமப்
புதுமண மதுவின் தேறல்
ஒக்க உண்டு இருந்த போகும்
உணர்ந்தனள்; உணர்ந்தபின்னைத்

'தக்கது, அன்று' என்ன ஓராத்
தாழ்ந்தனள் இருப்ப, தாழா
முக்கணான் அனைய ஆற்றல்
முனிவனும் முடுகி வந்தான்''

இந்திரன் புகுந்து, இந்த அகலிகையோடு புதுமையான மதுவின் இன்பத்தையொத்த காமவின்பத்தை அனுபவித்தான். கணவனே வந்து கூடுகிறான் என்று அகலிகை உடன்பட்டு ஒத்திருந்தாள். அப்போது வழக்கத்திற்கு மாறான கூடலுணர்ச்சியின் வேறுபாட்டினை உணர்ந்தாள். உணர்ந்த பின்பு உண்மையை உணர அவளுடைய உள்ளம் அலை மோதியது. "கூடுகின்றவனோ கணவன்; உணர்ச்சியோ புதுமை. உணர்ச்சியில் வேறுபாடிருந்தாலும் கணவனோடு கூடுவதே தக்கது. உணர்ச்சி வேறுபாட்டினை உணர்ந்த பின்னும் ஐயப்படாமல் ஒத்துப் போவது தகாதது. தக்கதா? தகாததா?—தக்கதா? அன்றா? என்ற எண்ண அலைகள் மாறி மாறி அகலிகையின் உள்ளத்தில் எழுந்தன. இந்த மனப் போராட்டத்தின் காரணமாகச் சிறிது காலம் தாழ்ந்தது. இப்படிப்பட்ட தரும சங்கடமான நிலையில் மனப்போராட்டம் நிகழ்வது இயற்கைதானே. அகலிகையின் உள்ளத்தில் போராட்டம் நிகழ்ந்து கொண்டிருக்கும் போதே, காலந் தாழ்த்தலுக்கு இடமில்லாதவாறு முக்கண் கடவுளையொத்த கோதமனும் விரைந்து வந்து விட்டான். அகலிகை சிந்தித்துத் தாழ்த்த செயலும் முனிவன் தாழாது முடுகி வந்த செயலும் ஒரே நேரத்தில் நிகழ்ந்தன. இராமனும் சீதையும் ஒரே சமயத்தில் நோக்கிய நோக்கினை "அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்" என்று பாடினான் கம்பன். அதனைப் போன்றே இங்கு "அகலிகையும் ஓராத் தாழ்ந்தனள், முனிவனும் தாழா முடுகி வந்தான்." என்று கூறுகிறான். இது நிகழ்வது தழுவிய எச்ச உம்மை. 'முனிவனும்' என்பதில் உள்ள உம்மை, மறைந்து நிற்கும் அகலிகை என்ற சொல்லையும் தழுவி நிற்கிறது. அகலிகையின் சிந்தனைக்குப் போதிய அவகாசமே இல்லாமல் போயிற்று.

பாவம்! அகலிகையின் நிலையைப் பாருங்கள்! யார் குற்றவாளி? அகலிகையா? இந்திரனா? கயமைத்தனமாகக் கற்பழித்தவன் குற்றவாளியா? கற்பழிக்கப் பட்டவள் குற்ற வாளியா? நவகாளியில் கொடியவர்கள் கற்பழித்தபோது, அதனைக் கண்டு இரத்தக்கண்ணீர் வடித்த காந்தியடிகள், கற்பழிக்கப்பட்ட பெண்களைக் கன்னிப் பெண்களாகவே கருதி அவர்களுக்கு வாழ்வளிக்கும்படி வேண்டு கோள் விடுத்தாரே எதனால்? அவர்கள் மனத்தினால் மறுவுறா தவர்கள் என்ற காரணத்தினால்தானே! மகாத்மா காந்தி யடிகள் மனிதாபிமானப் பார்வையில் அந்த மகளிரை நோக்கினார். அந்தப் பார்வையை அகலிகை மீதும் செலுத்த வேண்டும். அப்போது, அட்டபாலும் சுட்டபொன்னும் போன்ற அகலிகையின் கற்புத் தூய்மை நமக்குப் புலப் படும்.

இந்திரன் சொந்த உருவில் வந்திருந்து, அவனுடைய இச்சைக்கு அகலிகை இசைந்திருந்தால், அவள் குற்றவாளி தான். உடலுறவின் வேறுபாட்டினை அவள் உணராமலிருந் தாலும் குற்றவாளிதான். முனிவன் முடுகிவராமலிருந்து, அவள் சிந்தனையில் நீண்ட நேரத்தைச் செலவிட்டிருந் தாலும் குற்றவாளிதான். பழிப்புக்கு ஆளாகாத அவளை எப்படிக் குறை கூறமுடியும்? மனித உணர்வுகளை உணராதவர்களா நாம்? கணவனே கண்கண்ட தெய்வம் என்று கருதி வாழ்ந்தவள் கற்பழிந்தவளா? ஒழுக்கங் கெட்டவளா? பொருளுக்கா தன் உடலை விற்றாள்? விலை மகள் அனையவளா அவள்? உணர்ச்சியற்ற கல்லைப் போன்று கூடலுணர்வின் வேறுபாட்டினை உணராமலா இருந்தாள்? கல்லுருக்கொண்டு கிடக்க வேண்டியவள்தானா அவள்? அகலிகையின் மனநிலையை உணரமுடியாமல் கணவன் என்ற உயர்வுச் செருக்கோடு, கோதமன் சர்வாதி காரமாகச் சபித்ததை நினைத்து வருந்த வேண்டியிருக் கிறது. இப்படித்தான் இராமனும், மங்கையர் மனநிலையை

உணரமுடியாமல் சீதையை ஏசிப்பேசினான். கணவன்மார்கள் தங்கள் மனைவியரை இரக்கமின்றி இழித்துப் பேசுவது அன்றுதொட்டு இன்றுவரை வாடிக்கை போலும்!

மானுடத்தின் வெற்றிக்கு, மானுடம் போற்றும் மாக்கதை பாடிய கம்பனென்ற மானிடன், மங்கையரின் மன நிலையை நன்கு உணர்ந்தே பாடினான். நெஞ்சினால் பிழைப்பில்லாத அகலிகையை ''மாசறு கற்பின் மிக்க அணங்கு'' என்று இராமனைக் கொண்டு சொல்லச்செய்தான். மிதிலை மதிலின் புறத்தே கருங்கல் மேட்டினைக் காட்டி, அகலிகைக் கதைக்கு அடிகோலும் போதே ''மனையின் மாட்சியை அழித்து இழிமாதவன் பன்னி'' என்று தன் கூற்றாகக் குறிப்பிடுகிறான். ''யானை முறித்து வீழ்ந்த மரம்'' என்பது போல ''இந்திரன் அழித்து இழிந்த அகலிகை'' என்று தெளிவாகச் சுட்டுகிறான். முறித்தது யானை; அதனால் வீழ்ந்தது மரம். அது போல் மனையின் மாட்சியை அழித்தவன் இந்திரன்; அதனால் இழிவு பெற்றவள் அகலிகை. அவள் செயல் பழிக்குரியது அன்று; ஆனால் அவள் பூண்டது பழி. நெஞ்சினால் பிழைப்பிலாள் அவள்; ஆனால் நெடும்பழி பூண்டாள்.

கம்பன் பாடல்களில் படிந்துள்ள பாட பேதங்கள் என்னும் தூசுகளைத் துடைத்துப் பார்த்தால் மாசு உண்ட மணியாய்க் காணப்படும் அகலிகை, மாசு இல்லா மணியாய்க் கற்பின் கனலியாய்-ஒளிவீசுவதைக் காணலாம்.

# தமிழ்க்கூடல் வாழ்க!

சொக்கநாதப் பெருமான் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள மதுரை மாநகருக்குக் 'கூடல்' என்ற பெயரும் உண்டு. கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோடு அமர்ந்து, பசுந்தமிழைப் பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த பதி அது. மதுரையம் பதியில் தமிழ்ப் புலவர்கள் கூடிச் சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்தார்கள். கற்றறிந்த சான்றோர்கள் கூடித் தமிழின்பம் துய்த்து வாழ்ந்த வாழ்வு, இனிமையான வாழ்வாக இருந்தது. 'தமிழ்' என்ற சொல்லுக்கு 'இனிமை' என்ற பொருளும் உண்டல்லவா? தெவிட்டாத இனிமை பயக்கும் தேன் தமிழைத் துய்த்துத் துய்த்துத் தீந்தமிழ்ப் புலவர்கள் மதுரை மாநகரில் மயங்கிக் கிடந் தார்கள். நான்மாடக்கூடல் மதுரை நெடுந் தெருக்களில் தேமதுரத் தமிழோசை நாளெல்லாம் முழங்கியது.

அமிழ்தினுமினிய தமிழின்பம் பெற்றவர்கள் மற்றொன்றில் அறிவைச் செலுத்துவார்களா? அமுதென்று சொல்லுகின்ற தமிழை வளர்ப்பதே அமர வாழ்வாகக் கருதிய புலவர்கள் கூடித் தமிழ்ப்பணி புரிந்த இடம் 'தமிழ்க் கூடல்' ஆயிற்றுப்போலும்!

தெள்ளூற்ற தமிழமுதின் சுவைகண்டு இங்கு அமரர் சிறப்புக் கண்டார்கள் தமிழ்ப் புலவர்கள். மதுரை மாநகரத் தில் மண்டிக் கிடந்த தமிழ் மயக்கத்தின் மகிமையை நன் குணர்ந்தான் கவிச்சக்கரவர்த்தி கம்பன். அவனுடைய

தமிழுணர்ச்சியைக் காவிய முழுதும் பல இடங்களில் வெளிப்படுத்தினாலும், ஓர் இடம் பளிச்சிட்டு ஒளிவிடு கின்றது. அந்த ஓர் இடம், கிட்கிந்தா காண்டம் நாடவிட்ட படலத்தில் வரும் ஒப்பற்ற இடமாகும்.

சுக்கிரீவன் அனுமனையும் அங்கதன் முதலியோரையும் சீதையைத் தேடித் திரும்பும்படி தென் திசைக்கு அனுப்பு கிறான். தென் திசைச் செல்லும் வானர வீரர்க்குச் சுக்கிரீவன் வழி கூறியனுப்புகிறான். பொதிகை மலையைக் கடந்து செல்ல வேண்டு மென்று கூறுகின்ற இடத்தில் பின்வருமாறு கூறுகிறான்.

> "தென்தமிழ் நாட்டு அகன் பொதியில் திருமுனிவன்
>   தமிழ்ச் சங்கம் சேர்கிற்பிரேல்,
> என்றும் அவன் உறைவிடம் ஆம்! ஆதலினால்
>   அம்மலையை இறைஞ்சி ஏகி,
> பொன் திணிந்த புனல்பெருகும் பொருநை எனும்
>   திரு நதி பின்பு ஒழிய, நாகக்
> கன்றுவளர் தடஞ்சாரல் மயேந்திரமா
>   நெடுவரையும், கடலும் காண்டீர்."

தென் திசைச் செல்லும் நீங்கள் தமிழ் நாட்டையடைவீர் கள். தமிழ் நாட்டின் தென்பகுதியில் அகன்ற பொதிய மலை இருக்கும்; அம்மலையில் அகத்திய முனிவனது தமிழ்ச் சங்கம் இருக்கும்; தமிழ்ச்சங்கத்தில் தமிழை வளர்க்கும் அகத்திய முனிவனும் தமிழ் அறியும் புலவர் களும் என்றும் இருப்பார்கள். ஆதலினால் அம்மலைக்கு அப்பாலிருந்தே வணங்கிவிட்டு, தாமிரபரணி நதியையும கடந்து சென்றால், மகேந்திர மலையையும் தென் கடலை யும் காண்பீர்கள். இது பாடலின் பொருள்.

"அகத்திய முனிவன் தமிழை வளர்க்கு மாறு தென்னாடு வந்து பொதிய மலையில் தங்கினான்.

அம்முனிவனுள்ள இடத்தில் தமிழ்ப் புலவர்கள் கூட்டமும் தங்கியிருக்கும்.

பொதிய மலைக்குச் சென்று அப்புலவர்கள் கூட்டத்தில் சேர்ந்து விட்டால் அந்தத் தமிழ்க் கூடலை விட்டுப் பிரிந்து வருவதற்கு மனம் வராது. மதுவுண்ட வண்டாக மயங்கி அம்மலையிலேயே தங்கிவிடும் நிலை ஏற்படும். இதனால், சீதையைத் தேடும் கடமையினின்று தவறி விடுவீர்கள். ஆகையால் அம்மலைக்குச் செல்லாமல் ஒதுங்கிச் செல்லுங் கள்" என்று வழி கூறுகிறான் சுக்கிரீவன்.

சுக்கிரீவன் கூற்றாகவரும் கம்பன் பாடலில், அவனுக் குள்ள தமிழ்மொழிப் பற்றுத் தெளிவாகின்றது. கம்பனுக் குள்ள தமிழ்ப் பற்றின் ஆழத்தை அளந்து கண்டதால் தான் பாட்டுக்கொரு புலவன் பாரதி, கவிச்சக்கரவர்த்தி கம்பனை உச்சிமீது வைத்து மெச்சினான் போலும்! கேட்டவரைக் கிறுகிறுத்துப் போகும்படி பாட்டெழுதிச் சிறந்தான் பாரதி. பாரதியோ, கம்பன் பாட்டிலே கிறு கிறுத்துப் போனான், கம்பனோ, பொதிகைப் புலவர்களின் தமிழைக் கேட்டால் கிறுகிறுத்து மயங்கிச் செயலிழப்பர் என்று பாடுகிறான்.

கள்ளையும் தீயையும் சேர்த்து—நல்ல
காற்றையும் வான வெளியையும் சேர்த்துத்
தெள்ளு தமிழ்ப் புல வோர்கள்—பல
தீஞ்சுவைக் காவியம் செய்து கொடுத்தார்

என்று பாடினான் பாரதி.

பொதிகை மலைப் புலவர்களின் தமிழ்க் கூடலில் கலந்துவிட்டால் கள்ளுக்குள்ள மயக்கத்தைத் தமிழ்க் காவியத்தால் பெறலாம் என்று கருதினான் கம்பன். ஆகையால்தான், சுக்கிரீவன் கூற்றில் தேன்சுவை சொட்டச் சொட்டப் பாடினான்.

யொதிகைத் தமிழ்ச் சங்கத்திற்குத் தலைவன் அகத்தியன். அகத்தியனுக்குத் தமிழை அறிவித்தவன் ஆதிசிவன். ஆதிசிவன் பெற்ற தமிழை அகத்திய முனிவன் இலக்கணத்தோடு வளர்த்தான்.

"ஆதிசிவன் பெற்றுவிட்டான்—என்னை
ஆரிய மைந்தன் அகத்தியன் என்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்தே—நிறை
மேவும் இலக்கணம் செய்து கொடுத்தான்."

தமிழன்னைக்கு இலக்கணம் செய்து கொடுத்துப் புலவர்களின் கூடலில் வளமாக வளர்த்த அகத்தியப் புலவனைக் கம்பன் தான் பாடிய காவியத்துள் ஒரு படலத்தையே அமைத்துப் போற்றுகிறான்.

அகத்தியப் படலத்துள் அங்கங்கே, தமிழ்முனி—மறு இலாத் தமிழ்முனி—தமிழ் முனிவன்—தமிழ்த் தலைவன்—தமிழ் எனும் அளப்பரும் சலதி தந்தவன் என்று அகத்தியனைக் குறிப்பிடுகிறான் கம்பன். மேலும்,

"நிழல் பொலி கணிச்சிமணி நெற்றி உமிழ் செங்கண்
தழல் புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்"

என்றும்,

"என்றும் உள தென்தமிழ் இயம்பி இசை கொண்டான்" என்றும் போற்றுகிறான். இறுதியாக மீட்சிப் படலத்தில், சீதையைச் சிறைமீட்டு இலங்கையிலிருந்து புட்பக விமானத்தில் அயோத்திக்குத் திரும்பும் இராமன்,

"இது தமிழ்முனிவன் வைகும் இயல்தரு குன்றம்"

என்று பொதிய மலையைக் காட்டுவதாகப் பாடுகிறான் கம்பநாடன்.

அகத்திய முனிவனைப் பாடுவதன் வாயிலாகத் தன்னுடைய தமிழார்வத்தைக் காட்டும் கம்பன், அயோமுகிப்படலத்திலும் அதனை வெளிப்படுத்துகிறான். சீதையின் பிரிவால் தூக்கம் இன்றித் துயரால் நலியும் இராமன் ஒருநாள் இரவு பெருமலையொன்றில் தங்குகிறான். அப்போது, முழு வெண்ணிலவு விண்ணிலே தோன்றுகிறது.

''பொதிகை மலை விட்டெழுந்து சந்தனத்தின்

புது மணத்தில் தோய்ந்து, பூந்தாது வாரி,
... ... ... .... ... .... ... ... ... ...
.... .... ... .... ... ... ... ... ... ...
சிந்தை உடல் அணு ஒவ்வொன்றும் சிலிர்க்கச்
செல்வம் ஒன்று வரும். அதன் பேர் தென்றற்காற்று''

என்று பாவேந்தர் பாடிக் களித்தார். அப்படிப் பாடிக் களித்த பொதிகை, தென்றல் தவழும் மலைச் சாரலில் தங்கியிருக்கும் இராமனுக்குச் சீதையின் முகத்தைக் காட்டி நினைவுபடுத்துவது போன்றிருந்தது அவ்வெண்ணிலவு. குளிர் பூந்தென்றலில் தன் தலைவியோடு கூடியிருந்த காலத்துச் சுகத்தை நினைந்து வேதனைப்படும் இராமனுக்கு இவ்வெண்ணிலவும் வேதனையை இரட்டிப்பாக்கி விட்டது. தென்னாடு பெற்ற பெருஞ் செல்வமான தென்றலைத் 'தண் தமிழ்த் தென்றல்' என்று கொண்டாடுகிறான் கம்பன்.

வண்டு உளர் கோதை சீதை
வாள் முகம் பொலிய வானில்
கண்டனென் என்று வீரர்க்கு
ஆண்டுஒரு காதல் காட்ட
தண்தமிழ்த் தென்றல் என்னும்
கோள்அராத் தவழும் சாரல்
விண்தலம் விளக்கும் செவ்வி
வெண்மதி விரித்தது அன்றே

இந்தப் பாடலின் மூலம், மங்கை ஒருத்தி தரும் சுகத்தைத் தண்தமிழ்த் தென்றலில் காட்டுகிறான் கம்பன்.

மங்கையின் சுகத்தை மறப்பவர் உண்டா?
மறுப்பவர் உண்டா?
மாத்தமிழின் சுவையை மறுப்பவர் உண்டா?
மறப்பவர் உண்டா?

தமிழ் இன்பத்தைக் காட்ட மேலும் ஒரு காட்சி பம்பை வாவிப் படலத்தில் வருகிறது. சீதையைப் பிரிந்து வருந்தும் இராமன் பம்பைப் பொய்கைக் கரையிலே நிற்கிறான். பொய்கையின் காட்சிகள் அனைத்தும் சீதையின் நினைவைத் தூண்டிவிடுகின்றன. பொய்கையில் பூத்த தாமரையும் தூண்டுகிறது. தாமரையைப் பார்த்துப் பின்வருமாறு பேசுகிறான்.

“என் மனைவி சீதை திருமகளின் அவதாரம். திருமகள் உன்னிடத்தில் தான் இருப்பாள். என்னைப் பிரிந்த சீதை உன்னிடத்திலன்றி வேறு எங்கும் இருக்க மாட்டாள். அவளை மறைத்து வைத்துக் கொண்டு ‘என்னிடத்தில் இல்லை’ என்று சொல்லும் உன்னோடு எனக்கு உறவே வேண்டாம்” என்று பேசுகிறான் இராமன்.

இராமன் தாமரையைப் பார்த்ததும் சீதையின் நினைவு வந்ததால் அதனை உயர்த்திப் பேசி விளிக்கிறான்.

“பொன்பால் பொருவும் விரை அல்லி
புல்லிப் பொலிந்த பொலந்தாது
தன்பால் தழுவும் குழல் வண்டு
தமிழ்ப்பாட்டு இசைக்கும் தாமரையே!
என்பால் இல்லை! அப்பாலோ
இருப்பார் அல்லர்; விருப்புடைய
உன்பால் இல்லை என்றபோது
ஒளிப்பா ரோடும் உறவுண்டோ”

தேன் நுகர் வண்டு, தாமரையைக்கண்டு, மதுவினை உண்டு தமிழ்ப்பாட்டு இசைக்குமாம். தமிழ்ப்பாட்டு என்பதற்கு 'இனிமையான பாட்டு' என்றும் பொருள் கொள்ளலாம் செவிக்கும் சிந்தைக்கும் இனிமை தரும் பாட்டு, தமிழ்ப் பாட்டாகும். சீகாமரம் என்ற பண்ணோடு ரீங்காரம் செய்யும் கருவண்டுகள் தாமரை மலரின் எதிரே பறந்து தமிழ்ப் பாட்டிசைக்கின்றதாகவே கம்பன் பாடுகிறான்.

''தவல் அரும் தொல்கேள்வித் தன்மை உடையார்
இகல்இலர்; எஃகு உடையர், தம்முள் குழீஇ
நகலின் இனிது ஆயின் காண்பாம்; அகல் வானத்து
உம்பர் உறைவார் பதி''

என்று நாலடியார் நவிலுகின்றது. கற்றவர்கள் கூடும் கூடல் சுவர்க்கத்தினும் சிறந்தது எனபதை இவ்வெண்பா வெளியிடுகின்றது. சுவர்க்கத்தினும் சிறந்தது தமிழ்ப் புலவர்கள் கூடும் 'தமிழ்க் கூடல்'. ''யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்'' என்ற பாரதியின் பொன் மொழியை நினைந்து இந்த உண்மையை உணர வேண்டும்.

தென்றலைப் போன்ற மென்மையும் இசையோடு கூடிய இனிமையும் கொண்ட மொழி தமிழ்மொழி. தமிழ்ப் புலவர்கள் கூடும் இடம் 'தமிழ்க் கூடல்.' தமிழ்க் கூடலின் மென்மையும் இனிமையும் என்றும் இருந்து விளையாடும். அன்று மதுரையில் இருந்த தமிழ்க் கூடலிலும், தென்றல் தவழும் பொதிகையில் திகழ்ந்த தமிழ்க் கூடலிலும் புலவர்கள் தாலாட்ட தமிழ் மகள் மகிழ்ந்து விளையாடினாள். இன்றும் புதுவை மாநகரில் விளங்கும் தமிழ்க் கூடலிலும் அவள் மகிழ்ந்து களிநடம் புரிகிறாள்.

பொதிகைத் தமிழ்க் கூடலுக்குத் தலைவன் அகத்திய முனிவன், மதுரைத் தமிழ்க் கூடலுக்குத் தலைவன் சொக்கநாதப்பெருமான், புதுவைத் தமிழ்க் கூடலுக்குத் தலைவன் சொக்கநாதப் புரவலன்.

தந்தை அருள்வலியாலும்—முன்பு
சான்ற புலவர் தவவலி யாலும்
இந்தக்கணமட்டும் காலன் என்னை
ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சியிருந்தான்.

என்று அன்று பாடி மகிழ்ந்த தமிழ்த்தாய் இன்றும் ஆனந்தக் களிப்போடு பாடிக் கொண்டிருக்கிறாள்.

“தந்தை அருள்வலியாலும்—இன்று
சார்ந்த புலவர் தவவலி யாலும்
இந்தப் பெருஞ்சிறப் போடு—புகழ்
ஏறிப் புவிமிசை என்றும் இருப்பேன்”

தமிழன்னையின் குழலினுமினிய குரலோசை இது.

தமிழ்க் கூடல் வாழ்க!

# அறிவு தந்து அருளினான்

வாழைப்பழத்தில் ஊசி நுழைவது போல், வாலியின் மார்பில் இராம பாணம் பாய்ந்தது. சண்டமாருதத்தால், மேருமலை நிலைபெயர்ந்து விழுவது போல, இராம பாணத்தால் வாலி நிலை பெயர்ந்து விழுந்தான். சுக்கிரீவனைப் பற்றிய வாலியின் கைப்பிடி நெகிழ்ந்தது; இராமன் அம்பினை நெகிழாமல் பற்றிக்கொண்டது. தன்னுடைய உடலில் பாய்ந்த அம்பு ஊடுருவிச் செல்லாதவாறு, கைகளால் பற்றி, வாலினால் சுற்றி, கால்களால் உந்தி உதைத்துப் பறித்துவிட்டான் வாலி. இராமனுடைய வாளி, வாலியின் கைக்கு வந்துவிட்டது. பறித்த வாளியை முறிப்பதற்கு வாலி முயன்றபோது, 'இராமன்' என்ற பெயர், அம்பிலே பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டான்.

''மும்மைசால் உலகுக்குஎல்லாம்
மூலமந்திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்குநல்கும்
தனிப்பெரும் பதத்தை, தானே
இம்மையே எழுமைநோய்க்கும்
மருந்தினை, 'இராமன்' என்னும்
செம்மைசேர் நாமம்தன்னைக்
கண்களில் தெரியக் கண்டான்''

'இராமன்' என்னும் திருப்பெயர், அம்பிலே பொறித்திருப்பதைக் கண்டதும், வாலி பெரிதும் நாணமுற்று வருந்தி

னான். மறைந்து நின்று தாக்கியதற்குத், தாக்கிய இராமன் நாணமுற வேண்டியிருக்க, தாக்குண்ட வாலி ஏன் நாண முற்றான்?

வாலி, சுக்கிரீவனோடு போரிடப் புறப்பட்டபோது, வாலியின் மனைவி தாரை தடுத்தாள். "இராமன் என்பவன், உன் தம்பிக்குத் துணையாக வந்திருப்பதாக, நம்மிடத்து அன்புடையவர்கள் சொன்னார்கள்" என்றாள். அதற்கு வாலி,

"தம்பியர் அல்லது தனக்கு வேறுஉயிர்
இம்பரின் இலது' என எண்ணி ஏய்ந்தவன்
எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரினில்
அம்புஇடை தொடுக்குமோ,அருளின் ஆழியான்?'"

என்று, நம்பிக்கையோடு பேசினான். தாரையின் தடுப்பைத் தட்டிக் கழித்துப் போருக்குப் புறப்பட்டவன் வாலி. கருணைக்கடல் என்று எந்த இராமனைக் கருதி னானோ, அந்த இராமனே இப்படி வில்லறம் துறந்து விட்டானே! என்று வாலி வேதனைப்பட்டான்; வெட்கப் பட்டான்; தலை குனிந்தான்; வெடிவெடியென்று சிரித்தான்.

'இராமன் முறை தவறிவிட்டானே!' என்று வருந்து கின்ற வாலியின்முன்னே, கமலம்பூத்த கார்முகில் போன்று, காகுத்தன் வந்து நிற்கிறான். இராகவனைக் கண்டதும், வாலியின் உள்ளத்தில் எரிச்சல் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கிவிட்டது. இராமனை நோக்கி, 'நீ என்ன நினைத்து என்ன செய்தாய்?' என்று தொடங்கிப் பின்வரு மாறு, இகழ்ந்துரைக்கத் தொடங்கிவிட்டான்.

இராமா! உன் தந்தை தசரதன், வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்தவன். உன் தம்பி பரதனோ அண்ணன் அரசாள வேண்டும் என்பதற்காகவே துறவுக் கோலம் கொண்டவன். இவர்கள் இருவருக்கிடையில், சூரிய

குலத்துக்குக் களங்கம் ஏற்படுத்த, நீ எப்படித் தோன்றினாய்? சந்திரனுக்குக் களங்கம் இருப்பதுபோன்று சூரியனுக்கும் களங்கம் ஏற்படுத்த வேண்டுமென்று கருதி, நீ ஒருவன் பிறந்து உன் குலத்திற்குக் களங்கம் ஏற்படுத்திவிட்டாய் போலும்!

சித்திரத்தில் எழுதமுடியாத வடிவழகனே! ஆவி போன்றவளை, சனகன் பெற்ற அன்னம் போன்றவளை, அமிழ்தம் போன்ற சீதாதேவியைப் பிரிந்த குழப்பத்தில், அரசநீதியைச் சிதைத்து விட்டாயோ? உன் மனைவியைக் கவர்ந்தவனைக் கண்டுபிடித்து, அவன் உயிரைக் கவர்வதை விடுத்து, உன் வீரத்திற்கு இழுக்குண்டாகும்படி, மறைந்து நின்று, நிராயுதபாணியின் மார்பில் அம்பு எய்வதற்கா விற்றொழில் கற்றனை? அரக்கர் ஓர் அழிவு செய்தார் களானால், அதற்காக வேறு ஓர் குரக்கினத்து அரசைக் கொல்ல மனுநீதி சாத்திரம் கூறியதுண்டோ? வீரக் கழலையும் வெற்றி மாலையையும் அணிந்த வீரர்கள் பேடிச் செயலைச் செய்தாலும் பராக்கிரமச் செயல் என்று பாராட்டுகின்ற உலகில், நீ, என்மீது அம்பு எய்ததும் பராக்கிரமச் செயல்தானா? அப்படியென்றால், இராவணன் சீதையைச் சிறையெடுத்ததும் பாராட்டு க்குரிய பராக்கிரமச் செயல்தானா? இராவணனை அழித்தற்குச் சுக்கிரீவனது துணை வேண்டி, நீ இந்த இழிசெயலைச் செய்துவிட்டாய்! சிங்கத்தைக் கொண்டு யானையைக் கொல்வதை விடுத்துச் சிறுமுயலைக் கொண்டு யானையைக் கொல்ல முயல்வதற்கு ஒப்பானது உன்செயல். என் ஆற்றலுக்கு அஞ்சி, கோழைத் தனமாக மறைந்து நின்று அம்பெய்துவிட்டு, நான் நிலை தடுமாறிக் கிடக்கும் போது, நீ சிங்கத்தைப் போன்று வந்து, என் எதிரில் நிற்கின்றாய் போலும்!

கொற்றவனே! ஒத்த உறவுடைய இருவர், ஒருவரோ டொருவர், போரிடும் போது, இருவரையும் சமமாகப் பாவிக்காமல், ஒருவர்மீது கருணை காட்டி, மற்றொருவர் மீது

மறைந்து நின்று அம்பெய்தல் தருமமா? நீ சொல்லும் தருமம் எல்லாம், ஊருக்கு உபதேசம்தானா? உனக் கில்லையா? நீ அதர்மம் செய்தாலும் தர்மமாகிவிடுமா? தரும சாத்திரத்தின் முறைமையையும், நீ போற்ற வேயில்லை. ஆதலால் நீ வாலியை மட்டும் அழிக்கவில்லை. அரச தருமத்தின் வேலியையயே அழித்துவிட்டாய்!

அப்பனே! ஒழுக்கம் என்பது, மெலியவர்களுக்குத் தான் சொந்தமோ? வலியவர்களுக்கு இல்லையோ? உன்னிட முள்ள இரக்க குணத்தை எங்கே தொலைத்தாய்? என்னிடம் என்ன குறை கண்டாய்? நீயே இந்தப் பெரும் பழியைச் செய்தால், புகழை யார் பாதுகாப்பது? உன்னுடைய செயல், விரமன்று; வேத விதியுமன்று; நின் மண்ணினுக்கு என் உடல் பாரமன்று; நான் உனக்குப் பகையுமன்று. இவ்வாறு இருக்கையில், நெஞ்சில் ஈரமில்லாமல், என்மீது அம்பு எய்ததன் காரணம் என்ன?

வெற்றிவீரனே! உன் தந்தை உனக்குத் தந்த அரச பதவியை, உன் தம்பிக்குக் கொடுத்து, நாட்டிலே ஒரு தரும காரியத்தைச் செய்தாய்! அதே போல், எனக்குரிய அரச பதவியை, என் தம்பிக்குக் கொடுத்துக் காட்டிலேயும் ஒரு தரும காரியத்தைச் செய்தாய்! இவற்றிற்கும் மேலான புதுமை உண்டோ?

இவ்வாறு வாலி கண்கள் சிவந்து தீப்பொறி பறக்க, பற்களை நறநற வென்று கடித்துக்கொண்டு இராமனை எரிச்சலோடு ஏசினான். வாலியின் ஏச்சுக்களை நிதானத்தோடு வாங்கிக்கொண்ட இராமன், வாலிக்கு சமாதானம் சொல்லுகிறான்.

"மாயாவியோடு போரிடுவதற்குப் பாதாள வழி யினுள்ளே சென்ற நீ, நெடுங்காலமாகியும் திரும்பவில்லை. உன் பிரிவினால் சோகமடைந்த சுக்கிரீவன், உன்னைத் தேடிக்கொண்டு, நீ சென்ற வழியிலே செல்லத் தொடங்கி

னான். உடனிருந்த பெரியோர்கள், உன் தம்பியைத் தடுத்து நிறுத்தித் தங்கட்கு அரசனில்லாக் குறையைத் தீர்க்கும்படி வேண்டினார்கள். என் அண்ணனை வானம் ஆளவைத்த மாயாவியை தானும் மாளச்செய்து, நானும் மாள்வேன் என்றான் சுக்கிரீவன். படைத்தலைவர்களும், அமைச்சர் களும் மற்றுமுள்ள பெரியோர்களும் வற்புறுத்தி வேண்டிச் சுக்கிரீவனுக்கு முடிசூட்டினார்கள். சுக்கிரீவனும் வேண்டா வெறுப்பாக ஏற்றுக்கொண்டான். மாயாவியைக் கொன்று நீ திரும்பி வந்ததும், உனக்குரிய முடியை உனக்குச் சூட்ட வேண்டியும் நீ ஏற்றுக்கொள்ளாது அவன்மீது சினந்து, அவனை அண்டத்தளவும் துரத்திச் சென்றாய். அவனும் நாற்றிசை எல்லையளவும் ஓடி, பாதுகாப்புக் கிடைக்காத தால் இந்த உருசியமுக மலையைச் சேர்ந்தான். நீயும் மதங்க முனிவரது சாபத்திற்கு அஞ்சி, அந்த மலைப்பக்கம் சேராது திரும்பினாய். மதங்க முனிவர் உனக்கு இட்ட சாபம் சுக்கிரீவன் உயிரைக் காத்தது.

மற்றொருவனுடைய மனைவியின் கற்பைக் கெடாது காப்பதுதான் அன்பின் செயல்; கற்றவன் செயல்; நற்குடிப் பிறப்பின்பயன்; வீரத்தின் பயன். வீரராக விளங்குவோர், மனம் போன போக்கில் மெலியவர்களை நலியச் செய்தால், அவர்கள் பராக்கிரமத்தினின்று தவறியவர்களாவர். தருமத் தின் தகுதியையும், இருமைப் பயன்களையும் எண்ணாமல், அருமைத் தம்பியின் மனைவியைக் கவர்ந்தாய், ஆதலாலும், சுக்கிரீவன் என் ஆருயிர்க் காதலன் ஆதலாலும், உன்மீது அம்பெய்தேன்' என்று வாலி செய்த தவற்றைச் சுட்டிக் காட்டினான் இராமன்.

இராமன் கூறிய குற்றச்சாட்டுக்கு வாலி பதில் கூறுகிறான்:-

''வெற்றி வீரனே! ஐயா! 'தகாத செயல்கள்' என்று நீ கூறிய அனைத்தும் நாங்கள் விரும்பிச் செய்யும் சேயல் களே யாகும். உங்கள் குலமாதர்க்கு உள்ளது போன்ற

பதிவிரதாதருமம், எங்கள் வானர மகளிர்க்கு இல்லை. 'திருமணம் செய்துகொண்டு தான் அவரோடு கலத்தல் வேண்டும்' என்ற நியதியோடு பிரமன் எங்களைப் படைக்க வில்லை. மனம்போன போக்கில் நடக்கும் ஒழுக்கமல்லாமல், வேதமார்க்க விதிப்படி நடக்க வேண்டுமென்ற நியதி எங்களுக்கு இல்லை. எங்களுடைய வானரச் சாதியின் தன்மைப்படி, நான் செய்ததில் குற்றமன்று'' என்று சொன்னான் வாலி.

வாலியின் வார்த்தைக்கு, மீண்டும் சமாதானம் சொல்லு கிறான் இராமன்:-

நீங்கள் வானரர்களானாலும், நீ, சுக்கிரீவன், அனுமன் ஆகிய மூவரும் தேவர்களுக்குப் பிறந்தவர்கள், உங்களை விலங்குச் சாதியரல்லர் என்று புரிந்து கொண்டேன். உருவி னால், நீ வானரம் போல் இருந்தாலும், அறிவினால் மனிதனைப் போல் உள்ளாய். தருமத்தைப்பற்றி நன்கு அறிந்திருந்தும், தகாத செயல்களைச் செய்தாய். மடுவிலே முதலை தன்னைப் பற்றி இழுத்தபோது, 'ஆதிமூலமே' என்று அழைத்த யானையும் விலங்கா? இராவணன் சீதையைச் சிறையெடுத்துச் செல்லுங்கால், இடையே வந்து இராவணனோடு போரிட்டுத் தெய்வ மரணமடைந்த என் தந்தை சடாயுவும் பறவையா? இது நல்லது, இது கெட்டது என்று அறியும் பகுத்தறிவு இல்லாமையன்றோ விலங்கின் இயல்பு! இப்போது உன் வாயிலிருந்து வந்த சொற்கள், உனக்குள்ள பகுத்தறிவைப் பளிச்செனக் காட்டிவிட்டன. நீதிநூல் வழியில் நின்று, ''இவை தகுதியுடையவை இவை தகுதியற்றவை'' என்று ஆராய்ந்தறியும் அறிவு இல்லை யென்றால், உயர்ந்த மனிதர்களும் விலங்குக்கு ஒப்பாவர். ஆராய்ந்தறியும் அறிவு பெற்றிருந்தால். இழிந்த பிறப்பாகிய விலங்குகளும் தேவர்களுக்கு ஒப்பாகும்.

"தக்க இன்ன, தகாதன இன்ன என்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள
மக்களும் விலங்கே; மனுவின் நெறி
புக்கவேல், அவ்விலங்கும் புத்தேளிரே."

"நீ, சிவபெருமானிடத்து பக்தி செலுத்தி, வரபலம் பெற்றவன். இந்த உலகில் இழிந்த தரப்பின்ரும் அற வழியைச் சார்ந்து உயர்ந்திருக்கிறார்கள். அவ்வாறே, உயர்ந்த பிறப்பினரும், அறவழியகன்று தாழ்ந்திருக்கிறார் கள். ஆகையால் எந்தக் குலத்தில் பிறந்தவர்களாயினும், உயர்வும் தாழ்வும் அவரவர்கள் செயல்களாலேயே வரும். இவை எல்லாவற்றையும் நீ நன்கு உணர்ந்திருந்தும், அயலான் மனைவியின் கற்பை அழித்தாய்," என்றான் இராமன்.

இராமன் கூறியவற்றை அமைதியோடு கேட்டுக் கொண் டிருந்த வாலி, தான் செய்தது தவறு என்பதை உணர்ந்து ஒப்புக் கொண்டான். இருப்பினும் இராமன், தவறு செய்த வனைத் தண்டிக்க, நேர் நின்று அம்பு எய்யாமல், வேட்டு வனைப் போல் மறைந்து நின்று அம்பு எய்ததன் காரண மென்ன? என்று வினவினான். வாலியின் வினாவுக்கு இலக்குவன் விடை கூறுகிறான்.

இது நேரம் வரையில், வாலியின் வினாவுக்கு இராமன் பதில் கூறிக் கொண்டு வந்தான். இப்போது, வாலியின் வினாவுக்கு இலக்குவன் விடை கூறக் காரணமென்ன? என்ற சந்தேகம் எழலாம். இராமனால் பதில் சொல்ல முடி யாத வினாவுக்கு, ஒரு போலிச் சமாதானத்தை இலக்குவன் கூறுவதாகக் கூடக் கருதலாம்.

தன்னிடம் அடைக்கலம் புகுந்தார்க்கு, அடைக்கலம் அருளும் அருளுள்ளம் கொண்டவன் காகுத்தன். தன்னு டைய கருணையுள்ளத்தைத் தானே எடுத்துச் சொல்லுதல் தற்புகழச்சியாகும் என்று, வாலியின் வினாவுக்கு விடை

சொல்லத் தயங்கினான் இராமன். இராமனுடைய தயக்கத்தின் காரணத்தை நன்கு உணர்ந்த இலக்குவன் அண்ணனுக்காகத்தானே முன் வந்து மறுமொழி பேசுகிறான்.

''முன்பு, நின்தம்பி வந்து
சரண்புக முறை இ(ல்) லோயைத்
'தென்புலத்து உய்ப்பன்' என்று
செப்பினன்; செருவில் நீயும்
அன்பினை உயிருக்கு ஆகி
'அடைக்கலம் யானும்' என்றி
என்பது கருதி அண்ணல்
மறைந்து நின்று எய்தது'' என்றான்.

''முன்பு, உன் தம்பி சுக்கிரீவன் இராமனிடம் சரணடைந்த போது, முறை தவறிய உன்னைக் கொன்று, குறை தீர்ப்பதாக வாக்குறுதி தந்துவிட்டான் இராமன். இன்று, உன் எதிரில் நின்று அம்பெய்தால், நீஉன் உயிருக்கு அஞ்சி, அந்த இராமனிடமே அடைக்கலம் வேண்டினால், இராமன் என்ன செய்வான்? உனக்கும் அடைக்கலம் தந்தால், உன் தம்பிக்குத் தந்த வாக்குறுதி தவறிவிடும். நீ சரணடைந்த பிறகு உன்னைக் கொன்றால், சரணாகதி தருமம் பழுதுபடும், இந்தத் தர்ம சங்கடமான நிலையினின்று தன்னைக் காத்துக் கொள்ளவே இராமன் மறைந்து நின்று அம்பு எய்தான். மேலும் இராமன், வாலியாகிய உன்னோடு சண்டை செய்யவில்லை. சண்டை செய்திருந்தால் நேர் நின்று செய்திருப்பான். உனக்குத் தண்டனையைத் தான் அளித்தான். தண்டனையை எவ்வாறேனும் அளிக்கலாம்'' என்று இலக்குவன் காரணம் கூறினான்.

வாலி, 'செவியுறு கேள்விச் செல்வன்' ஆகிய காரணத்தால், இலக்குவன் சொன்னவற்றை மனத்தில் பதியும்படி வாங்கிக் கொண்டான்; தன்னுடைய குற்றத்தை உணர்ந்

தான; அறத்தின் மூர்த்தி, தன்னைத் தண்டித்ததாகவே கருதி, சீற்றம் ஒழிந்தான்; இராமனுடைய திருவடிகளில், தன் முடிபடும்படி விழுந்து வணங்கினான்; பின்வருமாறு பேசினான்:—

"தாய் என உயிர்க்கு நல்கி, தருமமும், சால்பும்;
நீஎன நின்ற நம்பி! நெறியினின் நோக்கும் நேர்மை,
நாய்என நின்ற எம்பால், நவைஅற உணரலாமே?
தீயன பொறுத்தி" என்றான் சிறியன சிந்தியாதான்

இது நாள் வரை, இவ்வுலக சிற்றின்பம் விழைந்து, அற்ப காரியங்களில் மனம் செலுத்தியிருந்த வாலி, இன்று, வீடு பேறளிக்கும் பேரின்பச் செயல்களில் மனம் செலுத்திச் சிறியன சிந்தியாதவனாகி விட்டான். ஆகையால்தான், தான் செய்த தீய செயல்களைப் பொறுத்து மன்னித்தருளும் படி இராமனிடம் வேண்டினான். இப்போது வாலி சேயாகக் கிடந்து, இராமனைத் தாயாகக் கருதி வேண்டுகிறான். குழந்தை செய்த தவற்றைப் பொறுத்தாற்றிக் கொள்வது தாயின் கடமை. அதனால்தான், "நீதியும் நடுவு நிலைமையும், நற்குண நிறைவும் நீயேயாகி நின்ற தாய் போன்றவனே!" என்று இராமனை அழைத்தான் வாலி. மேலும், 'எந்தையே!' என்றும் 'பிறவி நோய்க்கு அருமருந்து அனைய ஐயா!' என்றும், 'வரந்தரு வள்ளால்!' என்றும் விளித்தான். 'நாயினும் கடைப்பட்ட நான், இது நேரம் வரை ஏசிய ஏச்சுக்களை மனத்துக் கொள்ளாது மறந்து விடுக!' என்று வேண்டுகிறான்.

சற்று நேரத்திற்கு முன்பு வரை, வாலியின் அறிவு செயல்பட்டுக் கொண்டிருந்தது. அதனால் தான், தன் மார்பில் அம்பு எய்த இராமன் மீது, கேள்விக் கணைகளைத் தொடுத்தான். இராமன் கூறிய சமாதானத்திற்குப் பிறகு வாலியின் மெய்யறிவு வேலை செய்யத் தொடங்கி விட்டது. வாலி, உண்மையை உணரத் தொடங்கி விட்டான். இப்போது இராமன் வாலிக்கு ஞான குருவாகி விட்டான்.

ஞானகுருவாகிய இராமன், அம்பு எய்து, வாலிக்கு அறிவு புகட்டினான். ஓர் ஆசிரியர், தன்னுடைய நன் மாணவனுக்கு அன்போடு அறிவு புகட்டுவார்; அடங்காத மாணவனுக்குத் தலையில் குட்டியோ, பிரம்பால் தட்டியோ அறிவுபுகட்டுவார். அதுபோல, இராமன், கூர்மையான அம்பு எய்து வாலிக்கு அறிவு புகட்டினான். தன்னை வளர்த்த வன், தன் மீது வேல் எறிந்தாலும் வாலைக் குழைத்து அவன் மீது அன்பு காட்டும் நாய் போல, தன்மீது அம்பு செலுத்தித் தண்டனை தந்த இராமன் மீது, வாலி பக்தி செலுத்தத் தொடங்கி விட்டான். இன்னும் சற்று நேரத்தில், வாலியின் ஆவி பிரியப்போகிறது. ஆவிபிரிவதற்கு முன்னே, நல்லறிவு பெற்று விட்டான் வாலி. அம்பு எய்தி, இராமன் அறிவு புகட்டாவிட்டால், வாலி மெய்யறிவு பெறாதவனாகவே இறந்திருப்பான். தனக்கு மெய்யறிவு தந்தருளிய ஞான குருவை, வாழ்த்தி வணங்குகிறான் ஞானவாலி.

ஏவுகூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்
ஆவிபோம் வேளைவாய் அறிவுதந்து அருளினாய்!
மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!
பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ!

இராமனைத் துதித்துப் பாடும் வாலியின் வழிபாட்டில், அவனுடைய பக்தியின் ஆழமும் அகலமும், நமக்குத் தெளி வாகத் தெரிகின்றன. பல நாட்கள் வருந்திப் பெற வேண்டிய மெய்யறிவை, ஒரே அம்பின் மூலம், ஒரே நொடியில் பெற்று விட்டான் வாலி. தனக்கு அறிவு புகட்டிய இராமபிரானை முற்றும் உணர்ந்து விட்டான். தன் மார்பில் பாய்ந்த அம்பைப் பறித்ததும் இராமன் என்னும் செம்மை சேர் நாமத்தைக் கண்டான். சற்று நேரத்திற்குப் பிறகு தசரத ராமனையே கண்களால் கண்டான். இப்போது, மும்மூர்த்தி களையும் இராமன் என்ற ஓர் உருவில் காணுகிறான். இல்லை! இல்லை!, மூவருக்கும் முதல்வனாகிய பரம் பொருளையே காணுகிறான். வாலியின் ஞானக் கண்களின் முன்னே இப்போது நிற்பவன் ஆதி மூர்த்தி.

ஓர் ஆசிரியர், தன் மாணவனுக்குப் புகட்டிய பாடத்தை மாணவன் ஆசிரியரிடமே ஒப்புவித்து, மகிழ்ந்து மகிழ்விப்பது போல, ஞானவாலி, தன் ஞான குருவாகிய இராமபிரானிடம் தான் உணர்ந்து கொண்டவற்றை ஒப்பு விக்கிறான்.

அடியேனுக்கு ஞானவிளக்கு ஏற்றிவிட்ட நாயகனே! இராமா! நீ, மலரின் மணம் போல எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறாய்! படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களையும் புரியும், ''மூவர் நீ!''-மும்மூர்த்தி களும் தனித்தனியே செய்யும் தொழில்களை, நீ ஒருவனா கவே செய்ததால், மூவர்க்கும் முதல்வனாகிய, பரம் பொருளாகிய, ''முதல்வன் நீ!''-உலகத்தில் உள்ள, அசையும் பொருள், அசையாப் பொருள் என்று காணப்படும் பொருட் கள் அனைத்திலும் நீயே நீக்கமற நிறைந்திருப்பதால், ''முற்றும் நீ!''- உலகில், அறிவுக்கு எட்டாமல், காணப் படாமல் எவையேனும் இருந்தால், அவற்றிலும் நீ நிறைந் திருப்பாய் ஆதலால், ''மற்றும் நீ!''.

நல்லறிவு பெற்ற வாலி, தன்னுடைய ஞான ஒளி வீச்சி னால், இராமபிரானை, ''மூவர்நீ! முதல்வன்நீ! முற்றும்நீ! மற்றும்நீ!''என்று கண்டுகொண்டு வழிபட்டதிலே நாம் பெரு வியப்படைகிறோம். எல்லாவற்றிற்கும் மேலாகப் பக்தியின் உச்சநிலையிலே நின்று, வாலி, ''பாவம்நீ! தருமம்நீ! பகை யும்நீ! உறவும்நீ!'' என்று சொல்வதால், நம்மையெல்லாம் பிரமிக்க வைத்து விடுகிறான். பாவமும் தருமமும் ஒன்றுக் கொன்று எதிர் மறையானவை. அதேபோல், பகையும் உறவும் ஒன்றுக்கொன்று எதிர் மறையானவை. ஒன்றுக்கு ஒன்று எதிர் மறையான இரண்டு பண்புகளுக்கு உறைவிட மாக இராமன் இருப்பது எப்படி? என்ற சந்தேகம் நம் உள்ளத்தில் எழுகிறது. நம்முடைய சந்தேகம் நீங்க, வாலியினுடைய ஞானப் பார்வையைப் பெற்று, நாம் இராமனைக் காண வேண்டும், வாலியினுடைய ஞானப் பார்வையில், இராகவன் எப்படித் தோன்றுகிறான்?

இராமன் மறைந்து நின்று அம்பு எய்த செயல், பாவமென்று கருதி, முதலில் தாக்கி ஏசினான். இராமன் கூறிய விளக்கத்திற்குப் பிறகு, தான் செய்த பாவத்திற்குத் தகுந்த தண்டனையளித்த தருமமூர்த்தியாக இராமனைத் தொழுதான். இப்போது, ''பாவம்நீ! தருமம்நீ!'' என்று வாலி சொன்னதன் பொருள் புரிகிறது. அடுத்து தன் பகைவனாகிய சுக்கிரீவனுக்குத் துணையாக வந்த இராமனையும், தன் பகையாகக் கருதினான் வாலி. தன் குற்றத்தை உணரும்படி, இராமன் எடுத்துரைத்த பின், பகையாகக் கருதிய இராமனையே உறவாகக் கொண்டான் வாலி. ஆகையால் தான் ''பகையும்நீ! உறவும்நீ!'' என்று சொல்லி வணங்கினான்.

மீண்டும் பாடல் முழுவதையும் பாடிச் சுவைப்போம் :—

''ஏவுகூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்
ஆவிபோம் வேளைவாய் அறிவுதந்து அருளினாய்!
மூவர்நீ! முதல்வன்நீ! முற்றும்நீ! மற்றும்நீ!
பாவம்நீ! தருமம்நீ! பகையும்நீ! உறவும்நீ!''

# பிறப்பறுப்பான் பிறந்தனன்

அறம்தலை நிறுத்தி; வேதம்
அருள்சுரந்து அறைந்த நீதித்
திறம்தெரிந்து உலகம் பூணச்
செந்நெறி செலுத்தித்; தீயோர்
இறந்துக நூறித்; தக்கோர்
இடர்துடைத்து; ஏக வீண்டுப்
பிறந்தனன்; தன் பொற்பாதம்
ஏத்துவார் பிறப்பு அறுப்பான்''

இது, இராமகாதை சுந்தர காண்டத்தில், அனுமன் கூற்றாக வரும் கம்பன் பாடல்.

வீரமாநகரமாகிய இலங்கை மாநகர அரண்மனையின் அரசமண்டபத்தில் இலங்கேசுரன் கொலுவீற்றிருக்கிறான். அங்கே, அசோகவனத்தை அழித்த அனுமனை மேகநாதன் பிரமாத்திர பாசத்தால் பிணித்துக் கொண்டு வந்து நிறுத்துகிறான். இராவணன் அனுமனை நோக்கி ''நீ யார்? வந்த காரணம் யாது? உன்னை அனுப்பினவர் யார்? சொல்!'' என்றான். அனுமனும் தன்னை ஆட்கொண்ட நாயகன் பெருமையை ஒன்பது கவிகளில் நன்கு எடுத்து உரைத்தான். அந்த ஒன்பதில் ஒன்றுதான் இந்தப் பாடல்.

இனிப் பாடலின் பயனைச் சுவைப்போம்.

மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய, காலமும் கணக்கும் நீத்த காரணன், அயோத்தி வந்த

இராமாவதாரத்தின் பயன்கள் இப்பாடலில் எடுத்துக் காட்டப் பெறுகின்றன.

"தருமத்தை நிலைபெறச் செய்தல்; வேதங்கள் வகுத்த நீதிகளின் வழியிலே உலகத்தைச் செலுத்துதல்; கொடியவர் களை அழித்தல்; நல்லவர்களின் துன்பங்களைப் போக்கு தல் ஆகிய காரணங்களுக்காகத் திருமால் இம்மண்ணுலகில் இராமனாகப் பிறந்தனன்" என்பது பாடலின் கருத்து.

"பிறப்பு அறுப்பான் பிறந்தனன்" என்பதற்குப் 'பிறப்பை அறுக்கும் திருமால் பிறந்தனன்" என்றும், 'திருமால் பிறப்பை அறுத்தற்குப் பிறந்தனன்" என்றும், பொருள் கொள்ளலாம். பிறந்தவன் அவதார நோக்கம் முடிந்ததும், பழைய பரம் பொருள் நிலைக்குச் சென்று விடு வான்; ஆகையினாலே, "ஏக ஈண்டுப் பிறந்தனன்" என்றான் அனுமன்.

இந்தப் படாலில், அனுமன் வெளிப்படையாக உரைப் பதோ இராமனுடைய பிறப்பின் பெருமை; உட்பொருளாக உணர்த்துவதோ இராவணனுடைய இறப்பின் சிறுமை. எவ்வாறு?

"அறத்தின் நாயகன்; அறத்தின் மூர்த்தி; தருமத்தின் தனி மூர்த்தி; அறம் திறம்பும் என்று ஐயன் அயோத்தியில் பிறந்தனன். ஆகையினாலே, அறம் துணையாக நின்ற அழகன் கையால், மறம் துணையாக நின்ற இராவணா! நீ மடிவது உறுதி" எனற கருத்தைப் புலப்படுத்துகிறான் அனுமன்.

"வேதங்கள் அறைகின்ற பாதங்களையுடைய வேத நாடீகன், விராவரும் புவிக்கெலாம் வேதமேயன்ன இராம னாகப் பிறந்தனன். ஆகையால், இராவணா! நீ வேதகீதம் பாடுகிறவனாயிருந்தாலும் நன்னெறியில் நடவாத காரணத் தினாலே அவன் கையால் அழிவது உறுதி" என்று உறுதிப் படுத்துகிறான் அனுமன்.

"இரக்கம் என்னும் ஒரு பொருள் இலாத நெஞ்சினர் அரக்கர்; மூன்று லோகமும் மூடும் அரக்கராம் என்ற காரிருள் நீக்க இராகவன் தோன்றினான். ஆகையால், இராவணா! அரக்கர் குலத் தலைவனாகிய நீயும் அழிந்து ஒழிவது மெய்," என்று குறிக்கிறான் அனுமன்.

"இராமன் தேவர் செய் தவத்தினால் தோன்றிய செம்மல்; கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண் தீர்க்கும் கழல் வேந்தன்; எனவே, இராவணா! அமரர் களுக்கும் முனிவர்களுக்கும் இனி வாழ்வுதான்; உனக்கோ தாழ்வுதான்" என்று உணர்த்துகிறான் அனுமன்.

"மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்பொருள், வில்லும் தாங்கிக் கால்நிலம் தோய நின்று, கட்புலனுக்கு உற்ற தெய்வமாக வந்த காகுத்தன், மால்தரும் பிறவி நோய்க்கு மருந்து. துன்பினைத் துடைத்து மாயத் தொல்வினை தன்னை நீக்கித் தென் புலத்து அன்றி மீளா நெறி உய்க்கும் தேவ தேவன். அந்த இராமனுடைய அருள், அவனை வணங்கி வழிபடும் அடியார்களுக்குத்தானேயன்றி, உனக்கு இல்லை" என்று சொல்லாமல் சொல்லுகிறான் அனுமன். சொல்லின் செல்வனல்லவா அவன்!

இராமனது பிறப்பின் சிறப்பினை உணர்த்த, அனுமன் கூற்றாகக் கம்பன் அமைத்த இந்தப் பாடல், இருபொருள் தந்து, கம்பனது பிறப்பின் சிறப்பினை உணர்த்தும் பாட லாகவும் அமைந்து விடுகின்றது. எப்படி?

"கம்பனும் திருவள்ளுவரும் தமிழுக்குக் கதி," என்றார் செல்வக் கேசவராய முதலியார் அவர்கள். திருக்குறளை அறம் என்றே குறிக்கின்றது புறநானூறு. வள்ளுவத்தின் அறவாழ்வை நடத்திக் காட்டும் ஒரு நாடகமாகக் கம்பன் காவியம் விளங்குகிறது. ஆகையால் கம்பன் அறம் தலை நிறுத்தப் பிறந்தவன் ஆகிறான்.

கல்வியில் பெரியவனாகிய கம்பன், திருக்குறள் அறி வோடு வேதங்களின் நல்லறிவுகளையும் பெய்து, காப்பியம்

படைத்த காரணத்தினாலே வேத நீதியின் வழியில் உலகைச் செலுத்தப் பிறந்தவன் ஆகிறான்.

இராம காதையைப் படிப்பதனால், தீமை சிதைந்து தேயும், நன்மை நாளும் ஓங்கும்; நாட்டில் பரப்புவதால், தீயவர்கள் எண்ணிக்கை அறுகும், நல்லவர்கள் எண்ணிக்கை பெருகும். ஆகையினால், கம்பன் தீயோர் இறந்து கநூறித் தக்கோர் இடர்துடைக்கப் பிறந்தவன் ஆகிறான்.

நீடிய அரக்கர்சேனை நீறுபட்டு அழிய, வாகை சூடிய இராமன் தோள்வலி கூறுவார்க்கு வீடுபேறு கிடைக்கும். ஆகையினாலே, கம்பன் தன் பொற்பாதம் ஏத்துவார் பிறப்பு அறுக்கப் பிறந்தவன் ஆகிறான்.

இந்த அற்புதமான பாடலைக் கம்பன், ''எண்ணி யெண்ணித் திட்டம் போட்டு எழுதினானோ? எண்ணாமல் எங்கிருந்தோ கொட்டினானோ?'' என்று அதிசயிக்கிறோம். கற்றோர் இதயம் களிக்கச் செய்யும் கம்பனை, கம்பன் புகழை, கன்னித்தமிழை வாழ்த்தி வணங்குவோமாக.

# பெண்மைக்குப் பெருமை சேர்த்தாள்

சீதையைத் தேடி நாற்றிசையும் சென்ற வீரர்கள் எவரும் திரும்பி வரவில்லை. இராமனோ கவலைக் கடலில் ஆழ்ந்திருந்தான். வானர வீரர்களுக்கு மன்னனாகிய சுக்கிரீவன், இராமனுக்கு ஆறுதல் மொழி கூறிக் கொண்டு பக்கத்தில் அமர்ந்திருந்தான். சுக்கிரீவனை நோக்கி, இடிந்த மனத்தோடிருக்கும் இராமன் பேசுகிறான்:-

“சீதையைத் தேட நாம் பலரை அனுப்பினோம். ஆனால், அவர்கள் கண்டுபிடிப்பார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. நம்முடைய ஏற்பாடு சரியில்லை போல் தோன்றுகிறது. என்றென்றைக்கும் தீராத பெரும் பழிக்கும் அவமானத்துக்கும் ஆளாகப் போகிறோம் என்ற அச்சம் என்னை ஆட்டி வைக்கிறது. சென்றவர்கள் குறித்துச் சென்ற நாட்களும் கழிந்துவிட்டன. சீதையைத் தேடி தென் திசை சென்றவர்களும் திரும்பி வரவில்லை. சென்ற இடத்தில் அவர்களுக்கு ஏதேனும் விபத்து நேர்ந்து விட்டதோ? அன்றி மாண்டுவிட்டார்களோ? ஒரு சமயம் இவர்கள் தேடிச் சென்ற சீதையே இறந்துவிட்டாளோ? சீதை இறந்து போன செய்தியை எப்படி இராமனிடம் சொல்லுவதென்று வருந்தி இவர்களும் உயிர் துறக்கத் துணிந்துவிட்டார்களோ? அல்லது, இன்னமும் சீதை கிடைக்காததால் நாலா பக்கமும் திரிந்து தேடிக் கொண்டி

ருக்கிறார்களோ? போனவர்கள் கதி என்னவாயிற்றோ? என்று வருந்திப் புலம்பிக் கொண் டிருந்தான் இராமன்.

இந்தச் சமயத்தில் தென் திசையில் சூரியன் தோன்றுவது போன்ற ஒளிப் பிழம்பு தோன்றுகிறது. கிழக்கே தோன்றும் சூரியன் திசைமாறித் தெற்கே தோன்றுவது போன்றிருந்தது அவ்வொளிப் பிழம்பு. கதிரவனா திசைமாறித் தோன்றுகிறான்? இல்லை இல்லை. சிவந்த மேனியுடைய மாருதி தென் திசையினின்று வடக்கு நோக்கி வருகிறான். வருகின்ற அனுமனை இராமன் நிதானமாக ஆசையோடு பார்த்தான். அடுத்த வினாடியே அனுமன் இராமன் முன்னிலையில் வந்து விட்டான்.

எய்தினன் அனுமனும்;
    எய்தி, ஏந்தல்தன்
மொய்கழல் தொழுதிலன்;
    முளரி நீங்கிய
தையலை நோக்கிய
    தலையன், கைகொடு
வையகம் தழீஇநெடி (து)
    இறைஞ்சி வாழ்த்தினான்

இராமனை நெருங்கிய மாத்திரத்தில் அனுமனது உள்ளத்தில் சீதையின் உருவம் தோன்றிவிட்டது. அனுமனின் ஊனக்கண் முன்னே இராமன் இருக்கிறான்; மனக்கண் முன்னே சீதை இருக்கிறாள். வந்த அனுமன் தன்னைத் தென் திசைக்கு அனுப்பிய இராமனது திருவடிகளை வணங்கவில்லை. வேறு என்ன செய்தான்? எந்தத் திசையிலிருந்து வந்தானோ அந்தத் திசையை நோக்கிக் கீழே விழுந்து வணங்கினான். வணங்கியதோடு நிற்க வில்லை. 'தாயே தெய்வமே!' என்றெல்லாம் வாய்விட்டு வாழ்த்தினான். அந்த அளவுக்கு அனுமனது பக்தி மேலீடு, இராமனது திருவடிகளை அனுமனது காலுக்கும், சீதையின்

திருவடிகளைத் தலைக்கும் மாற்றிவிட்டது. இராமனது திருவடிகளில் தலை வைத்து வணங்க வேண்டிய அனுமன், இராமன் பக்கம் கால் நீட்டிச் சீதையிருந்த திசையில் தலை வைத்து வணங்கினான்.

கம்பன் காவியத்தில் இக்காட்சியடங்கிய பகுதிக்குத் 'திருவடி தொழுத படலம்' என்று பெயர் சூட்டப் பெற்றுள்ளது. இப்படலத்திற்கு, அனுமன் இலங்கையி லிருந்து மீண்டு வந்து இராமனது திருவடிகளைத் தொழுத படலம் என்று பொருள் விரிக்கப் பெறுகின்றது. அனுமனுக்குத் திருவடி என்ற பெயரும் உண்டு. திருவடி யாகிய அனுமன் தொழுதது யாருடைய திருவடியை? இராமனது திருவடியையா? சீதையினது திருவடியையா? என்ற வினாவை எழுப்பினால் சீதையினது திருவடியையே என்ற விடை கிடைத்துவிடும்.

இலங்கையிலிருந்து வந்த அனுமன் தன்னைத் தொழ வில்லையே என்று வருந்தவில்லை இராமன். சீதையைத் தேடிச் சென்ற அனுமன் திரும்பி வந்ததும் தென் திசையை நோக்கி விழுந்து வணங்குவதன் காரணத்தைக் குறிப் பினால் உணர்ந்து கொண்டான். அரிய திறம் படைத்த வீரனான அனுமனின் செயல் இராமனை இப்படி உணரச் செய்கிறது.

சீதை உயிரோடு நலமாகவே இருக்கிறாள். இந்த அனுமன் அவளை நேரில் கண்டுமிருக்கிறான். அவளுடைய கற்பு நிலை பழுது படாமல் இருக்கிறது. அவள் அவ்வாறு இல்லையென்றால், இவன் இவ்வாறு என்னை மறந்து தன்னை மறந்து அவள் வாழும் திசை நோக்கி வணங்கமாட்டான். இந்த அனுமன் முதன் முதலில் என்னைச் சந்திக்கு முன், தன் மன்னனான சுக்கிரீ வனையே வணங்கி வாழ்ந்தவன். என்னைச் சந்தித்த பின் தன் மன்னனினும் என்னிடமே பக்தி கொண்டிருந்தான். இப்போதோ, எங்கள் இருவரினும்

சீதையையே தொழுதற்கு ஒத்த சிறப்புடையவளாக மதிக்கிறான் என்பதை அனுமனது வார்த்தைகளால் அன்றியே குறிப்பினால் யூகித்து உணர்ந்து கொண்டான் இராமன். அனுமனது தன்னை மறந்த செயல், இராமனை அசைவற்று நின்ற நெடுமரம் போல் நிறுத்திவிட்டது.

சீதையிருந்த தென் திசையை நோக்கி விழுந்து கிடந்த அனுமன் சிறிது நேரம் கழித்துத் தன் வசத்துக்கு வந்து எழுந்து நின்று இராமனைப் பார்த்துப் பேசுகிறான்:-

கண்டனன் கற்பினுக்கு
அணியைக் கண்களால்,
தெண்திரை அலைகடல்
இலங்கைத் தென்நகர்
அண்டர் நாயக! இனித்
துறத்தி ஐயமும்
பண்டுள துயரும்' என்று
அனுமன் பன்னுவான்.

கற்புக்கரசியான சீதையைக் கண்டேன்—என் இரு கண்களாலேயே கண்டேன்—உடுத்திய ஆடை ஒரு நிலை யுறாது நனைவதும் புலர்வதுமாக—அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினளாக, கணவன் வருவான் வருவானென்று மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாளாக –புலிக் கூட்டத்தின் இடையே அகப்பட்ட மானிளம் பேடையாகத் தவங்கிடந்தவளைக் கண்டேன். கடல் சூழ்ந்த இலங்கையில் கண்டேன். தேவாதி தேவா! இனி இதுவரையிருந்த சந்தேகத்தையும் துயரத்தையும் விட்டு ஒழிப்பாயாக என்று அனுமன் அழுத்தமாகக் கூறினான்.

மேலும் அனுமன் சீதையைக் கண்டபின் அவனது உள்ளத்தில் உண்டான பெருமிதத்தை அப்படியே கொட்டு கிறான். இராம! நீயோ ஆடவர்க்குத் திலகம் போன்ற புருடோத்தமன். உன் தந்தை தசரதனோ மன்னர் மன்னனாக விளங்கி மாண்புற்றவன். உன் மாமனாராகிய

ஜனகனோ முனிவர்களுக்கு எட்டாத ஞானத்தையடைந்து தகுதி பெற்ற மிதிலை யன்னன். உங்கள் மூவருக்கும் தலைமை தாங்கும் தகுதியுடையவள் சீதையேயாவள். நீயோ, சீதை என் மனைவி என்று உரிமை கொண்டாடி உயர்வு பெற்றாய். தசரத மன்னனோ, சீதை என் மருமகள் என்று முறை கொண்டாடி மாண்பு பெற்றான். ஜனகனோ சீதை என்மகள் என்று சொல்லிக் கொண்டே தகுதி பெற்றான். ஐயனே! உன் பெருந்தேவி என் பெருந்தெய்வமாகி விட்டாள்.

உன்பெருந் தேவிஎன்னும்
  உரிமைக்கும், உன்னைப்பெற்ற
மன்பெரும் மருகிஎன்னும்
  மாண்புக்கும், மிதிலைமன்னன்
தன்பெரும் தனயைஎன்னும்
  தகைமைச்கும் தலைமைசான்றாள்,
என்பெரும் தெய்வம் ஐயா!
  இன்னமும் கேட்டி! என்பான்.

பிறந்த இடத்திற்கும், புகுந்த இடத்திற்கும் பெருமை தேடித் தந்ததோடு, தன்னை மனைவியாகப் பெற்ற கணவனுக்கும் புருடோத்தமன் என்ற புகழைத் தேடிக் கொடுத்தாளே, அவளைத் தெய்வமென்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்லுவது! கண்கண்ட தெய்வமல்லளா அவள்! என் கண்களால் கண்டதெய்வமல்லளா அவள்!

அனுமனுடைய பேச்சு, பத்தி ஈடுபாட்டிலிருந்து விளைந்த எக்களிப்போடு உருவம் எடுக்கிறது. உள்ளத்தில் உண்டான உவகைப் பெருக்கால் ஒப்புவமை காண முயல்கிறான்; முடியவில்லை. பொன்னுக்கு ஒப்பு காண முயன்றால் வேறொன்றைக் காணமுடியாது; ‘‘பொன்னுக்கு நிகர் பொன்’’ என்றே முடியும். அதேபோலச் சிறையிலுள்ள துன்பங்களையெல்லாம் அற்புதமாய் தெய்வீகமான முறை

யில் சகித்துக் கொண்டு நேர்மையில் நிற்கும் சீதா பிராட்டிக்கு நிகர் சீதாபிராட்டிதான். அவளுக்கு ஒப்பு அவள் தான். பொன்னைத் தீயிடைப் பெய்தால் அப் பொன்னுடைய தூய்மை வெளிப்படும். அதுபோல, சீதை யின் கற்பு சிறையிருப்பிலேதான் சிறப்புப் பெற்றது. அத்தகைய கற்பினுக்கு அரசியின் கணவன் என்ற காரணத் தால், இராமபிரானே! உனக்கு நிகர் நீதான் மேலும் உனக்கு ஏவல் செய்ய எத்தனையோ பேர் காத்துக் கிடக்க என்னையும் ஒரு பொருட்டாக மதித்துத் தூதனாக ஏவிய தால், 'இராமதூதன்' என்ற பெருமையைப் பெற்றேனே, எனக்கு நிகர் நானேதான். சீதை என்ற கற்புத் தெய்வம் என் கண்ணுக்கெதிரே காட்சி தந்து எனக்குப் பெரும் பதவியைக் கொடுத்துவிட்டது என்று பேசினான் அனுமன்.

கற்புடனே பொறுமையும் கூடி நின்று சீதைக்குப் பெருமை தந்தது. கற்பொழுக்கமுள்ள மனைவியைப் பெற்றதால் இராமன், தன்னை இகழ்வார் முன் ஏறுபோல் பீடுநடை பெற்றான். இராமனுக்குத் தூதனாகிச் சென்று சீதையின் கற்பின் திண்மையைக் கண்ணெதிரே கண்ட காரணத்தால் அனுமன் சிரஞ்சீவியானான். அனுமன் வாலில் அரக்கர்கள் தீமூட்டியபோது, அந்நெருப்பைச் சீதை தன் கற்பின் திறத்தால், அனுமனைச் சுடாது காத்தாள். ஆகையால், அனுமன் சீதையின் கற்பைத் தெய்வக் கற்பாக மதிக்கிறான். தெய்வக் கற்புள்ள சீதையைத் தெய்வமென்றே கொண்டாடுகிறான்.

கடவுள் தத்துவத்தைக் கண்களால் காணமுடியாது; உள்ளத்தால் உணரமுடியும். ஊனக்கண்களால் காண முடியாத ஒன்றை ஞானக்கண்ணால் உணரமுடியும். சீதை என்ற ஊனுடம்புடையவளை அனுமன் காணவில்லை. அவளது கற்பின்மேம்பாட்டினையே உணர்கிறான். சீதை என்ற பெயருடன் ஊனுடம்புடையாள், கணவன் வருகைக் காகக் காத்துத்தவங்கிடக்கும் ஒழுக்கமேம்பாட்டினை உணர் கிறான். முதலில் சீதை என்ற மானுடப் பெண்ணைக்

கண்டபோது, அனுமனுக்குத் தெய்வக்கற்புத் தென்பட வில்லை. அவனுடைய கண்களிலிருந்து வற்றாது வடிகின்ற கண்ணீரைக் கண்டபின், சீதை என்ற மானுட மடந்தை தெய்வமகளாக மாறிவிடுகிறாள். குடிப்பிறப்பென்னும் குன்றா ஒழுக்கமும், நிறையுடைமை காட்டும் பொறையுடை மையும் பெண்மைக்குப் பெருமைசேர்க்கும் கற்பென்னும் திண்மையும் அனுமனுடைய இதயபீடத்தில் எக்களிப்போடு ஆனந்தத் தாண்டவம் புரிகின்றன. அனுமன் பின் வருமாறு பேசுகிறான்:

விற்பெருந் தடந்தோள் வீர!
வீங்கு நீர் இலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தாளாய
நங்கையைக் கண்டேன் அல்லேன்
இற்பிறப்பு என்பது ஒன்றும்
இரும் பொறை என்பது ஒன்றும்
கற்பெனும் பெயரது ஒன்றும்
களிநடம் புரியக் கண்டேன்!

உயர்ந்த குடிப்பிறப்புடையார்க்குப் பொறுத்தாற்றும் பண்பு இருந்தே தீரும். பொறுமையென்னும் பெருமை யுடைய பெண்களே கற்புடையவராவர். கற்புடைய பெண்களின் இதயத்தில் நாயகனுடைய நலனையும் புகழையும் நாடும் வேட்கையே மேலோங்கி நிற்கும். அந்த வேட்கையால் எந்த விபத்தையும் ஏற்று உயிரைத் தாங்கி நிற்கும் உறுதியுள்ளம் உண்டாகும். பெண்களின் கற்பெனும் திண்மையினும் உறுதி வாய்ந்தது உலகில் ஒன்றுமே யில்லை என்று சொல்லலாம். குடிப்பிறப்பு, பொறுமை, கற்பு ஆகிய மூன்றும் ஒன்று சேர்ந்து கைகோத்துக் களிநடம் புரியும் போதுதான் பெண்மை பெருமை பெறு கிறது. இந்த அற்புதமான காட்சியைக் கண்ட அனுமன் இராம பிரானே! இலங்கைக்குப் போன நான் சீதையைக்

கண்டேனல்லேன் என்று பேசுகிறான். அனுமனா பேசுகிறான்? இல்லை! இல்லை! அனுமனுள்ளிருந்து கவிச்சக்ரவர்த்தி கம்பன் பேசுகிறான்.

சீதையின் உள்ளத்து உறுதியை மிகத்தெளிவாகத் தன் உள்ளத்தில் பதிய வைத்துக்கொண்டு கவிச்சக்கரவர்த்தி கம்பன், அனுமனது கூற்றினால் அதனை வெளிப்படுத்துகிறான். சீதையின் சோகநிலையைவிட வேறொன்று உண்டென்று எண்ணமுடியவில்லை கம்பனுக்கு. அவளது சோகநிலை உன்னதமான உறுதிப்பாட்டின் மீது நிற்கிறது. அந்த உறுதியால், நாயகன் வருகையை நோக்கி நிற்கிறாள். வேதனையை அனுபவித்து அணு அணுவாய் அழிவதைவிட, உயிரைவிடுவது எளிதுதான். அதனைச் செய்யவில்லை அவள். இலட்சியத்திற்காகத் தத்தளிக்கும் உயிரை நிலைக்க் வைத்துப் பாதுகாக்கிறாள் சீதையின் பெண்மைச் சிறப்பை எப்படிப் புகழ்வது? பெண்டிருடைய உறுதியுள்ளம் ஆடவருக்கு இல்லையென்றே சொல்லத் தோன்றுகிறது. உலகம் ஆடவரை உயர்ந்தவர் என்றும், பெண்டிரைத் தாழ்ந்தவர் என்றும் கருதிவருகிறது. வீரதீர உள்ளம் ஆடவருக்கே உரிய தென்றும், பெண்டிருக்கில்லையென்றும் பேசிவருகிறது. இந்த நிலையை மாற்றிப் பெண்ணின் பெருமை பேச விரும்புகிறது கம்பனது புரட்சியுள்ளம். அவ்வுள்ளத்தின் உணர்வு அனுமன் வாயிலாக வெளியாகிறது.

சோகத்தால் ஆயநங்கை
    கற்பினால், தொழுதற்கொத்த
மாகத்தார் தேவிமாரும்
    வான்சிறப் புற்றார்! மற்றைப்
பாகத்தாள் இப்போது ஈசன்
    மகுடத்தாள்! பதுமத்தாளும்
ஆகத்தாள் அல்லள் மாயன்
    ஆயிரம் மௌலிமேலாள்

சோகத்தில் மூழ்கியிருக்கும் சீதையின் உறுதியான மனநிலையைக் கண்ட பிறகு, மண்ணுலக மடந்தையரேயன்றி

விண்ணுலகத்தில் வாழும் பிரமன் இந்திரன் முதலியோரது மனைவிமாரும் ஆடவரினும் உயர்ந்து விட்டார்கள் என்று சொல்லத்தோன்றுகிறது. மேலும், ஈசனின் இடமுடைய பார்வதிதேவி, சிவபெருமானது உச்சி மீது வைத்துமெச்சும் அளவுக்கு உயர்ந்துவிட்டாள். திருமாலின் மார்பில் வாழும் இலட்சுமியோ மாயனது ஆயிரம்முடிகளுக்கும் மேலாக உயர்ந்து விட்டாள்.

சீதையின் மன உறுதியைக் கண்ட அனுமனுக்கு இப்படியெல்லாம் சொல்லத் தோன்றுகிறது. "தக்கவள் ஒருத்தி வாழத் தன் குலமெல்லாம் வாழும்." சீதையின் கற்பினால் மண்ணுலக மடந்தையரேயன்றி விண்ணுலக மாதரும் பெருமை பெற்றனர். இந்த உண்மையை உள்ளத்தில் வாங்கிக்கொண்டதால்தான், வியாக்கியானகர்த்தா பெரிய வாச்சான்பிள்ளையவர்கள் "சிறையிருந்தாள் ஏற்றம் கூறும் நூல் இராமாயணம்" என்றார்கள். வியாக்கியான கர்த்தாவுக்குச் "சோகத்தாள் ஆயநங்கை" என்று தொடங்கும் பாடலால் கம்பன் வழிகாட்டினான். கம்பனுக்குத் தெய்வவள்ளுவர் வழி காட்டினார். வழிகாட்டிய குறள்,

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின்

# இராமனின் அரசியல் உத்தி

இராமன் சேதுக்கரையில் வானர சேனையோடு முகாமிட்டிருக்கிறான். கடற்கரைக் காட்சிகள் அவனுடைய சிந்தனையைக் கிளறிவிடுகின்றன. ஓர் அன்னச்சேவல் தாழையின் மேலிருந்து சிறகுகளால், தன் பேடையை அணைத்த வண்ணம் ஆனந்தமாகத் துயில்வதைக் கண்டு பெருமூச்செறிந்தான். நாரைச் சேவலொன்று தன் அலகினால் இனிய மீனொன்றைக் கௌவிவந்து, பெண் நாரைக்கு ஊட்டுவதைக் கண்டு சீதையை எண்ணி இரக்க உணர்வெய்தினான். தனித்திருந்த ஒரு பெண் குருகைக் கண்டு இரண்டு ஆண் குருகுகள் அதனையடையும் பொருட்டு ஒன்றோடு ஒன்று மோதிச் சினந்து சண்டை செய்வதைக் கண்டு சிந்தையில் சினமெழப் புருவத்தை வளைத்தான்! ஆணும் பெண்ணுமாகிய இரண்டு அன்னப் பறவைகள் ஊடலில் தோற்றுப்போய், கூடலில் வெற்றி கண்ட காட்சியைக் கண்ட இராமன், தன் உள்ளத்திலெழுந்த துயரத்தை அடக்க முடியாமல் சிவந்த வாயிதழை வெண்ணிறப் பற்களால் அதுக்கிய வண்ணம் அடக்கிக் கொண்டான்.

சீதையைப் பிரியாது வாழ்ந்த நிலைமாறிப் பிரிந்து வாழ்வதால் விளைந்த வேதனையும், அவளைக் கண்ணிமை போல் காக்க வேண்டிய கடமை தவறிய கவலையும், சீதையைச் சிறையெடுத்த இராவணனை மோது போரில்

வெல்ல வேண்டுமென்ற வேகமும், பிரிந்த சீதையை மீண்டும் பெற்று மகிழும் நாள் எந்நாளோ? என்ற ஏக்கமும் இராமனைப் பிய்த்துத் தின்றன. அருகிலிருந்து தேறுதல் மொழி கூறிய சுக்கிரீவன், சாம்பவான், நீலன், அனுமன் முதலியோர் இராமனது துயரத்தை ஆற்ற முனைந்தார்களென்றாலும், முற்றிலும் அடக்க முடியவில்லை. தன்னுடைய வில்லின் ஆற்றலால், சொல்லின் வேகத்தில் இல்லாளை மீட்கத் துடித்துக் கொண்டிருந்தான் இராமன்.

இந்தச் சூழலில் இராமன் இருந்த பாசறைக்கு வெளியிலிருந்து, அடியுங்கள், பிடியுங்கள், உதையுங்கள் என்று இடி முழக்கம் போன்ற கூச்சல் இராமன் செவிகளில் விழுகிறது. வானர வீரர்களின் ஆர்ப்பாட்டத்தின் காரணத்தை அறிந்துவரும்படி மயிந்தனை அனுப்புகிறான் இராமன். சென்ற மயிந்தன் திரும்பி வந்து, அனலன், அனிலன், அரன், சம்பாதி ஆகிய நான்கு நண்பர்களுடன், வீடணன் தங்களிடம் தஞ்சம் புகுதற்கு வந்துள்ளான் என்றான்.

அடைந்தோரை ஆதரிக்கும் இராமனுக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி. இருப்பினும் அரக்கர் குலத்தவனாயிற்றே என்ற ஐயம். வீடணனுக்கு அடைக்கலம் அருளிச் சேர்த்துக் கொள்வதா? மறுத்துத் திருப்பி விடுவதா? என்ற மனப்போராட்டம் இராமனது உள்ளத்தில் எழுந்தது. வீடணனை நம் பக்கல் சேர்த்துக் கொள்ளலாமா? வேண்டாமா? என்று உடனிருந்தோரிடம் ஆலோசனை கேட்டான் இராமன். பாசறையே மந்திராலோசனையிடமாயிற்று. முதலில் சுக்கிரீவன் தன் கருத்தைத் தெரிவிக்கிறான்.

“விதிக்கு விதியானவனே! எல்லாமுணர்ந்த தாங்கள் எங்களை ஆலோசனை கேட்பது, எங்கள் மனநிலையைப் பரிசோதிப்பது போன்றிருக்கிறது. தங்கட்கு ஆலோசனை சொல்லும் தகுதி எனக்கு இல்லையென்றாலும் என்னைக்

கேட்ட காரணத்தால் நான் சொல்லுகிறேன். என் சொல்லைக் கொள்ளினும் தள்ளினும் சரியே!

"நானும் என் அண்ணனைப் பிரிந்து வந்தவன்தான். இந்த வீடணனும் அண்ணனை விட்டுப் பிரிந்து வந்தவன் தான். எங்கள் இருவர் பிரிவுக்கும் வேறுபாடு உண்டு.

"நான் எவ்வளவோ பணிந்தும், என் அண்ணன் வாலி என்னைத் துரத்தித் துரத்தியடித்தான். என்மனைவியைக் கவர்ந்து கொண்டு என்னையும் கொல்லப் பார்த்தான். இந்த நிலை வீடணனுக்கு ஏற்படவில்லையாதலால் இவனை நம்பிச் சேர்த்தல் நன்றன்று. அண்ணன் சினந்தான் என்ற ஒரே காரணத்திற்காக அஞ்சி வந்த வஞ்சகன் இவன். ஆண்மையற்ற வீடணன் போர்க்களத்தில் நமக்கு எவ்வாறு உதவுவான்? அண்ணன் வாழ்ந்த காலத்தில் அவனோ டிருந்து சுகபோகங்களை அனுபவித்து விட்டு அவன் தாழ்ந்த காலத்தில் அவனைக் கைவிட்டுப் பகைவர் பக்கம் வந்து சேர்ந்த நன்றி கெட்டவனை நாம் சேர்த்துக் கொள்ளலாமா? உறவினர் என்போர், வாழ்விலும் தாழ்விலும் கொட்டியும் ஆம்பலும் போல் கூடியிருப்பவராவர். இந்த வீடணனோ அற்ற குளத்தில் அறு நீர்ப்பறவை போல் நம்மிடம் வந்துள்ளான். நம்முடைய வாழ்வில் வறட்சி கண்டால் வேறிடத்தையும் நாடுவான் இவன். முன்பு பொன் மானாக வந்த மாரீசனுக்கு இவனும் மருகன்தான். "மின்னுவதெல் லாம் பொன்னல்ல" என்பதை முன்னைய அனுபவத்தால் உணர்ந்த தாங்கள், இன்னுமா இவனை நம்புவது? அரக்கரை வேரோடு அழித்து அறத்தைப் புரக்க வந்த தாங்கள், இரக்கத்தின் காரணமாக இவனை மட்டும் சேர்த்துக் கொள்ளலாமா? கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர்க்கும் ஆற்றலுள்ள படையோடிருக்கும் நமக்கு, இவன் துணை தேவைதானா? அஞ்சன வண்ணனே! நஞ்செனத் தகைய வஞ்சக வீடணன் தஞ்சமென வந்தான் என்ற ஒரே காரணத்திற்காக, மாற்றானின் தம்பியை ஏற்றுக்

கொள்ளுதல் முறையன்று'' என்று கூறி முடித்தான் சுக்கிரீவன்.

சுக்கிரீவன் பாடிய பல்லவிக்கு அனுபல்லவி பாடுவது போல் சாம்பன் பேசத் தொடங்கினான்:-

''ஐயனே! எத்தகைய அறிவாளிகளாயிருந்தாலும், பகைவரைச் சேர்ந்தவர் கெடுவர் என் பது உறுதி. வீடணன் நல்லவனென்றாலும் அவனும் அரக்கன்தானே! இரக்க மின்மை அரக்கரோடு ஒட்டிப் பிறந்ததாயிற்றே! அரக்கர், முதலில் நமக்கு நன்மை தருபவர் போல நடித்துப் பின்னர் நம்மை அடியோடு அழித்து விடுவரே.

கருணையின் காரணமாக, முதலில் வீடணனுக்கு அடைக்கலம் தந்துபின்னர் கை விட்டாலும் பழிப்பேயாகும். முன்பு மாரீச மானையனுப்பிச் சீதையைப் பிரித்துக் கவர்ந்த இராவணனிடமிருந்து வந்தவன்தானே இவனும் பின் விளைவை முன் விளைவால் உணர்ந்து, வீடணனைச் சேர்த்துக் கொள்ளல் கூடாது'' என்று கூறினான் சாம்பன்.

அனுபல்லவி பாடிய சாம்பனை அடுத்துக் கேள்வி ஞானமுடைய நீலன் சரணம் பாடத் தொடங்கினான்:-

''இத்தனை காலம் அண்ணனோடிருந்து சுகபோகங் களை அனுபவித்து விட்டுப் போர் மூண்ட தருணத்தில் அவனைப் பகைத்து நம்மிடம் அடைக்கலம் வேண்டி வந்த வனிடம் அரசியல் ஒழுக்கம் இருப்பது அரிது. ஆகையால், இந்த வீடணனை நம்பி நம்பால் சேர்த்துக் கொள்வது முறையன்று'' என்றான் நீலன்.

மற்றைய மந்திரிமாரும், பகைவன் தம்பியைச் சேர்த்துக் கொள்ளல் குற்றமென்றே கூறினர். இவர்கள் கூற்று, முன்னைய மூவர் பாடிய பாட்டுக்குப் பக்கவாத்தியம் வாசிப்பது போலாயிற்று. ஒரே பாடலைப் பல இராகங்களில் பாடுவது போல—ஒரே பாடலைப் பல தாளங்களில் பாடுவது போல ''வீடணனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது,

கூடாது'' என்ற ஒரே கருத்தைப் பலவகையாக எல்லோரும் எடுத்துரைத்தார்கள். இறுதியாக அனுமன் வாய்பொத்தி வணங்கி நின்று தன் கருத்தைக் கூறுகிறான்:-

''ஐயனே! இவனைத் தீயவன் என்று அனைவரும் கூறினர். இவனைத் தூயவன் என்று நான் துணிகிறேன். அகத்தின் அழகு முகத்தில் தெரியும். உள்ளத்தில் உள்ளதை உரையின் முந்துற மெள்ளத் தம்முகங்களே காட்டும். இவன் வஞ்சகன் அல்லனென்பதை முகப்பொலிவே காட்டுகின்றது. பள்ளத்தில் இருள் தங்குவது போல இவனது உள்ளத்தில் கள்ளமிருந்தால் வாய்ச்சொல்லில் கண்டு கொள்ளலாம். அண்ணனால் கொடுமைப்பட்ட சுக்கிரீ வனுக்கு அருளிய இராமன் தனக்கும் அருளுவான் என்று நம்பி இவன் வந்துள்ளான். நெறியின் நீங்கிய இலங்கையும் அரசும் அழிவது உறுதியென்று உணர்ந்து வந்துள்ளான்.

இராவணனை வாலினால் பிணித்து அலைத்த வாலியையே அழித்த நீ, இராவணனையும் அழிப்பாய் என்று உணர்ந்தே வந்துள்ளான். அண்ணனால் துரத்தப் பட்டு, இருக்க இடம் தேடி அடைக்கலம் தேடி வந்துள்ளான். கருநிறத்து அரக்கரிடையே வெளித்து வாழுதல் அரிது எனக் கருதி ஒளித்து வாழ்கின்ற தருமமே போன்றவன் இவன். இராமன் தூதனாக நான் இலங்கைக்குச் சென்ற போது, என்னைக் கொல்ல வந்த இராவணனிடம் ''மாதரைக்கொல்லலும் தூதரைக் கொல்லலும் குற்றமாகும்'' என்று இவன் எடுத்துக் கூறியதால்தான் சீதையும் நானும் உயிரோடிருக்கிறோம். இவனுடைய மகள் உன் மனைவிக்குத் துணை. திரிசடை துணையால்தான் உன் தேவி ஆவியோடிருக்கிறாள். ஆபத்துக் காலத்தில் அபய மென்று வந்தவனை அறத்தின் மூர்த்தியாகிய தாங்கள் அயிர்த்தகற்றி விடுவது, கிணற்று நீரைக் கண்டு கடல் நீர் அஞ்சுவது போன்றது. ஆகையால் இவனைச் சேர்த்துக் கொள்வதே சிறந்தது'' என்றான் அனுமன்.

எல்லோருடைய ஆலோசனைகளையும் கேட்ட இராமன் பின்வருமாறு பேசுகிறான்:-

மாருதி சொன்ன சொல்லுக்கு மாற்றுச் சொல் இல்லை. வீடணன் பிழைப்பில்லாத தூயவன் என்பதைப் புரிந்து கொண்டேன். போரில் வெற்றி பெற்றாலும் தோற்றாலும் வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் அடைக்கலம் புகுந்தவனுக்கு அருளுவதே முறை. இவனால் நமக்குத் தீமையே விளைந்தாலும் புகழ்ச்சியேயன்றி இகழ்ச்சி யில்லை. ஒரு புறாவுக்காகத் தன் உயிரையே கொடுக்கத் துணிந்த சிபிச்சக்கரவர்த்தியின் பரம்பரையிலே வந்தவன் நான் வீடணன் சூழ்ச்சியாலே இறந்த நாளும் எனக்குப் புகழோடு இருந்த நாளாகும். அமுதம் வேண்டிக் கடலைக் கடைந்த போது எழுந்த ஆலகால விஷத்தை உட்கொண்டு சிவபெருமான் அமரரைக் காக்கவில்லையா? தன் பேடையைப் பிடித்து வைத்துத் தன்னையும் பிடிக்க வந்த பேதை வேடனுக்கு உணவாக வேண்டித்தானே தீமூட்டி நெருப்பில் விழுந்து இறந்த அற்பப் புறாவைவிட அற்பமான வனா நான்? முதலை வாயில் சிக்கி "ஆதிமூலமே"! என்று அழைத்த யானைக்காகத் திருமால் முன்வந்து காக்க வில்லையா? சரணாகதிக் தத்துவத்தின் சிறப்பை விளக்க இவற்றைவிடச் சான்று வேண்டுமா? சிவபெருமான், தன்னிடம் அடைக்கலம் புகுந்த மார்க்கண்டேயனது உயிரைக் காக்க, எமனையே எட்டி உதைத்துத் தள்ளிய மேன்மையைக் காட்டிலும் மேன்மை உண்டா? காப்பாரின்றி அழுது வாடிய சீதையைக் காக்க இராவணனோடு சண்டை செய்து தெய்வ மரணமெய்திய சடாயுவின் செயல் சிறந்த தல்லவா? உயிரைக் கொடுத்தேனும் சரணடைந்தோரைப் பாதுகாத்தல் நமது முன்னையோர் செயலன்றோ? தஞ்ச மடைந்த தண்டகவன முனிவர்களுக்கு அபயமளித்த உறுதி மொழி என்னாவது? அரக்கர் குலத்தை அழிப்பேன் என்று தேவர்களுக்கு அன்று அளித்த வாக்குறுதியைத் தவறலாமா? ஆகையால் நம்முடைய காரியம் கைகூடினாலும் கூடட்டும்,

கூடாமல் போனாலும் போகட்டும். அடைந்தவரை ஆதரித்தலே என் தலைசிறந்த கடமை என்று சொல்லி முடித்தான் இராமன்.

இராமன் சொல்லிய சொல்லின் உண்மையை உணர்ந்து கொண்டார்கள் வானரத் தலைவர்கள். தெளிவாகத் தன் கருத்தை இராமன் சொல்லிவிட்ட காரணத்தால் மறுத் துரைக்க அவர்களுக்கு நா எழவில்லை. அமைதி! அமைதி! அமைதி உடன் பாட்டுக்கு அறிகுறி. அடுத்துச் செய்ய வேண்டிய செயலைச் சிந்திக்கத் தொடங்கினான் இராமன். அவனுடைய அரசியல் அறிவு தொழிற்படத் தொடங்கி விட்டது. சுக்கிரீவனை நோக்கிப் பரிந்து நயந்து பேசு கிறான்.

“ஆதலால் அபயம் என்ற
போழ்தத்தே அபய தானம்
ஈதலே கடப்பா டென்பது
இயம்பினீர்; என்பால் வைத்த
காதலால், இனிவே றெண்ணக்
கடவதென் கதிரோன் மைந்த!
கோதிலா தவனை நீயே!
என்வயின் கொணர்தி” என்றான்.

“ஒருவன் அபயம் என்று வந்தடைந்த பொழுதே அபயதான மளித்தலே என்னுடைய கடமையாகும். முன்பு, வீடணனைச் சேர்த்துக் கொள்ளுதல் தகுதியன்று என்று சொன்ன நீங்கள், இப்போது என் மீதுள்ள அன்பின் காரணமாக என் கடமையுணர்ந்து தகுதியென்று சொன்னீர்கள். சேர்த்துக் கொள்வதா? கூடாதா? என்று இனி ஆலோசிக்க வேண்டிய அவசியமே இல்லை. எதற்காக ஆலோசிக்க வேண்டும்? சூரியன் மகனான சுக்கிரீவனே! ஒரு குற்றமும் இல்லாத வீடணனை நீயே சென்று என்னிடம் அழைத்து வருக” என்று இராமன் கூறினான் என்பதே பாடலின் பொருள்.

அடைக்கலம் வேண்டியவனுக்கு அருளுகின்றவனே இராமன். இந்த உயர்ந்த பண்பு இருந்த காரணத்தால் தான், முன்பு சுக்கிரீவனுக்கு அடைக்கலம் அருளினான். அன்று அடைக்கலப் பயன்பெற்ற சுக்கிரீவனே இன்று இவனுக்கு அடைக்கலம் தரக் கூடாது என்பது இராமனுக்கு விந்தையாக இருந்தது. மேலும் சுக்கிரீவனைத் தன்னிடம் அடைக்கலப்படுத்திய அனுமன் முன்னிலையிலேயே இவ்வாறு கூறியது விந்தையிலும் விந்தையாக இருந்தது.

தனக்கு ஒரு நீதி பிறருக்கு ஒரு நீதியா? சுக்கிரீவன் சுய நலம் மிக்கவன் என்று சொல்லவும் முடியவில்லை இராம னுக்கு. அரசன் எவ்வழி அவ்வழிக் குடிகள் என்பதற்கேற்ப, சுக்கிரீவ மன்னன் கூறியதையே மற்றவர்களும் கூறி மறுத் தார்கள். ஆனால், சொல்லின் செல்வனாகிய அனுமனோ, முன்னர்ச் சொன்ன அடைக்கலச் சிறப்பையே இன்றும் சொன்னான். அது இராமனது உள்ளத்துணர்ச்சிக்குச் சாதகமாகி விட்டது. மற்றவர்களின் மௌனமும் அதற்குத் துணை செய்தது. இந்தச் சாதகமான சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்த இராமன், "அபயதானம் ஈதலே கடப்பாடு என்பது இயம்பினீர்" என்று இயம்பி விட்டான். இப்போது அவர்களுடைய வாய் இயம்பவில்லை யென்றாலும் மௌனம் இயம்பியதாகக் கொள்ளுகிறான் இராமன். எதிர்ப்புக்கு இடமும் வாய்ப்பும் இல்லாதவாறு மற்றவர்களின் வாயடக்கி விடுவதே அரசியல் அறிவு. அந்த அறிவைப் பயன்படுத்திக் கொண்டான் இராமன்.

தூய மனம் படைத்த வீடணனைத் தீய மனம் படைத் தவன் என்று குறைகூறிய சுக்கிரீவன் முதலியோரைக் குறை கூறவில்லை இராமன். மாற்றுக் கருத்து உடையவர்களை யும் மதித்து, அவர்களின் செயலுக்குச் சிறப்புக் கற்பித்துப் பேசினால், மாற்றார்களும் மனம் மாறுவார்கள் என்பது அரசியல்தந்திரம் அந்தத் தந்திரமாகப்பேசுகிறான் இராமன் சுக்கிரீவன் முதலியோர் வீடணனைப்பற்றிக் குறைகூறியது

அவன் மேலுள்ள வன்பினாலன்று; என் மேலுள்ள அன்பி னால் என்று இராமன் தன்பக்கம் திசை திருப்பி அணைத்துக் கொள்கிறான். வீடணனைச் சேர்த்துக் கொண்டால் அவனால் எனக்குத் தீங்கு ஏற்பட்டுவிடுமோ என்று கருதி அவனை மறுத்தீர்கள். இப்போது என் உள்ள முணர்ந்து என்மனம் நோகக்கூடாதே என்று இசைந் தீர்கள். உங்கள் ஒவ்வொரு செயலுக்கும் என் மீது உங்க ளுக்குள்ள அன்பே காரணம் என்று அவர்களின் சிந்தியாத செயலுக்கும் சிறப்புக் கற்பிக்கிறான் இராமன். இதுஅவனது இராசதந்திரத்தைக் காட்டுகிறது.

சிக்கலான பிரச்னைகளை நாள் வளர்த்துக் கொண்டு போவதால் நல்ல பயன் விளையாது. உடனே முடித்துவிட வேண்டும். வீடணன் அடைக்கலம் பற்றிய விவாதத்தை வளர்த்தக் கூடாது. உடனே தீர்வுகாணக் கருதிய இராமன், தன் கொள்கைக்குச் சாதகமான சமயம் கிடைத்ததும், இது பற்றி "இனி வேறு எண்ணக்கடவது என்?" என்று விவாதப் பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைத்து முடித்து விட்டான். உடனே வீடணனை அழைத்து அருள வேண்டு மென்று கருதிய இராமனுக்கு, "யாரை அனுப்புவது" என்ற வினா உள்ளத்தில் எழுந்தது. இராமனுக்கு உடனே அரசியல் உத்தி மிக வேகமாகவும் சாதகமாகவும் தொழிற் படத் தொடங்கிவிட்டது. சுக்கிரீவனையே அனுப்பி அழைத்து வரவேண்டும் என்று முடிவு செய்து விட்டான்.

சுக்கிரீவன், சூரியன் மைந்தன். சூரியன் நல்லார்க்கும் பொல்லார்க்கும் எல்லார்க்கும் ஒப்ப வெயில் வீசுகின்றவன். தந்தையின் பண்புதனயனுக்கும் படிந்திருக்கும். வீடணனை அல்லோன் எனக்கருதிய சுக்கிரீவன், நல்லோன் எனக் கருதி வெறுப்பின்றி அழைத்துவர வேண்டும் என்பதற் காகவே, தந்தையை நினைவூட்டுமாறு "கதிரோன் மைந்த" என்று விளித்தான் இராமன்.

சுக்கிரீவன் நினைத்த குற்றங்கள் வீடணன்பால் இல்லை என்பதை உணர்த்த "கேது, இலாதவனை" என்று இராமன் குறிக்கிறான். குற்றம் உற்றவன் என்று நீ முன்னர்க் கருதிய வீடணனைக் குற்றம் அற்றவன் என்று இப்போது உணர்ந்து கொண்ட காரணத்தால் நீயே சென்று அவனை என்னிடம் அழைத்துவா என்றான் காகுத்தன். வீடணன் அரச குலத்தைச் சேர்ந்தவன், அவனை அழைத்துவருவதற்கு அரசனான சுக்கிரீவனே செல்ல வேண்டும் என்ற காரணத்தால், இராமன் 'நீயே கொணர்தி' என்றான். மேலும், தன்னால் குறை கூறப்பட்ட வீடணனைத் தானே சென்று அழைப்பதா? என்று நினைத்துச் சுக்கிரீவன், வேறு ஒருவரை அனுப்பி அழைத்து வந்து விடக்கூடாது என்பதற்காகவே இராமன் அவனை "நீயே கொணர்தி" என்றான் என்றும் கொள்ளலாம். அரசியல் வரலாற்றில் ஒரு கட்சியைச் சேர்ந்தவர்களுக்குள் கருத்து வேற்றுமை ஏற்பட்டால் அவர்களில் ஒரு குழுவின் தலைவரை மற்றொரு குழுவின் தலைவரோடு உரையாடி, உறவாடவிட்டுச் சமாதானப்படுத்தி விடுவது அரசியல் தலைவர்களின் செயல். அந்த முறையின்படி தலைவன் இராமன் "அவனை நீயே கொணர்தி" என்று சுக்ரீவனிடம் கூறினான். மேலும், ஒரு அரசியல் தலைவன் தன்னுடைய கொள்கைக்கு மாறுபட்டுப் பேசும் குழுத்தலைவனைக் கொண்டே தீர்மானத்தை முன் மொழியச் செய்து சிக்கலுக்குத் தீர்வுகண்டுவிடுவது வழக்கம்.அந்த வழக்கத்தின்படி இராமன் சுக்கிரீவனைக் கொண்டே வீடணனை அழைத்து வந்தால் அவனைச் சேர்ந்த மற்றவர்களும் வாயடங்கி விடுவார்கள் என்று கருதினான். ஆகையால், "நீயே கொணர்தி" என்றான் இராமன். மற்றும், மனத்தெளிவில்லாத சுக்கிரீவன் அரைகுறை மனத்தோடு வேண்டாவெறுப்போடு சென்று "இராமன் உன்னை வரச் சொன்னான்" என்று சொல்லி, வீடணனை அனுப்பிவிட்டுப் போய் விடுவானோ என்று கருதிய இராமன் "அவனை நீயே என்வயின் கொணர்தி" என்றான்.

இராமன், சுக்கிரீவனுடைய பண்புகளை முன்னைய அனுபவத்தால் நன்கு உணர்ந்தவன். சீதையைத் தேடுதற்குத் தன் சேனையோடு கார்காலம் கழித்து வருவதாகச்சொல்லிச் சென்ற சுக்கிரீவன் சொன்ன சொல் தவறிக் கார்காலம் கழித்தும் வராது, மது மயக்கத்தில் இருந்து விட்டான். "என் தம்பி சுக்கிரீவன் மது அருந்தும் பழக்கமுடையவன்; மது போதையில் தீயசெயலும் செய்வான்; அப்போது அவன் மீது சீறிச்சினந்து அம்பெய்து கொன்று விடாதே" என்று வாலி இறக்கும்போது இராமனிடம் வேண்டிக் கொண்டான். இந்த நினைவுகள் இராமனது உள்ளத்தில் குடிகொண்டிருந்த காரணத்தால்தான், சுக்கிரீவனால் வீடணனுக்கு எந்த வகையிலும் தீங்கு நேரக்கூடாது என்று கருதி, "கோதிலாதவனை" என்ற சொல்லைப் பெய்து பேசினான் இராமன். (கோது + இலாதவனை = கோதிலாதவனை) குற்றமற்ற வீடணனை; (கோது + இலாது + அவனை = கோதிலாதவனை) எந்தத் தீங்குமின்றி நீயே சென்று என்னிடம் அழைத்துவா என்று கூறி விவாதப் பிரச்னைக்குத் தீர்வு கண்ட இராமனின் அரசியல் உத்தி நினைந்து நினைந்து போற்றுதற்குரியது. இராமனின் அரசியல் உத்தி பொதிந்த கம்பன் பாடலை மீண்டும் பார்ப்போம்.

"ஆதலான் அபயம் என்ற
  போழ்தத்தே அபய தானம்
ஈதலே கடப்பாடு என்பது
  இயம்பினீர் ; என்பால் வைத்த
காதலால், இனிவேறு எண்ணக்
  கடவது என் கதிரோன் மைந்த !
கோதிலா தவனை நீயே
  என்வயின் கொணர்தி" என்றான்.

# புகழைப் புதுக்கினான்

கம்பன் காவியத்துள் வரும் பாத்திரங்களில், கும்பகர்ணன் ஒப்புயர்வற்றவன். அவனைத் 'தூங்குமூஞ்சி' என்று சிலர் தூற்றுவார்கள்; 'செஞ்சோற்றுக் கடன் கழித்த செம்மல்' என்று பலர் போற்றுவார்கள். திருமால் துயில் உணர்ந்து எழுந்தால் அரக்கர்கள் அழிவார்கள். கும்பகர்ணன் துயில் உணர்ந்து எழுந்தால் அமரர்கள் அழி வார்கள். தேவர்கள் இன்றுவரை வாழ்வதற்குக் காரணம் கும்பகர்ணன் பெரும்பொழுதைத் தூக்கத்தில் கழித்தது தான்.

கும்பகர்ணன் கூற்றுவனையும் ஆடல் கொண்டவன்; இந்திரனைப் போரில் வென்றவன்; இந்திரன் ஏறிவந்த ஐராவதயானையைப்பற்றி இழுத்துக் கரகரவென்று சுழற்றிய வன்; ஐராவதத்தின் நான்கு தந்தங்களையும் இரண்டு கை களாலும் பற்றிப் பறித்துக் கொண்டு மலையொன்று மதங் கொண்டு திரிவது போன்று சாரி திரிந்தவன். மூன்று உலகங்களையும் வென்றமைக்கு அடையாளமாக, முத்தலை வடிவான வன்னெடுஞ் சூலத்தை வலக்கையில் ஏந்தியவன். காற்றினும் கடிது ஓடும் வலிய கால்களையுடையவன்; காற்றையும் தீயையும் சேர்த்துப் பிடித்துப் பிசைந்து சாறு எடுக்கும் ஆற்றல் வாய்ந்த கைகளையுடையவன்; கடலிலே குளித்து, இமயக் கல்லிலே கால் தேய்ப்பவன்; உலகளந்த

நெடுமாலைப் போன்று விண்ணளவு ஓங்கி உயர்ந்த உருவமுடையவன்; ஊனும் உதிரமும் உண்டு உண்டு படர்ந்து பருத்த உடலுடையவன். அவனுடைய தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின் நாள்பல கழியும். ஆறுநூறு சகடத்து அடிசிலையும், நூறுநூறு குடங்கள் கள்ளினையும் நொடிப் பொழுதில் நுங்கி விடுவான். சிங்கத்தின் மாமிசம் கிடைத்து விட்டால் போதும், பிணம் போன்று சிரிப்பில்லாத முகத்தில், சிரிப்புச் சிறிதே அரும்பும்.

கும்பகர்ணனை அவனுடைய உருவத்தைக் கொண்டும், உணவைக் கொண்டும் மதிப்பிட்டு விடுதல் கூடாது. உள்ளத்தைக் கொண்டு மதிப்பிடுதல் வேண்டும். அவனது உள்ளம் அறத்தை நன்கு உணர்ந்திருந்தது. நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியும், சாதியால் வந்த சிறுநெறியும் அவனுக்குத் தெரியும். நீதியும் சாதியும் அவனுடைய உள்ளத்தில் மோதும் போது, சாதிப் பக்கமே சாய்ந்து விடுவான். தான் பிறந்த புலத்தியர் குலத்தின் புகழ் குன்றி விடக் கூடாது என்பதே அவனது நோக்கம். மேலும் செய்த நன்றியை மறக்கக்கூடாது என்பதே அவனது குறிக்கோள். அவனுடைய மூச்சு ஒவ்வொன்றும் "புகழ்! புகழ்" என்றே ஊதிக்கொண்டிருக்கும். புகழுக்காகவே வாழ்ந்து, புகழுக்காகவே உயிர் விடுத்த மாவீரன் கும்பகர்ணன்.

இராவணன் சீதையை எடுத்து வந்து அசோகவனத்தில் சிறைவைத்த பின், இராமதூதனாகிய அனுமனால், இலங்கை எரியூட்டப்படுகிறது. எரியுண்ட இலங்கையை 'மயன்' என்ற தேவதச்சனைக் கொண்டு புதுப்பித்த இராவணன், அடுத்துச் செய்ய வேண்டுவன பற்றி மந்திராலோசனை நடத்துகிறான். ஆலோசனைக் கூட்டத்தில் அமைச்சர்கள், படைத்தலைவர்கள், குடும்பத்தினர் ஆகியோர் கூடியிருக்கிறார்கள். ஆலோசனை மண்டபத்தில் இராவணன் மானவுரை நிகழ்த்துகிறான்.

சுட்டது குரங்கு; எரி சூறையாடிடக்
கெட்டது கொடிநகர்; கிளையும் நண்பரும்
பட்டனர்; பரிபவம் பரந்தது, எங்஑ணும்;
இட்டஇவ் வரியணை இருந்தது, என்உடல்

என்று தொடங்கித் தன்னுடைய ஆற்றாமையையும் ஆத்திரத்தையும் பிழிந்து கொட்டுகிறான் இராவணன். எரி கின்ற நெருப்பிலே எண்ணெய் ஊற்றுவது போல, படைத் தலைவர், மகோதரன், வச்சிரதந்தன், துன்முகன், மாபெரும் பக்கன், பிசாசன் ஆகியோர் இராவணனுக்கு இதவுரை நிகழ்த்துகின்றனர். இவர்களுடைய பேச்சை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த கும்பகர்ணன் பேச எழுந்தான். கும்பகர்ணன் அரக்கர் சாதியிலே பிறந்தவனா யினும், அறத்தின் நீதி அவனைப் பேசுமாறு தூண்டி விட்டது: தன் கடமையை உணர்ந்து பேசுகிறான் கும்ப கர்ணன். அவன் கூற்றாகப் பத்துப் பாடல்கள் பிறக் கின்றன. அவற்றில் இரண்டு பாடல்களில், மூன்று இடங் களில் புகழைக் குறிக்கிறான்.

என்று ஒருவன் இல்உறை தவத்தியை, இரங்காய்,
வன்தொழிலினாய், மறைதுறந்து, சிறைவைத்தாய்,
அன்றுஒழிவதாயின, அரக்கர்புகழ்; ஐயா?
புன்தொழிலினால் இசை பொறுத்தல் புலமைத்தோ?
ஆசுஇல் பர தாரம் அவை அம்சிறை அடைப்பேம்;
மாசுஇல் புகழ் காதலுறுவேம்; வளமை கூரப்
பேசுவது மானம்; இடை பேணுவது காமம்;
கூசுவது மானுடரை நன்று, நம கொற்றம்

மேலும், முதற்போரில் எல்லாவற்றையும் போட்டதோடு நில்லாது, வீரத்தையும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கை புக்க இராவணன், சானகி நகுவள் என்றே நாணத்தால் சாம்பி, கும்பகர்ணனை அழைத்துப் போர்க் கோலம்பூட்டி போர்க்களம் செல்ல ஏவுகிறான் அப்போது கும்பகர்ணன் இராவணனுக்கு அறிவுரை கூறுகிறான்.

ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்
சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ?
வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ்
போனதோ? புகுந்ததோ பொன்றும் காலமே?

மற்றும் இராமனிடம் தன்னை அழைத்துச் செல்ல வந்த வீடணனிடம் கும்பகர்ணன் மறுத்துக் கூறும்போது, "நீர்க் கோல வாழ்வை நச்சி நெடிது நாள் வளர்த்துப் பின்னைப் போர்க்கோலம் செய்து விட்டாற்கு உயிர் கொடாது அங்குப் போகேன்" என்று கூறியதோடு நிற்கவில்லை.

உலைவு இலாத் தருமம் பூண்டாய்; உனக்கு அது
தக்கதேயால்;
புலையுறு மரணம் எய்தல் எனக்கு அது புகழதேயால்

என்று கூறுகிறான்.

கும்பகர்ணன் கூற்றிலிருந்து, "அறம் தவறிப் பிறன் மனைவியைக் கவர்ந்தால், உள்ளபுகழ் அழியும்— அற்பச் செயலினால் புகழ்வளராது— பிறன்மனைவியைச் சிறையிடு வதும், புகழை விரும்புவதும், ஒன்றுக்கொன்று முரணான செயல்கள்—பழிவிளைக்கும் செயலால் புகழுடைய விரும் புவது பேதைமை—கற்புக்கரசியின் சிறைத் துன்பத்தால், மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும் வளர்ந்த பெரும் புகழ் ஒழிந்து போகும்—தன்னை வளர்த்தவனுக்குச் செய்ந் நன்றி காட்டி, இழிவுடைய மரணம் எய்தினாலும் புகழ் விளையும் என்னும் அசைக்க முடியாத நம்பிக்கை, கும்பகர்ணனுக்கு இருப்பது தெளிவாகிறது. கும்பகர்ணன், ஒரு புகழ் விரும்பி என்பது புலனாகின்றது.

கும்பகர்ணன் போர்க்களத்திலே புகுந்தால், வெற்றியே யன்றி வேறெதும் பெற்றிலனாவான் பேராண்மை என்பது அவனது பிறப்புரிமை. தன்னுடைய ஆண்மையினால் போர்க்களத்தில் பகைவர்களின் பாதச்சுவடுகளே இல்லாமல் ஒழித்துவிடுவான். அவனைத் தாக்கியவர்களின் கைகள்தாம்

சலித்துப் போகுமேயன்றி, அவனை ஒருவரும் அசைக்க முடியாது. அசைக்க முடியவில்லையென்றாலும் சிறிதளவாவது துன்பம் ஏற்படுத்த முடியுமா என்றால், அதுவும் முடியாது. வானர வீரர்களோடு கும்பகர்ணன் போர் புரிந்த திறத்தைப் பாடும்போது, கம்பனே வியந்து போகிறான்.

தாக்கினார்; தாக்கினார்தம் கைத்தலம் சலித்த தன்றி
நூக்கினார் இல்லை; ஒன்றும் நோவு செய்தாரும் இல்லை
ஆக்கினான்; களத்தின் ஆங்கு ஓர் குரங்கினது அடியும் இன்றிப்
போக்கினான்; ஆண்மையாலே புதுக்கினான், புகழை அம்மா!

பாடலின் இறுதியில், "அம்மா!" என்ற வியப்பிடைச் சொல்லைப் பெய்து பூரித்துப் போகிறான் கம்பன். போர்க்களத்தில் தன்னை எதிர்த்த வானர வீரர்களில், இறந்து பட்டவரேயன்றி, இருந்த வீரர்கள் எதிர்த்து நிற்க மாட்டாமல் தப்பிப் பிழைத்து ஓட, அந்தப் போர்க்களத்தில் ஒரு குரங்கினது சுவடும் இல்லாமல், ஓட ஓட விரட்டியடித்த கும்பகர்ணனது புதுமையான ஆண்மையை—புதுமையான புகழை, கம்பன் போற்றாமல் இருப்பானா? கும்பகர்ணனது ஆண்மை, சாதாரண ஆண்மையன்று; பேராண்மை.

"பேராண்மை என்ப தறுகண்; ஒன்றுஉற்றக்கால்
ஊராண்மை மற்றுஅதன் எஃகு."

என்பது தெய்வமாக்கவி திருவள்ளுவர் வாய்மொழி. பிறர் அஞ்சும் இடத்தும் அஞ்சாது நிற்கும் தறுகண்மையே பேராண்மை. அந்தப் பேராண்மையும் ஊராண்மையோடு கூடினால் சிறப்புடையதாகும்.

திருக்குறளுக்கு உரைகண்ட பரிமேலழகர், ஊராண்மைக்குப் பின்வருமாறு விளக்கம் தருகிறார்:—

"ஊராண்மை— உபகாரியாந்தன்மை; அஃதாவது இலங்கையர் வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும் படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியர் இறை, மேற்செல்லாது 'இன்று போய் நாளை நின் தானையோடு வா' என விட்டாற் போல்வது."

பரிமேலழகர் விசேட உரையைக் கொண்டு இராமனுடைய ஊராண்மையை நோக்குவோம் :— முதற் போரில், இராமனது அம்புக்கு இலக்காகி, இலங்கையர் வேந்தன், சொல்லும் அத்தனை அளவையில் மணிமுடி துறந்து, ஆயுதங்களையும் இழந்து, ஆலமரத்தின் விழுதுகளைப் போல வெறுங்கைகளைத் தொங்கவிட்டுக் கொண்டு நிற்கிறான். வெறுங்கையனாகி நிற்கும் இராவணனை நோக்கி, இராமன் பின்வருமாறு கூறுகிறான் :

ஆள் ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை; இன்று போய், போர்க்கு
நாளை வா என நல்கினன்—நாகு இளங்கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்

அறத்தின் மூர்த்தி இராமன். புறா ஒன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகையாகிய சிபிச்சக்கரவர்த்தியின் புகழிலே பூத்தவன் இராமன். கோசல நாடுடை வள்ளலாகிய இராமன், இராவணனுக்கு உயிர்ப்பிச்சையளித்தது புகழ்தற்குரிய செயல்தான். சந்தனத்தில் நறுமணம் கமழ்வது இயற்கை— புகழ்தற்குரியதுதான்— என்றாலும், அதிசயமல்லவே. சேற்றிலே நறுமணம் வீசுகிற தென்றால், அது தான் அதிசயம். இரக்கம் என்னும் ஒரு பொருள் இலாத அரக்கர் குலத்திலே வந்த கும்பகர்ணனிடம், ஊராண்மையோடு கூடிய பேராண்மை இருந்தது என்றால், அதுதான் அதிசயம்; புதுமை

போர்க்களத்தில் புகுந்த கும்பகர்ணனோடு, நீலன் என்னும் வானர வீரன் போர் செய்கிறான். வானர வீரர்

களால் கும்பகர்ணனை ஏதும் செய்ய முடியாமல் போனது கண்ட நீலன், மலையைத் தூக்கி எறிந்தான். மலையும் கும்பகர்ணனை அசைக்கவில்லை. பின்னர், நீலன் பின்பேர்ந்து முன்பாய்ந்து கும்பகர்ணனைக் கைகளால் குத்தினான்; கால்களால் உதைத்தான். கைகளும் கால்களும் செயலிழந்து விட்டன. என்றாலும், நீலனுக்கு ஆத்திரம் அடங்கவில்லை. நெய் சொரிந்த நெருப்புக் கொழுந்து போல உக்கிரங் கொண்டு துள்ளினான். அப்போது, கும்பகர்ணன் நீலனை இடது கையினாலே எற்றி விட்டான். எற்றுண்ட நீலன் உயிர் பதைத்து வீழ்ந்தான். கும்பகர்ணனது வலது கையிலே சூலமிருந்தும், ஏன் எறியவில்லையென்றால், நிராயுதபாணியான நீலன் மீது, சூலம் என்னும் ஆயுதம் கொண்டு தாக்கக் கூடாது என்ற கருணைதான்.

கைத்தலம் சலித்து, காலும் குலைந்து, தன் கருத்து முற்றான்,
நெய்த்தலை அழலின் காந்தி எரிகின்ற நீலன் தன்னை,
எய்த்து உயிர் பதைப்ப அன்னான் எற்றினான் இடது கையால்
முத்தலைச் சூலம் ஓச்சான், வெறுங் கையான் என்று முன்பன்

இந்தக் காட்சியைக் கண்ட நமக்கு, இராமனுடைய புகழை விட கும்பகர்ணனுடைய புகழ் புதுமையானது; போற்றத் தகுந்தது என்று புரிகின்றதல்லவா? ஆம்! கும்பகர்ணன் புகழைப் புதுக்கினான்.

புதுக்குதல் என்பது ‘உள்ள புகழை மேலும் புதுமை யாகச் செய்தல்’ என்ற பொருளேயன்றி, ‘பழுது பட்ட புகழை மீண்டும் புதுப்பித்தல், என்ற பொருளும் கொள்ள லாம். இங்கு இராவணனை நினைவு கூர வேண்டும் இராவணன் பிறன் மனைவியைக் கவர்ந்து பேராண்மை’ இழந்தான்.

பிறன்மனைநோக்காத பேர் ஆண்மை, சான்றோர்க்கு
அறன் ஒன்றோ? ஆன்றஒழுக்கு.

என்பது வள்ளுவர் வாக்கு. எயிலுடைய இலங்கை நாதன் என்றைக்குச் சீதையை இதயமாம் சிறையில் வைத்தானோ, அன்றைக்கே பேராண்மை இழந்தவனாகி விட்டான். அதனால் தான், வீரமும் களத்தே போட்டு, வெறுங்கை யோடு தலை குனிந்து நடக்க வேண்டியவனானான். 'இராவணன் தோற்றுத் திரும்பினானே' என்பதற்காகக் கும்பகர்ணன் வருந்தவில்லை. 'வானமும் வையமும் வளர்ந்த புலத்தியர் குலத்தின் புகழ் போனதே' என்று வருந்தினான்; வேதனைப் பட்டான்.

இராவணனைப் போன்றே கும்பகர்ணனுக்கும் இராமன் முன்பு நிராயுதபாணியாக நிற்கும் நிலை ஏற்பட்டது. சீதையைத் தூக்கிச் செல்ல முயன்ற சூர்ப்பணகை மூக்கை யும் காதையும் இழந்ததுபோல், சுக்கிரீவனைத் தூக்கிச் செல்ல முயன்ற கும்பகர்ணன் மூக்கையும் காதையும் இழந்தான். கும்பகர்ணனது மூக்கையும் காதையும் சுக்கிரீவன் கடித்து எடுத்துச்சென்று விட்டான். முன்பு தங்களுக்கிருந்த வான் புகழையும், இன்று நேர்ந்த இழி தகவையும் எண்ணி யெண்ணி, ஊழித்தீயும் அவியும்படி நெடுமூச்செறிந்தான் கும்பகர்ணன். தன் எதிரே, மாயமாக் கூத்தன் இராமன் நிற்பதையும் கண்டான். இராமனுக்கும் கும்பகர்ணனுக்கும் கடும்போர் நிகழ்கிறது. போரில் கும்பகர்ணன், தனது வாள், கேடயம், கவசம் ஆகியவற்றை இழந்ததோடு சூலப்படையையும் இழந்து நிற்கிறான். கும்பகர்ணனுக்குத் துணையாக வந்த நால்வகைப்படை களும் அழிந்தன. நிராயுதபாணியாக நிற்கும் கும்ப கர்ணனைப் பார்த்து இராமன் வினவுகிறான்.

ஏதியோடு எதிர் பெருந்துணை இழந்தனை;
எதிர் ஒரு தனி நின்றாய்;
நீதியோனுடன் பிறந்தனை ஆதலின்,
நின் உயிர் நினக்கு ஈவென்;

போதியோ? பின்றை வருதியோ? அன்றுஎனின்
போர் புரிந்து இப்போதே
சாதியோ? உனக்கு உறுவது சொல்லுதி,
சமைவுறத் தெரிந்து அம்மா!

''கும்பகர்ணா! நீ இப்போது ஆயுதமும் படையும் இழந்து தனியே நிற்கின்றாய். இந்த நேரத்தில் உன் உயிர் என் கையில் இருக்கிறது. நீதிமானாகிய வீடணனுடன் பிறந்தாய் என்ற ஒரே காரணத்திற்காக, உன் உயிரை உனக்கே பிச்சையளிக்கிறேன். ஏற்றுக்கொண்டு போகின்றாயா? பின்பு வருகின்றாயா? இரண்டுமின்றேல் போர் புரிந்து இப்போதே சாகின்றாயா? நன்றாக ஆலோசித்துச் சொல்'' என்றான் இராமன். நிராயுதபாணியாகித் தனியே நிற்பவனோடு வலிமை காட்டுதல் பேராண்மை அன்று ஆதலின், இராமன், அன்று இராவணனிடம் ஊராண்மையைக் காட்டினான்; இன்று கும்பகர்ணனிடம் ஊராண்மையைக் காட்டுகிறான். அன்று இராவணன், இராமன் போட்ட உயிர்ப்பிச்சையை ஏற்றுக் கொண்டு இலங்கைக்குத் திரும்பினான். இன்று, கும்பகர்ணன், இராமன் ஈவதாகச் சொன்ன உயிர்ப் பிச்சையை ஏற்றுக் கொள்கிறானா? மறுக்கிறானா? பார்ப்போம். இப்போது கும்பகர்ணன் கூறுகிறான்:—

''மற்று எலாம் நிற்க; வாசியும், மானமும் மறத்துறை
வழுவாத
கொற்ற நீதியும், குலமுதல் தருமமும் என்று இவை
குடியாகப்
பெற்ற நுங்களால், எங்களைப் பிரித்து, தன் பெருஞ்
செவி மூக்கோடும்
அற்ற எங்கைபோல், என்முகம் காட்டிநின்று ஆற்ற
லென் உயிர் அம்மா!''

"உங்கள் தோள்தலை வாள்கொடு துணிந்து உயிர்
குடித்து எம்முன் உவந்துஎய்த
நங்கை நல்நலம் கொடுக்கிய வந்தநான், வானவர் நகை
செய்ய,
செங்கை தாங்கிய சிரத்தொடும் கண்ணின் நீர் குருதி
யினொடு தேக்கி,
எங்கைபோல் எடுத்து அழைத்து, நான் வீழ்வெனோ
இராவணன் எதிர் அம்மா!

இராமன் வினாவுக்கு கும்பகர்ணன் விடை கூறும் இந்த இரண்டு பாடல்களிலும் தன் தங்கை சூர்ப்பணகையை ஒப்பு நோக்கி மறுப்புரை கூறுகிறான்" மூக்கும் காதும் இழந்ததில் என் தங்கையுடன் ஒற்றுமை இருப்பினும், இராவணன் காலில் விழுவதில் ஒற்றுமை காண முடியாது. அவள் பெண்ணாகிய காரணத்தால் அவ்வாறு வீழ்ந்து அழுதாள். அவளைப் போல்வீழ்ந்துஅழுவதற்குப் பெட்டையா நான்? பெண்மை வீழ்ந்து அழுததைப் போல ஆண்மை வீழ்ந்து அழுமா? பேரண்மை இழந்தவன் காலில், பேராண்மையுடைய நான் விழுவேனா? பேராண்மை இழந்தவன் காலில், பேராண்மை இழப்பதற்குக் காரண மானவள் வீழ்ந்தாள். எதிர்ப்பவன் வீழ்வேனா?" என்று மறுத்துரைத்தான் கும்பகர்ணன். அன்று, முதற் போரில் இராவணனால் பாழ்பட்டுப் போன அரக்கர் குலத்தின் புகழை, இன்று புதுப்பித்தான் கும்பகர்ணன் என்பது புலனாகும்.

அன்றொருநாள் பஞ்சவடிக் காட்டில் சூர்ப்பணகை மூக்கும் காதும் இழந்தது இலங்கைப் போர் மூள்வதற்குக் காரணமாய் அமைந்தது. இன்றுகும்பகர்ணன் மூக்கும்காதும் இழந்தது இலங்கைப் போர் முடிவதற்குக் காரணமாய் அமைந்தது. எப்படியெனில்:- "ஐயன் வில்தொழிலுக்கு ஆயிரம் இராவணர் அமைவிலர்" என்பதை நன்கு உணர்ந்து கொண்டான் கும்பகர்ணன். "என்னை

வென்றுளர் எனில், இலங்கைக் காவல! உன்னை வென்று உயர்தல் உண்மை'' என்ற உண்மையை, அண்ணனிடம் அன்றே எடுத்துரைத்தான் கும்பகர்ணன். இராவணன் கேட்கவில்லை. 'கருத்திலா மன்னன் தீமை கருதினால் அதனைச் சாத்து திருத்தலாம் ஆகின் நன்றே; திருத்துதல் தீராதாயின், அவர்களுக்கு முன்னே சாதலை விட வேறு வழியே இல்லை' என்ற முடிவுக்கு வந்து விட்டான். நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிது நாள் வளர்த்துப் பின்னைப் போர்க் கோலம் செய்து விட்டவனுக்கு உயிர் கொடுக்கத் துணிந்து விட்டான். போருக்கும் புறப்பட்டான். வியத்தகு போர் புரிந்தான். கும்பகர்ணனின் போராற்றலைக் கண்டு, இராமபிரானே கை விதிர்த்து நின்று அதிசயித்துப் போனான் என்றால், அவனது வீரத்தை மேலும் புகழ்தல் வேண்டுமோ?

இராம காதையில், இராவணன் வதைப் படலத்தில், இராகவன் இராவணனைக் கொன்றான். கும்பகர்ணன் வதைப் படலத்தில், இராமன் கும்பகர்ணனைக் கொல்ல வில்லை; கும்பகர்ணனது வேண்டுதலை இராமன் நிறை வேற்றினான்.

''மூக்கு இலா முகம் என்று முனிவர்களும் அமரர்களும்
நோக்குவார் நோக்காமை நுண்கணையால் என் கழுத்தை
நீக்குவாய்; நீக்கிய பின் நெடுந்தலையைக் கருங்கடலுள்
போக்குவாய்; இது நின்னை வேண்டுகின்ற பொருள்''
என்றான்

கும்பகர்ணன், தனக்குச் சாக்காட்டை இராமனிடம் வேண்டிப் பெற்றான் என்று எண்ணும் போது, நம்முடைய உள்ள மெல்லாம் வியப்பினால் விரிகின்றது. உடலெல்லாம் மயிர்க்கால்கள் சிலிர்க்கின்றன. இராமாவதாரத்தில் இராவணன் உயிர் கொடுத்துப் பழிகொண்டான்; கும்பகர்ணன் உயிர்கொடுத்துப் புகழ் கொண்டான்.

புகழ் கொண்ட கும்பகர்ணன், 'பழிகொண்ட இராவணன் கண்களிலே தன் முகத்தைக் காட்டக்கூடாது, என்ற காரணத்திற்காகத்தான் தன் தலையைத் துண்டித்துக் கடலில் எறியும்படி இராமனிடம் வேண்டினான் போலும்! அன்று, அண்ணனிடம் விடைபெற்றுப் போருக்குப் புறப்பட்ட போது, "அற்றதால் முகத்தினில் விழித்தல்" என்று சொல்லிப் புறப்பட்டதன் பொருளும் இன்று தான் புரிகின்றது. "கும்பகர்ணன் போரில் மாண்டு போனால், இறந்தவன் தன் முகத்தில் விழிக்க முடியாதேயொழிய, தான் தம்பி முகத்தில் விழிக்கலாம்" என்று இராவணன் எண்ணியிருக்கலாம் அந்த வாய்ப்பும் இராவணனுக்கு இல்லாமல் போயிற்று. இராவணன் போர்க்களத்திற்குச் சென்று பார்த்தபோது, தம்பியின் தலையற்ற உடலைத் தானே கண்டான். முகத்தில் விழிக்க முடியாமல் போயிற்றே.

புகழ் கொண்ட கும்பகர்ணனுடைய மரணச் செய்தி கேட்டுப் பழிகொண்ட இராவணன், "தம்பி தன் பொருட்டு இறந்தான்" என்று அறிவழிந்து, அவசன் ஆகி, அண்டம் முற்ற அரற்றி அழுதான். எப்படி?

"நோக்கு அறவும் எம்பியர்கள் மாளவும், இந் நொய்து இலங்கை
போக்கு அறவும், மாதுலனார் பொன்றவும், என் பின் பிறந்தாள்
மூக்கு அறவும், வாழ்ந்தேன்—ஒருத்தி முலைக் கிடந்த
ஏக்கறவால்; இன்னம் இரேனோ, உனை இழந்தும்?"

ஊனும் உதிரமும் ஊட்டித் தன்னை வளர்த்தவனுடைய கண்ணீரைப் பெறவேண்டும் என்பதற்காகவே, கும்பகர்ணன் தன் மரணத்தை இராமனிடம் வேண்டிப் பெற்றான் போலும்!

"புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பின், சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து"

என்னும் குறளுக்கு எடுத்துக் காட்டாக இறந்தான் கும்பகர்ணன்.

கும்பகர்ணன் மரணமன்றோ புகழ்ச்சிக்குரிய மரணம்! புகழுக்காகவே வாழ்ந்து, புகழுக்குப் புதுமை கூட்டிப் புகழைப் புதுக்கிப், புகழுக்காகவே உயிர் கொடுத்தவன் கும்பகர்ணன்.

"ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ்அல்லால்
பொன்றாது நிற்பதுஒன்று இல்."

# வீடணனால் விளைந்த விபரீதம்

இலங்கைப் போர் முடிந்தது. இரக்கம் என்னும் ஒரு பொருளில்லா அரக்கர் அழிந்தனர். அறம் வென்றது, பாவம் தோற்றது கருநிறத்து அரக்கர்பால் வெளித்து வைகுதல் அரிதெனக்கருதி அவர் உரு மேவி, ஒளித்து வாழ்கின்ற தருமமே அனைய வீடணனுக்கு இலங்கையின் முடி சூட்டப் பெறுகிறது. நெடு முடி சூடிய நீதியோனாகிய வீடணன் இராமனை வணங்கினான். 'இம்மை மறுமைப் பயன்களான புகழையும் புண்ணியத்தையும் நிலை நிறுத்தி, அரச நீதியும் அறத்தின் மார்க்கமும் மாறாமல், நல்லொழுக்கத்தில் நின்று இலங்கையை அரசாளுக!'' என்று இராமனும் வாழ்த்தியருளினான். இந்த மகிழ்ச்சிக் குரிய செய்தியை அனுமன் வாயிலாகச் சீதைக்கும் சொல்லியனுப்பினான் இராமன் உணங்கிக்கிடந்த பூங்கொடிக்கு உயிர் தரும் நீர்போல், சீதைக்கு அனுமன் சோபனச் செய்தி சொல்லினான். அச்செய்திகேட்டுச் சீதையும் அமிழ்தமுண்டவள்போலானாள்.

ஆம்! இராமனும் சீதையும் ஒன்றிய உணர்வுடையவர் கள்: இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தியவர்கள்; ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆனவர்கள்; கருங்கடற் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்து கூடியவர்கள். ஒன்றிய போகமும் யோகமும் ஒத்து, பூமகளும் பொருளும் போல் நிலைத்து வாழ்ந்தவர்கள். இராமன் நாடுதுறந்து காடு சென்றபோதும்; 'நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு'

என்று மரவுரிதரித்துக் கணவரின் கரம்பற்றித் திருமகள் போல் சென்றவள் சீதை.

கருங்கடலில் பிரிந்து அயோத்தியில் கூடிய அண்ணலும் அவளும் மீண்டும் ஆரணியத்தில் பிரிவு ஏற்பட்டு வருந்தினார்கள். 'வம்பிழை கொங்கை வஞ்சி வனத்திடைத் தமியள் வைக, கொம்பிழை மானின் பின்போய்க் குலப்பழி கூட்டிக்கொண்டான்' இராமன். வஞ்சனை மானின் பின்போன இராமன் திரும்பிவந்தபோது, சீதையைப் பர்ண சாலையோடு காணாமல் ஏங்கித் தவித்தான். உடலைப் பிரிந்து சென்ற உயிர், மீண்டும் வந்தபோது உடலைக் காணாமல் நின்றது போல நின்றான் இராமன். ஒருவன் பாடுபட்டுத் தேடிய செல்வத்தைப் பின்னாளில் தனக்கு உதவும் என்று எண்ணி, மண்ணில் புதைத்து வைத்துப் பின்பு போய்ப் பார்க்கையில், கள்வர் கவர்ந்து சென்றதாக அறிந்து திகைத்து நின்றவனைப் போன்று நின்றான் இராமன். இராமன் பட்ட வேதனை ஏட்டிலும் அடங்காது; கம்பன் பாட்டிலும் அடங்காது.

சீதையைப் பிரிந்த இராகவன் பட்ட வேதனை சேதுக்கரையைக் கண்டதும் உச்சநிலையடைந்தது.

"உடலினை நோக்கும்; இன் உயிரை நோக்குமால்;
இடரினை நோக்கும்; மற்று யாதும் நோக்கலன்;
கடலினை நோக்கும்; அக்கள்வன் வைகுறும்
திடரினை நோக்கும்; தன் சிலையை நோக்குமால்."

சீதையின் பிரிவை நினைந்து மெலிவுற்ற தன் உடலை நோக்கினான் இராமன். தன் உயிருக்கு நிகரான சீதை சிறையிருக்கும் திசையையே நோக்கினான். அவள் பிரிவால் விளைந்த துன்பத்தினை நினைந்து நெகிழ்ந்தான். சீதையைச் சிறை மீட்கும் சிந்தனையின்றி வேறொரு சிந்தனையும் அவனுக்கில்லை. தன் கண்ணெதிரே அலை வீசியழைக்கும் கடலினைக் கண்டான். அக்கடலுக்கப்பால் சீதையைக் கவர்ந்து வைத்திருக்கும் கள்வனான இராவணன்

வாழும் இலங்கைத் தீவினைக் கண்டான். சீதை சிறை மீட்பின் பொருட்டு மூளப்போகும் இலங்கைப் போரில் வெற்றி தேடித்தரும் தன் வில்லாற்றலை நோக்கினான். இராமருடைய வேதனையின் விளைவு இது.

சிறையிருந்த சீதை தன் கற்பின் ஆற்றலைக் காட்டி ஒரு சொல்லினால் இலங்கையைச் சுட்டிருப்பாள். அப்படிச் செய்தால், அது, தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசி விட்டாள். சோகமே உருவாக அசோகவனத்தில் சீதை தவங்கிடந்த நிலையைக் கண்டு வந்து சொன்னவன் இராம தூதன் அனுமன்தான்.

''பேண நோற்றது மனைப்பிறவி, பெண்மைபோல்
நாணம் நோற்று உயர்ந்தது; நங்கை தோன்றலால்;
மாண நோற்று, ஈண்டு இவள் இருந்தவாறு எலாம்
காண நோற்றிலன், அவன் கமலக் கண்களால்''

என்று எண்ணி வியந்த அனுமன் விரைந்து வந்து ''கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்'' என்று அண்டர் நாயகனுக்குப் பன்னிப் பன்னிச் சொன்னவனும் அனுமனே. ஆகையால்தான் இலங்கைப்போர் முடிந்ததும், அரக்கர் குலம் அழிந்த மகிழ்ச்சியான செய்தியை அனுமனிடமே சீதைக்குச் சொல்லியனுப்பினான் இராகவன்.

இராம தூதனாகிய அனுமன் சீதையிடம் சோபனச் செய்தியைச் சொல்லிய பிறகு, திரிசடையொழிந்த அரக்கியர்களை அழிக்கத் தனக்கு ஆணையிடும்படி சீதையிடம் வேண்டினான். சீதையோ, ''கூனியின் கொடியார் இலரே இவர்!'' என்று கூறி அதனைத் தவிர்க்கிறாள். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்கின்ற சீதையின் சால்புமனப் பான்மையைக் கண்டு அனுமன் வியந்து மெச்சுகிறான். பகைவனுக்கு அருளுகின்ற பண்புள்ள கோசல நாட்டு வள்ளலின் மனைவியும் அருளுள்ளத்தோடு விளங்குவதைக் கண்டு அனுமன் அதிசயித்து வணங்கினான்.

"என்ற போதின், இறைஞ்சினன் எம்பிரான்
தன் துணைப் பெருந் தேவி தயா" எனா

இது, அசோகவனச் சிறையில் நிகழ்ந்த நிகழ்ச்சி, அதே சமயத்தில், போர்ப் பாசறையில் வீற்றிருந்த இராமபிரான், வீடணனை நோக்கி, "நீ போய்ச் சீதா தேவியைச் சிறப்போடு அழைத்துவா!" என்று ஆணையிடுகிறான். அசோக வனத்து நிகழ்ச்சியையும், பாசறையின் நிகழ்ச்சி யையும் பாலம் அமைத்து இணைக்கிறது கம்பன் பாடல் ஒன்று,

என்ற போதின், இறைஞ்சினன், 'எம்பிரான்
தன்துணைப் பெருந் தேவி தயா' எனா
நின்ற காலை, நெடியவன், "வீடண!
சென்றுதா நம தேவியைச் சீரொடும்"

இதுதான், அந்த ஒரு பாடல்.

சற்று முன்புதான் வெற்றிச் செய்தியைச் சீதையிடம் சொல்லிவரும்படி அனுமனை அனுப்பிய இராமன், சிறிது நேரம் கழித்துச் சீதையைச் சீரொடும் அழைத்து வரும் படி வீடணனிடம் ஆணையிடுகிறான். வெற்றிச் செய்தி யையும், வீடணன் முடி சூடிய செய்தியையும் சொல்லிச் சீதையை அழைத்து வரும்படி அனுமனிடமே ஆணை யிட்டிருக்கலாம் இராமன். அல்லது, அனுமனையனுப்பியதைத் தவிர்த்து, வெற்றிச்செய்தியைச்சொல்லிச் சீதையைஅழைத்து வரும்படி வீடணனிடமே பணித்திருக்கலாம் இருவரிடம் இட்டவேலைகளை ஒருவரைக் கொண்டே முடித்திருக்கலாம். அவ்வாறு இராமன் செய்யாததற்குக் காரணம் என்ன?

சீதையை அசோகவனத்தில் முதன் முதலில் கண்ட இராமதூதன்,

"ஈண்டு, ஒருதிங்கள், இவ் இடரின் வைகுதல்
வேண்டுவது அன்று; யான், விரைவின் வீரனைக்
காண்டலே குறை; பின்னும் காலம் வேண்டுமோ?
ஆண்தகை இனிஒரு பொழுதும் ஆற்றுமோ?

'குராவரும் குழலி! நீகுறித்த நாளினே,
விராவு அரு நெடுஞ்சிறை மீட்கிலான் எனின்,
பரா வரும் பழியொடும் பாவம் பற்றுதற்கு,
இராவணன் அவன்; இவன் இராமன் என்றனன்.

இவ்வாறு சீதையிடம் சொல்லிவந்த அனுமனிடமே சிறை மீட்டற்குரிய வெற்றிச் செய்தியைச் சொல்லியனுப்ப வேண்டுமென்பது இராமனுடைய விருப்பம். ஆதலால், அனுமனை அந்தக் கால எல்லைக்குள் அனுப்பினான் காகுத்தன். மேலும், சிறையிருந்த சீதையை அவள் மனம் மகிழும்படி வரவேற்பு வைபவங்களுடன் அழைக்க வேண்டுமென்று ஆசைப்பட்டான் இராமன். அரசமரியாதைக்கு ஆணையிடும் அதிகாரம் அனுமனுக்கு இல்லை. ஆகையால், சொல்லின் செல்வனிடம் வெற்றிச் செய்தி சொல்லியனுப்புவதோடு நிறுத்திக் கொண்டான்.

அடுத்து, மயிலுடைச் சாயலாளைச் சிறையிலிட்டவன் எயிலுடை இலங்கை நாதன் இராவணன். ஓர் அரசனால் சிறையிடப்பட்டவளை, மற்றோர் அரசனைக் கொண்டு விடுதலை செய்வதே சிறப்பென்று கருதினான் இராமன். அன்றைய இலங்கை வேந்தன் இராவணனால் சிறைப்பட்டவளை, இன்றைய இலங்கை வேந்தன் வீடணனால் விடுவிக்க விரும்புவது தான் இராமனுக்குரிய பெருந் தன்மை. இராம வீரனுக்குரிய இலக்கணமும் அது தான் சிறையிருந்தவளை விடுவிக்க விளைந்த விடுதலைப் போரின் வெற்றி விழாவினையும் வரவேற்பு விழாவினையும் இணைத்துச் செய்யும் தகுதியும் அதிகாரமும் இலங்கை முடியை ஏற்றுக் கொண்ட வீடணனுக்கே உண்டு என்று கருதினான் இராமன். அதனால் தான், "வீடண! சென்று

தா, நமதேவியைச் சீரொடும்'' என்று கட்டளை யிட்டான்.

'சீர்' அல்லது 'சீர்மை' என்ற சொல்லுக்குச் சிறப்பு, பெருமை, புகழ், இயல்பு, நன்னடை, செல்வம், அழகு என்ற பொருள்கள் உண்டு. சிறையிருந்த செல்வியின் நன்னடையினை உலகுக்கு உணர்த்த, சிறையிலிருந்த இயல்பு குன்றாமல், அவளுடைய புகழுக்குரிய பெருமையோடு சிறப்பாக அழைத்துவா என்பதே ''சீரொடும்'' என்றதன் பொருள். வீடணனோ, ''ஆடை அணிகலன்களால் அழகு படுத்தி அழைத்து வா!'' என்று சொன்னதாகப் பொருள் கொண்டு விட்டான்.

அசோகவனத்தில் சிறையிருந்த சீதை, ஆவி அம்துகில் புனைவது ஒன்று அன்றி வேறு அறியாது-துயில் எனக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்து-சுருதி வானவன் வரும் வரும் என்றதோர் துணிவோடு-மென் மருங்குல் போல வேறு உள அங்கமும் மெலிந்து-வெயிலிடைத் தந்த விளக்கு என ஒளியிலா மெய்யோடு-பிரிவு எனும் துயர் உருவு கொண்டாலன்ன பிணியுடன் கற்பினைக் காத்துக் கிடந்த தவம்செய்த தவமாம் தையலை, அவள் மகிழும்படியும், அரச மரியாதையோடும் அழைத்து வரவேண்டுமென்பதே இராமனது குறிக்கோள். அந்தக் குறிக்கோளில் தான் ''சீரொடு'' என்ற சொல்லைப் பெய்து பேசினான் இராமன். வீடணன் இராமன் மீது செலுத்திய அளவு கடந்த பக்தியின் காரணமாகத் திரிபுணர்ச்சியோடு பொருள் கொண்டு விட்டான். ஆடை ஆபரணங்களால் அலங்கரித்து அழைத்து வரும்படி கட்டளையிட்டதாகக் கருதி விட்டான். மேலும், புதிதாக அரச பதவியேற்ற விடணன், தன்னுடைய செல்வாக்கைப் பயன்படுத்தி, வரவேற்பு வைபவத்தைச் சிறப்பாக நிகழ்த்திக் காட்டவும் இதை ஒரு வாய்ப்பாகக் கொண்டு விட்டான்.

இராமனது பணியினையேற்ற வீடணன், சீதையிடம் விரைந்து வந்து,

"பூண்தக்க கோலம் வல்லை
புனைந்தனை, வருத்தம் போக்கி,
ஈண்டு கொண்டு அணைதி" என்றான்;
'எழுந்தருள் இறைவி' என்றான்.

சீதையோ,

"யான் இவண் இருந்த தன்மை,
இமையவர் குழுவும், எங்கள்
கோனும், அம்முனிவர் தங்கள்
கூட்டமும், குலத்துக்கு ஏற்ற
வான் உயர் கற்பின் மாதர்
ஈட்டமும், காண்டல், மாட்சி;
மேல் நிலை கோலம் கோடல்
விழுமியது அன்று-வீர!"

என்றாள்.

"நான் சிறையிருந்த கோலத்திலேயே வருதல் தான் சிறப்பு. அப்படி வந்தால் தான், என் கற்பினைக் கையுறு நெல்லியங்கனி போல் காட்ட முடியும். ஆடை அணிகளால் அலங்கரித்துக் கொண்டு வருதல் பெருமையன்று" என்று வீடணன் வேண்டுதலை மறுத்துரைத்தாள் சீதை.

சீதையின் மறுப்பைக் கேட்ட இராக்கதர்க்கு இறைவன், 'நீலக்குன்று அனதோளினான்தன் பணியினின் குறிப்பு இது" என்று கூறினான். இராமன் கூறியதாக வீடணன் கூறவில்லை; இராமன் பணித்ததன் குறிப்பு இது என்றுதான் கூறினான். கணவனின் குறிப்பறிந்து ஒழுகல் மனைவியின் கடமையாதலால், சீதை நாயகக் கோலங்கொள்ள இசைந்தாள்.

அரம்பை, மேனகை, உருப்பசி, திலோத்தமை முதலிய வானமாதர்கள் வந்து சீதையை அலங்கரித்தார்கள். அலங்கரிக்கப் பெற்ற சீதையை விமானத்தில் ஏற்றித் தேவமாதர்கள் சூழ்ந்துவர வீடணன் அழைத்துச் சென்றான்.

சீதையைக் காணவந்தோர் கூட்டம், விமானத்தை நெருங்கிச் சூழ்ந்தது. நெருக்கத்தைக் கலைக்க, அரக்கர்கள் பிரம்படிப் பிரயோகம் செய்தனர். அடி தாங்க முடியாது அலறி ஓடிய கூட்டம், கடல் ஒலி போல் பேரொலி எழுப் பியது. ஒலியின் காரணத்தை முனிவர்கள் வாயிலாகக் கேட்டறிந்த இராமன், வீடணனை நோக்கி உதடுகள் துடித்திடச் சினந்து பேசினான்.

"அரக்கர் கோவே! நீ, தகாத செயல் செய்தியோ? இவர் களைத் துன்புறுத்தும்படி உனக்குக் கட்டளையிட்டது யார்? இவர்களைத் தடுப்பது, உனக்கு அடுப்பதன்று" என்று கடிந்து கூறினான் இராமன். இராமனது சீற்றங்கண்டு வீடணன் வருத்தமடைந்து நெடு மூச்செறிந்து நடுங்கி நின்றான். வீடணன் செயலினால் இராமனுக்கு எழுந்த சீற்றம், சீதையின் மீதும் பாய்ந்தது.

படமெடுத்த பாம்பு சீறுவது போல் சினந்து சீறினான் இராமன். இந்தக் கோலத்தில்தான் உன் கற்பொழுக்கத்தைக் காத்து நின்றாயா? இப்படித் தான் அலங்காரத்தோடு அசோகவனத்தின் சிறைவாசத்தை அனுபவித்தாயா? இப்படி மினுக்கி வந்தால்தான் ஏற்றுக் கொள்வேன் என்று எண்ணினாயோ? நீ என் எதிரினின்றும் போதி! அல்லது சாதி! என்று சினந்து பேசினான் இராமன்.

மங்கையின் மனநிலையை உணர முடியாமல் இராமன் மனங்கசந்து பேசியதால், சீதை தீப்புக வேண்டியதாயிற்று. சீதையின் அக்கினிப்பிரவேசம், திரிபுணர்ச்சியின் காரண மாக வீடணன், 'சீரொடும்' என்ற சொல்லுக்கு மாறுபா டாகப் பொருள் கொண்டு சீதையை அலங்காரம் செய்து அழைத்து வந்ததால் விளைந்தது. சீதை சிறையிருந்த கோலத்தோடு அழைத்து வந்திருந்தால் இந்த விபரீதம் ஏற்பட்டிருக்காது.

இராமபிரான் வீடணன் செயலினைச் சில சமயங்களில் கண்டித்தும் இருக்கிறான்; பின்னர்ப் பாராட்டியுமிருக்கிறான். பழுதற்ற பக்தியின் விளைவு பாராட்டத்தக்கது தானே! இந்திர சித்தனுடைய நாகபாசத்தால், இலக்குவன் மயங்கிக் கிடந்த நிலை கண்டு, "என்னைக் கெடுத்தனை வீடணா!" என்று சினந்து பேசினான் இராமன். இந்திரசித்தன் இறந்த பிறகு "வீடணன் தந்த வெற்றி இது" என்று பாராட்டியுமிருக்கிறான். அப்படித்தான் பிரம்படிப் பிரயோகம் அறிந்த இராமன், "வீடணா! நீ தகாத செய்தியோ?" என்று சினந்தான். "சீரொடும்" என்ற சொல்லுக்கு வீடணன் கொண்ட பொருளின் விளைவு, சீதையைப் புடமிட்ட பொன்னாக்கியது. இப்போது, வீடணனை இராமன் பாராட்டலாமல்லவா?

விபரீதம் விளைத்த பாடலை மீண்டும் காண்போம்:—

"என்ற போதின், இறைஞ்சினன், 'எம்பிரான்
தன் துணை பெருந் தேவி தயா' எனா
நின்றகாலை, நெடியவன் 'வீடண!
சென்றுதா, நமதேவியைச் சீரொடும்."

# இராமன், சிறையிருந்த சீதையை ஏற்கத் தயங்கியது ஏன்?

நீலமேனி நெடியவனாகிய இராமன் தேவியை, நீலமா மணி நிற நிருதர் வேந்தனாகிய இராவணன் கவர்ந்து அசோகவனத்தில் சிறைவைத்து விட்டான். கள்ளவாள் அரக்கன் அக்கமலக்கண்ணனார் உள்ளுறை உயிரினை ஒளித்து வைத்துவிட்டான்.

அரக்கியர் நடுவில் சிறையிருந்த சீதை, கொடிய புலிக் கூட்டத்தின் இடையில் அகப்பட்ட இளம் பெண்மான் போன்று பேதுற்றாள். துயில் எனக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்தாள். பிரிவு எனும் துயர் உருவு கொண்டது போன்ற பிணியோடு, சுருதி நாயகன் வரும் வரும் என்ற துணிவோடு, பத்தினித் தெய்வம் பத்துத் திங்கள் கற்புத்தவம் கிடந்தது. இராமனை நினைந்து விம்மி விம்மி அழுதாள். அவளது உள்ளத்தில் ஆயிரம் கற்பனைக் கனவுகள் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி அச்சுறுத்திக் கொண்டிருந்தன.

''என்னை இராவணன் சிறையெடுத்து வந்ததைச்சடாயு சொல்லாமலே இறந்துவிட்டானோ? கடலின் நடுவில் இலங்கை உண்டென்று இராமபிரான் உணரவில்லையோ? இளையவரை நான் கடிந்து பேசியதைக் கேட்ட இராமன், என்னை 'அறிவு இல்லாதவள், என்று துறந்துவிட்டானோ?'

என்று இப்படியாகப் பன்னிப் பன்னிப் பிதற்றி, வாய் வறண்டு, உணர்வு தேய்ந்து ஆருயிர் பதைத்தாள்.

காகுத்தனைக் காணும் ஆசையால், சிறையில் துன்பங் களைச் சகித்துக் கொண்டு என் உயிரைப் போற்றினேன். அரக்கர் சிறையில் கிடந்த என்னை, அப்புனிதன் தீண்டு வானோ? இல்லற தருமத்தை இகந்தவள் என்று பழித்து விடுவானோ? 'பிறர்மனை எய்திய பெண்ணைப் பேணுதல் அறமன்று' என்று அகற்றி விடுவானோ? இலங்கைநாதனின் இதயச் சிறையிலே கிடந்தவள் இவள் என்று ஏசி நிற் பானோ?

"அற்புதன், அரக்கர்தம் வருக்கம் ஆசு அற,
வில்பணி கொண்டு, அருஞ் சிறையின் மீட்டநாள்
'இல்புகத் தக்கலை' என்னில் யானுடைக்
கற்பினை, எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்?"

என்று, ஆயிரம் எண்ணங்களால் அலைக்கழிந்தாள். ஆத லால், சாதலுக்கும் துணிந்தாள். அனுமனால், அது தவிர்ந் தாள்.

இராவணன் மடிந்த பின்பு இலங்கைப் போர் முடிந் தது. இராமன், வீடணனை அனுப்பிச் சீதையை அழைத்து வரச் செய்தான். வந்த சீதை பச்சிலை வண்ணமும் பவள வாயுமாய்க் கைச்சிலை ஏந்தி நின்ற இராமனைக் கண்ணுற்றுத் தொழுது ஏக்கம் நீங்கினாள். இராமனும்

"கற்பினுக்கு அரசினை, பெண்மைக் காப்பினை,.
பொற்பினுக்கு அழகினை, புகழின் வாழ்க்கையை,
தற்பிரிந்து அருள்புரி தருமம் போலியை,
அற்பின் அத்தலைவனும் அமைய நோக்கினான்,"

இராமன் பார்த்த பார்வையே சீதைக்கு பயத்தை ஊட்டி யது. பாம்பு படமெடுத்துப் பார்ப்பது போல் பார்த்தான். அசோகவனத்தில் சிறையிருந்த சீதை, சோகத்தாளாக

இருந்ததாக அனுமன் சொல்லியதை இராமன் நினைத்தான். இப்போது, எதிரே வரும் அலங்காரச் சீதையைக் கண்டதும் ஆத்திரமும் ஆவேசமும் பொங்கின; சீற்றமும் சினமும் மேலோங்கின. பிரிந்து வருந்தியவள் மீண்டும் வந்தபோது, கனிவோடு பேசவேண்டிய இராமன், முனிவோடு பேசத் தொடங்கிவிட்டான்.

''இலங்கையில் பத்துத்திங்கள் ஊனுண்டு, ஒழுக்கம் கெட்டு மீண்டும் என்னிடம் வந்தது என்ன காரணம்? ஏற்றுக் கொள்வேன் என்று நினைத்தா இங்கு வந்தாய்? உன்னை மீட்கும் பொருட்டு நான் போர் செய்யவில்லை; என்னைப் பழியினின்று காக்கும் பொருட்டே போர் செய்தேன். அரக்கர்களோடு கூடி மது மாமிசங்களைத் தேவாமிர்தமாக உண்ட நீ, அந்த விருந்தை எங்களுக்குப் படைக்கவா இங்கு வந்தாய்? நல்ல குலத்தில் பிறந்திருந்தால், நல்லொழுக்கத்தைப் பெற்றிருப்பாய்; புழுவைப்போல மண்ணில் பிறந்த நீ, உன் புத்தியைக் காட்டிவிட்டாய். நீ ஒருத்தி தோன்றிய காரணத்தில், பெண்மைக்குரியபெருமைகளெல்லாம் வள்ளன்மையில்லாத மன்னனது புகழ்போல மாய்ந்து விட்டன. நல்ல குலப்பெண்கள் கணவரைப்பிரிந்த காலத்து சடைமுடிதரித்துத் தவம் கிடப்பர்; ஐம்புலன்களை அடக்குவர்; இடையில் பழிநேர்ந்தால் உயிரையும் விடுவர். உன்னுடைய ஒழுக்கம் தவறிய செயல், என்னுடைய அறிவை அறுக்கின்றது. நீ செத்து ஒழி! அல்லது நீ விரும்பிய இடத்துக்குச் சென்று சேர்.'' என்று கடிந்து பேசினான் இராமன்.

இராமன் வீசிய சுடுசொற்கள், சீதையின் இதயப் புண்ணிலே கோல் கொண்டு குத்தியது போலிருந்தன. வேதனையால் தலை கவிழ்ந்து, நெடுமூச்சு விட்டு இரத்தக் கண்ணீர் வடித்தாள்.

"பருந்து அடர் சுரத்திடை, பருகுநீர் நசை இ
வருந்த அருந் துயரினால் மாளலுற்ற மான்,
இருந்தடம் கண்டு, அதின் எய்துறா வகைப்
பெருந்தடை உற்றெனப் பேதுற்றாள் அரோ"

பாலைவனத்தில் பருகுவதற்கு நீரின்றி அலைந்து திரிந்து வாடிய மான், ஒரு நீர்நிலையைக்கண்டு நீர்பருக ஆவலோடு நெருங்கும் போது, அதற்குப் பெருந்தடை ஏற்பட்டது போல சீதை வருந்தினாள். சிறையிருப்பிலும் இராமனையே தியானித்து வாழ்ந்தவளுக்கு— இராமன் வந்து தன்னை சிறைமீட்பான் என்று உயிர் வாழ்ந்திருந்தவளுக்கு—இராமனை மீண்டும் காணலாம் என்று காத்துக்கிடந்தவளுக்கு இத்தகைய கொடிய சோதனை ஏற்பட்டால் தாங்கிக் கொள்ள இயலுமா? பிரமனாலும் மாற்றமுடியாத கற்பொழுக்கமுடையவளைக் கணவனான இராமனே சந்தேகித்தானென்றால், வேறு யாரால் அவளுடைய கற்பொழுக்கத்தை அறிய முடியும்? உலகத்துப் பொருள்கள் அனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறியும் மும்மூர்த்திகளும் மங்கையர் மனநிலையை உணரமாட்டார்களா? வேதவடிவானவனே இனி யாருக்காக என்கற்பினை நிலைநிறுத்திக்காட்டுவேன்? ஆதலால் நீ சொன்னபடி இறத்தலே நன்று என்று தீக்குளிக்கத் துணிந்தாள் சீதை.

சீதை இளையவீரன் இலக்குவனை அழைத்துத் தீ மூட்டுமாறு வாயினால் கூறினாள். இலக்குவனோ, அண்ணனது கருத்தை அறிய இராமனை நோக்கினான். இராமனோ, இளையவனைப் பார்த்துக் கண்சாடை மூலம் தீயமைக்கும்படி ஆணையிட்டான். இலக்குவன் அழுத கண்களோடு தீமூட்டினான். செந்தாமரை மலரில் எழுந் தருளும் திருமகள் போன்று, சீதை இராமனை நினைந்த சிந்தனையோடு செந்தீயில் பாய்ந்தாள். ஜானகியின் கற்பு என்னும் கடவுள் தீயினால், அக்கினி தேவன் வலிமை குன்றி அலறினான். அக்கினியின் அலறல் கேட்ட இராமன்,

'கேவலமான இவளைச் சுடாது போற்றும் நீ யார்?' என வினவினான்.

இராமன் வினாவுக்கு அங்கியங்கடவுள் விடை பகர்கிறான்:—

"என்பெயர் அக்கினி. ஜானகி என்னும் உலக மாதாவின் கற்புத்தீ என்னைச் சுட்டது. அந்த வெம்மை தாங்கமாட்டாமல் உன்னை நாடி ஓலமிட்டேன். பெண்கள் அக்கினி சாட்சியாகத் திருமணம் செய்து கொள்ளுதலும் பிறருக்கு ஐயமுண்டான போது அக்கினி சாட்சியாகச் சத்தியம் செய்தலும், தங்களைச் சந்தேகித்தபோது தீக்குளித்து மீள்வதும் உலக மரபு. அந்த மரபில் இந்தச் சீதை, தன் கற்பின் திறத்தைக் கையுறு நெல்லியங் கனி போன்று காட்டிவிட்டாள். இவளுடைய கற்பின் தன்மையைக் கண்ணெதிரே கண்டபின்பும் சந்தேகித்து நிற்றல் தகுதியோ?" என்றனன் அக்கினித்தேவன்.

அக்கினியின் மறுமொழி கேட்ட கோசல நாட்டு வள்ளல் கூறுகிறான்:—

"அழிப்புஇல சான்றுநீ, உலகுக்கு; ஆதலால்,
இழிப்புஇல சொல்லி, நீ இவளை, 'யாதும் ஓர்
பழிப்புஇலள்' என்றனை; பழியும் இன்று 'இனிக்
கழிப்பிலள்' என்றனன்—கருணை உள்ளத்தான்."

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்கின்ற கருணை உள்ளத்தானாகிய காகுத்தன், அக்கினியின் சொல்கேட்டுச் சீதையைப் பழிப்பிலள் என்று உணர்ந்து கொண்டான் உணர்ந்த பின்னும் "கழிப்பிலள்" என்றானேயன்றி "ஏற்றுகொள்கிறேன்" என்று சொல்லவில்லை. 'அறத்தின் மூர்த்தியா இப்படி அறம் கடந்து நடப்பது' என்று எண்ணத் தோன்றுகிறது.

இராமன் சீதையை மணப்பதற்குமுன், விசுவாமித்திர முனிவனோடு மிதிலை நோக்கிச் செல்லும் போது, மதிற்புறத்துக் கிடந்த கல்லின் மீது அவனது பாதம் பட்டது. காகுத்தனது கால்துகள் கதுவியதும் கல்லுருக் கொண்டு கிடந்த அகலிகை, முன்னைய பெண்ணுருவம் பெற்று நின்றாள். அன்னையே அனைய அகலிகைக்கு இவ்வாறு அடுத்தது எவ்வாறு? என்று கோசிக முனிவனைக் கேட்டான் இராமன். கோதம முனிவனின் மனைவி அகலிகையை இந்திரன் விரும்பினான். முனிவரில்லாத சமயம் பார்த்து இந்திரன் கோதமனைப் போல் வஞ்சக வேடம் கொண்டு அகலிகையை அடைய முனிவன் குடிலுக்குள் புகுந்து விட்டான்.

"புக்கு அவளோடும், காமப் புதுமண மதுவின் தேறல்
ஒக்க உண்டு இருத்தலோடும், உணர்ந்தனள்;
உணர்ந்த பின்னும்
'தக்கது அன்று, என்ன ஓராத்; தாழ்ந்தனள்
இருப்ப, தாழா
முக்கணான் அனைய ஆற்றல் முனிவனும், முடுகி
வந்தான்"

கோதம முனிவன் வருவதைக் கண்டதும், மனையின் மாட்சியை அழித்து இழி மாதவன் பன்னி, வெருவி, மாயா நிரந்தரம் உலகில் நிற்கும் நெடும்பழி பூண்டு நின்றாள். இந்திரனோ, பூனையுருக்கொண்டு வெளியே போகலுற்றான். இந்த இழிநிலையைக் கண்ட கோதமன், இந்திரனை "ஆயிரம் மாதர்க்கு உள்ள அறிகுறி உனக்கு உண்டாக" என்று சபித்து, உடனே அகலிகையை நோக்கி 'விலைமகள் அனைய நீயும் கல் இயல் ஆதி' என்று சபித்து விட்டான்.

'பிழைத்தது பொறுத்தல் என்றும்
பெரியவர் கடனே; அன்பால்,
அழல்கரும் கடவுள் அன்னாய்!
முடிவு இதற்கு அருளுக!' என்ன

"தழைத்து வண்டுஇமிரும் தண்தார்த்
தசரத ராமன் என்பான்
கழல்துகள் கதுவ; இந்தக்
கல்உருத் தவிர்தி' என்றான்.

"இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்;
இனி, இந்த உலகுக்கு எல்லாம்
உய்வண்ணம் அன்றி; மற்றுஓர்
துயர்வண்ணம் உறுவது உண்டோ
மைவண்ணத்து அரக்கி போரில்
மழைவண்ணத்து அண்ணலே! உன்
கைவண்ணம் அங்குக் கண்டேன்;
கால்வண்ணம் இங்குக்கண்டேன்"

கோதமன் சாபத்தால் கல்உருக் கொண்டு கிடந்தவள் தான் இந்த அகலிகை. இன்று உன் கால் துகள் பட்டுக் கல்லுருவம் நீங்கிப் பெண்ணுருவம் பெற்றாள்" என்று அகலிகையின் வரலாற்றைக் கூறிமுடித்தான் கோசிக முனிவன்.

கோசிகமுனிவன் கூறியதைக்கேட்ட இராகவன், அகலிகையை 'நெஞ்சினால் பிழைப்பில்லாதவள்' என்று உணர்ந்து கொண்டான். அகலிகையின் பொன்னடிகளை வணங்கி, "அன்னையே! கோதமனின் கருணையுண்டாகும் படி வழிபட்டுத் தொண்டுசெய்! நிகழ்ந்ததை நினைத்து வருந்தாதே!" என்று ஆறுதல் கூறி அப்பாற் சென்றான். குணங்களால் உயர்ந்த கோசலநாட்டு வள்ளலாகிய இராமபிரான் கோதமனிடம் சென்று, அவனுடைய திருவடிகளை வணங்கி வலங்கொண்டு வாழ்த்தி, 'மாசு அறுகற்பின் மிக்க அணங்கினை' அவனிடத்தில் ஒப்படைத்தான்.

இராமனது கருணையுள்ளத்தை உடனிருந்து கண்ட விசுவாமித்திர முனிவன், சனகமன்னனிடம் குலமுறை கிளத்தும் போது,

"கோதமன்தன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்தது இவன்
போதுவென்றது எனப்பொலிந்த பொலன் கழற்கால் பொடிகண்டாய்"

என்று கூறினான். இதனைக்கேட்ட சனகமன்னன், "பழிப்புக்கு இலக்கான அகலிகைக்கு அருளிய அழகன், சீதை அறியாது இழைக்கும் பிழையையும் பொறுத்தருளுவான்" என்று மகிழ்ந்திருப்பான்.

அன்று அகலிகைக்கு அருளி கோதமனால் ஏற்றுக் கொள்ளச்செய்தான் இராமன் இன்று சீதைக்குஅருளிஏற்றுக் கொள்ளாதது ஏன்? பழிப்புற்ற அகலிகைக்கு அருளியவன், பழிப்பற்ற சீதைக்கு அருளாமலிருப்பானா? என்ற கேள்வி நம் உள்ளத்தில் எழுகிறது. 'சொல்லின் செல்வன்' என்று தன்னால் போற்றப் பெற்ற அனுமன், சிறையிருந்த செல்வி யைக் கண்களால் கண்டு கூறிய சொற்களே இராமனது ஐயத்தை அகற்றியிருக்க வேண்டும். அதிலும் சந்தேக மிருந்தால், அக்கினி தேவன் உரைத்த சாட்சியத்தை நம்பி யிருக்க வேண்டும். ஐயமற நம்பியிருந்தால், "சீதை என்னால் ஏற்றுக் கொள்ளுதற்குரியவள்" என்றல்லவா சொல்லியிருக்க வேண்டும். "இவள் என்னால் நீக்கத்தக்கவ ளல்லள்" என்று அருத்தாபத்தி நியாயமாகக் கூறக் காரணம் என்ன? இராமனுக்கு ஏதோ உள்நோக்கம் இருக் கிறது என்று யூகிக்க இடமிருக்கிறது.

திருமாலின் அவதாரமாகிய இராமன், முன்னைய நிலை மறந்து மனித நடமாடுகிறான என்று தேவர்கள் உணர் கிறார்கள். ஆகையால், தேவர்கள் பிரமனிடம் முறையிட்டு, இராமனுக்கு உண்மைநிலை உணர்த்துமாறு வேண்டு கிறார்கள். பிரமனும் மன்னர்குலத்தில் அவதரித்த இராம னுக்கு அவனுடைய உண்மைநிலை உணர்த்துகிறான். இராமனது நிலையை உணர்த்திய பிரமன் முடிவில்,

"இனையது ஆகலின், எம்மை மூன்று
உலகையும் ஈன்று, இம்
மனையின் மாட்சியை வளர்த்த 'எம்
மோயினை வாளா
முனையல்' என்று அது முடித்தனன்—
முந்துநீர் முளைத்த
சினையின் பந்தமும் பகுதிகள்
அனைத்தையும் செய்தோன்."

கரியமாலின் உந்தியில் பிறந்த பிரமன், திருமகளின் அவதாரமாகிய சீதையை, 'என் அன்னை' என்று கூறுகிறான் என்னையும் மூன்று உலகங்களையும் பெற்று, இல்லறத்தின் பெருமையை நிலைநிறுத்திக் காட்டுகின்ற என் தாயை ஏற்றுக் கொள்ளாது முனிந்து வெறுத்திட வேண்டாமென்று சொல்லி முடித்தான் பிரமன்.

நான்முகன் உணர்த்தியதோடு, சிவபெருமானும் இராமனுக்கு அவன் தன்மையை உணர்த்துகிறான் :

இராமா! நீ உன் தன்மையை உணராமல், நீ தரித்த மனித வேடத்திற்கு ஏற்றபடி நடிக்கிறாய். உலகின் தாயாகிய சீதை, உன்னால் வெறுத்துக் கைவிடுதற்குரிய தீயொழுக்கமுடையவளல்லள். இவளைத் தவறாக நினைத்துக் கைவிட்டால், உலகத்து உயிர்கள் காப்பாரின்றி அழிந்துவிடும். ஆகையால், அன்னை சீதையாம் மாதினை அவமதிக்காமல் மதித்து ஏற்றுக் கொள்ளுதலே நல்லது என்றான் சிவபெருமான்.

'துறக்கும் தன்மையள் அல்லளால்,
தொல்லைஎவ் உலகும்
பிறக்கும் பொன்வயிற்று அன்னை; இப்
பெய்வளை பிழைக்கின்,

இறக்கும் பல்உயிர்; இராமன்! நீ
இவள் திறத்து, இகழ்ச்சி
மறக்கும் தன்மையது,' என்றனன்
—வரதர்க்கும் வரதன்.

பிரமதேவனும் சிவபெருமானும் உணர்த்திய பின்பும் இராமனது உள்ளம் சீதையை ஏற்றுக் கொள்ளும் நிலையில் இல்லை. சிவபெருமான் பின்னும் ஆலோசித்து, சுவர்க்கத்திலிருந்த தசரத மன்னனை மண்ணுலகுக்கு அனுப்பி, இராமனுக்கு ஆறுதல் கூறி மனத்தை மாற்றுமாறு கூறினான். சிவபெருமான் பணித்த பணியின் படி, மன்னர் மன்னனாகிய தசரதன் மண்ணுலகத்திற்கு வந்தான் வந்த தந்தையைக் கண்குளிரக் கண்டு இராமபிரானும் வணங்கினான். வணங்கிய மைந்தனைத் தசரத மன்னன் கட்டித் தழுவிக் கண்ணீராட்டினான்.

"கைகேயி அன்று கொண்ட வரமென்னும் கூரிய வேலாயுதம் என் மார்பில் தைத்திருந்தது; அது, இன்று உன்னைத் தழுவியதால் நீங்கியது. புதல்வர்களைப் பெற்றுப் பெருமை பெற்றவர்களில், உன்னைப் பெற்ற என்னைவிட உயர்ந்தோர் எவருமில்லை. முன்பு, என்னால் வணங்கப்பட்ட தேவர்களும் முனிவர்களும் நான் உன்னைப் பெற்றதால், இன்று என்னை வணங்கும் பேற்றினைப் பெற்றேன்" என்று சொல்லி, பெற்ற பொழுதினும் பெருமை பெற்றான் தசரத மன்னன்.

அடுத்து, தன்னை வந்து வணங்கிய சீதையை வாழ்த்தி ஆறுதல் கூறினான் தசரதன்: "நங்கையே! இராமன் உன்னைத் தீக்குளிக்கச் செய்தான் என்று வருந்தாதே. உலகத்தார் சந்தேகத்தை நீக்குவதற்காகவே அவன் அவ்வாறு செய்தான். நீ பரிசுத்தமான பொன் போன்ற கற்புடையவள் என்று உன் கணவனுக்குத் தெரியும். சுத்தமான பொன்னை எத்தனை முறை புடமிட்டாலும் எடையும் குறையாது; மாற்றும் குறையாது. பொன்னைத்

தீயிடைப் பெய்தல் அப்பொன்னின் தூய்மை காட்டுதற் காகும். அதுபோல், உன்னை அக்கினிப் பிரவேசம் செய்ய வைத்தது, உன்னுடைய கற்பின் பெருமையை உலகிற்குக் காட்டுவதற்காகவேயாம். இந்தச் சமயம் தப்பினால் மறு சமயம் வாய்ப்பது அரிது. அருந்ததி போன்ற கற்பரசி களுக்கு அணிகலம் போன்ற சீதையே! இனி உனது குணங்களில் குற்றமொன்றுமில்லை கவலையின்றி வாழ்க!'' என்று வாழ்த்தினான்.

மீண்டும் தசரதன் இராமனையணுகி, ''மகனே! உனக்குத் தரத்தக்க வரம் ஒன்றினைக் கேள் தருகிறேன்'' என்றான். அதற்கு இராமன், ''தந்தையே! நான் தங்களை விண்ணுலகத்திற்கு வந்து வணங்கி என் மனக்குறையைத் தீர்த்துக் கொள்ளலாமென்று நினைத்தேன். அவ்வாறு நிகழாமல், தாங்களே இங்கு வந்தது நான் பெற்ற பேறாகக் கருதுகிறேன். இதைவிட எனக்கு வேறு சிறந்த வரம் தேவையா?'' என்றான்.

''ஆயினும், 'உனக்கு அமைந்தது ஒன்று உரை'
என அழகன்,
'தீயள்என்று நீதுறந்த என்தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம் தருக!' எனத் தாழ்ந்தான்,
வாய்திறந்து எழுந்து ஆர்த்தன, உயிரெலாம் வழுத்தி'';

இராமனது உள்ளத்தில் நெடுநாட்களாக இரு குறைகள் குடிகொண்டிருந்தன. தன் பெருந் தெய்வமாகக் கருதிய அன்னை கைகேயியை ''இவள் என் தாரம் அல்லள்; துறந்தேன்'' என்று தந்தை தசரதன் வெறுத்துத் துறந்தது ஒன்று. ''பரதன் தனையும் மகனென்று உன்னேன்'' என்று ஒதுக்கியது மற்றொன்று. தசரதன் தருவதாகச் சொன்ன ஒரு வரத்திலே இரு வரங்களைப் பெற விரும்பிய இராமன், ''தீயள் என்று நீதுறந்த என் தெய்வமும் மகனும், தாயும் தம்பியும் ஆம்வரம் தருக!'' எனத் தாழ்ந்தான். வரம் கொடுத்தே சிக்கிக் கொள்ளும் வழக்கமுடைய தசரதன், ''பரதனை உன் தம்பியாக ஏற்றுக்கொள்கிறேன். உனக்கு

இந்த விரதவேடம் வழங்கிய பாவியாகிய கைகேயி மேல் எழுந்த கோபம் நீங்காததாகும்'' என்று மறுத்து விட்டான்.

ஒரு கல்லினால் இரண்டு மாங்காய்களை வீழ்த்த நினைத்தான் இராமன். ஒரு மாங்காய் வீழ்ந்தது; ஒன்று விழவில்லை. பரதனைத் தம்பியாகப் பெற்றுவிட்டான். கைகேயியைத் தாயாகப் பெற முடியவில்லை. தசரதன் கைகேயியைத் தாரமாக ஏற்றுக் கொண்டால்தானே, இராமன் கைகேயியைத் தாயாகக் கொள்ள முடியும். தசரதன் தன் மனைவியை ஏற்க மறுக்கும் போது, தான் மட்டும் மனைவியோடு மகிழ்ந்து வாழ்வதா? தாய்க்குப்பின் தானே, தாரம். தாய் தன் கணவனோடு வாழ வழியில்லாத போது, சீதை மட்டும் தன்னோடு வாழ்வதை இராமன் விரும்பவில்லை. தாயைப் பற்றிய கவலை உள்மனத்தில் உறுத்திக் கொண்டிருக்கும் போது, சீதையை எப்படி மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்வான் இராமன்? ''அரச பதவி யின் ஆழம் தெரியாமல் அப்பதவியை ஏற்றுக் கொண்ட நான்தான் குற்றவாளி. என் அன்னை கைகேயி என்ன தவறிழைத்தாள்''? என்று தந்தையிடம் கேட்டான். தசரதன் சினம் தணிந்தது. தசரதன் கைகேயியை ஏற்றுக் கொண்ட அளவில் இராமனும் சீதையை ஏற்றுக் கொண்டான்.

ஆம்! இராமனது உள் மனத்தில் இத்தனை காலம் உறைந்து உறுத்திக் கொண்டிருந்த கவலை நீங்கியது. அவனது நெஞ்சில் தைத்து நீண்ட காலமாக நெருடிக் கொண்டிருந்த முள் எடுக்கப்பட்டு விட்டது. அன்னை கைகேயியை மறக்கலா மென்றாலும் இராமனால் முடிய வில்லை. இலங்கையில் சீதையைக் கண்டு வந்த அனுமன், ''உன் பெருந்தேவி என் பெருந்தெய்வம்'' என்று பாராட்டிய போது, தன் பெரும் தெய்வமாக மதித்து வந்த கைகேயி யைப்பறறிய நினைவு இராமனுக்கு வந்திருக்க வேண்டும். அடுத்து, அக்கினித் தேவனும் சீதையை ''எம்மோய்'' என்று குறிப்பிட்டான். அப்போதும், தன் தாய் கைகேயியின் நினைவு இராமனுக்கு வந்திருக்கும். தொடர்ந்து, சிவபெரு

மானும் சீதையைப் ‘‘பொன் வயிற்று அன்னை’’ என்று சுட்டினான். அச்சமயத்திலும் அன்னை கைகேயியின் நினைவு இராமனது இதயத்தில் உதயமாகியிருக்கும். கணவனால், தீயள் என்று துறக்கப்பட்ட கைகேயி, உறவு முறிந்து கிடக்கும் போது, சீதையோடு உறவு கொண்டாட இராமனுக்கு எப்படி மனம் துணியும்?

கணவனையிழந்த அன்னையர் மூவரில், கோசலையும் சுமித்திரையும் வேந்தர் வேந்தனின் மனைவி என்று சொல்லிக் கொள்ளும் உரிமையோடிருந்தனர். கைகேயி மட்டும், மன்னர் மன்னனின் மனைவியென்று சொல்லிக் கொள்ளவும் உரிமையிழந்து மனமுடைந்து மட்கிக் கொண்டிருக்கிறாள். மேலும், தன்னை வளர்த்த தாய் வாழ்விழந்து வாடும் போது, தான் மட்டும் சீதையோடு வாழ்வதா? என்று இராமன் மனம் தயங்கியிருக்க வேண்டும் என்று கருத இடமிருக்கிறது. அதனால் தான், விலக்குதற்குரியவளல்லாத சீதையை ஏற்றுக் கொள்ளத் தாமதித்தான் என்று நினைக்க இடம் தருகிறது.

அன்னை கைகேயியோ மண்ணுலகத்தில் இருக்கிறாள்: தந்தை தசரதனோ விண்ணுலகத்தில் இருக்கிறான். இவர்கள் உறவை எப்படி இணைக்க முடியும்? என்று ஏங்கித் தவிக்கிறான் இராமன். எதிர்பார்த்தோ பார்க்காமலோ எப்படியோ தசரதன் மண்ணுலகத்திற்கு வரவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது; இராமனுக்கு வரமளிக்க வேண்டிய நிலையும் ஏற்பட்டுவிட்டது. பழம் நழுவிப் பாலில் விழுந்து விட்டது. இராமனது மானுடநாடகம் மங்கலமாய் முடிந்தது.

அகலிகைக்கு அருளிய இராமன், சீதைக்கு அருளத் தயங்கியதன் காரணம் புரிந்துவிட்டது. அனுமன், அக்கினி தேவன், சிவபெருமான் ஆகியோர் பரிந்துரைத்த போதெல்லாம் அசையாத இராமன் அன்னைக்கு வாழ்வுகிடைத்ததும் அசைந்து விட்டான். உடனே புட்பக விமானத்தைக் கொண்டுவரச் செய்தான். சீதையோடும் இலக்குவனோடும் அயோத்திக்குப் புறப்பட்டு விட்டான். இனி சீதையோடு அமர்ந்து திருமுடி சூட வேண்டியதுதான்.

# வசிட்டனே
# புனைந்தான் மௌலி

அயோத்தி மாநகரத்துக்கு அரசன் தசரதன்; அவன் அரசர்க்கு அரசன்; வாழையடி வாழையாக வந்த சூரிய குலத்து வள்ளல்; உலகு ஏழினையும் ஒரு குடைக் கீழ் ஆண்டவன்; உயிர் எலாம் உறையும் உடம்பு போன்று, மன்னுயிர் அனைத்தையும் தன்னுயிராக ஓம்பியவன்; தான் ஆண்ட வையகம் முழுவதையும் வறிஞன் ஓம்பும் ஓர்செய் எனக் காத்து இனிது அரசு செய்தவன்.

எந்தக் குறையுமின்றி அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்ட மன்னர் மன்னன் உள்ளத்திலும் ஒரு குறை இருந்தது. தனக்குப் பின்னே இந்த உலகம் காப்பவரில்லாமல் கலங்குமே என்ற குறைதான் அது. தன்னுடைய ஆட்சியில் சிறிதும் வருத்தமின்றி வாழ்ந்த முனிவர்களும், அந்தணர்களும், தனக்குப் பிறகு பெரிதும் வருந்துவார்களே என்ற வருத்தம் தசரதன் உள்ளத்தை வருத்தி வந்தது. மக்களுக்குக் குறை நேர்ந்தால் மன்னனிடம் சொல்லி அழமுடியும்! மன்னர் மன்னனுக்கே குறை நேர்ந்தால் யாரிடம் சொல்லியழுவது? தன்னுடைய வாழ்வுக்கு வழிகாட்டுகின்ற வசிட்ட முனிவனிடமின்றி வேறு யாரிடம் தன் குறையைச் சொல்ல முடியும்? ஆகையால் வசிட்ட முனிவரிடம் தன்னுடைய வருத்தத்தை வெளிப்படுத்தினான் தசரதன்.

குடிமக்களைக் காத்தலே அரசாட்சியின்முதன்மையான நோக்கமாகக் கொண்ட தசரதன், தனக்குப்பின் மக்களைக் காக்க மகன் இல்லாக் குறையைச் சொல்லாமல் சொல்லு கிறான் என்பதை நன்கு உணர்ந்து கொண்டான் வசிட்டன். தேவர்களுக்குத் திருமால் அருளியதைச் சிந்தித்துப் பூதலம் முழுதும் தாங்கும் புதல்வரை அளிக்கும் வேள்வி இயற்று மாறு தூண்டினான். வசிட்டன் தூண்டுதலைக் கேட்டு தசரதன், அவனிடமே வேள்விக்குவேண்டியன வினவி யறிந்து, கலைக்கோட்டு முனிவனையழைத்து வேள்வி புரிந்தான். வேள்வியின் பயனாகப் புதல்வர்கள் நால்வருக்குத், தந்தையானான் தசரத வேந்தன்.

தசரத மைந்தர் நால்வருக்கும் இராமன் என்றும் பரதன் என்றும், இலக்குவன் என்றும், சத்துருக்கன் என்றும் பெயர் சூட்டியவர் வசிட்டர்தான்.

நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்த நால்வருக்கும், உபநயன விதிமுடித்து, மறை ஓதுவித்து வளர்த்தவரும் வசிட்டர்தான். வசிட்ட ருடைய வளர்ப்பில் வளர்ந்ததால்தான் நான்கு இளைஞர் களுக்கும் நற்பண்புகள் படிந்தன. நால்வரும் பெற்ற பெரும் புகழுக்கெல்லாம் காரணம் பெற்ற தந்தை தசரதனல்லன்; வளர்த்த தந்தை வசிட்டனேயாவான்.

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னே செய்தித்தாள்களில், 'ஓநாய்ச் சிறுவன்' பற்றிய உண்மைச் செய்திகள் வெளி வந்தன. வடநாட்டில் வேட்டையாடச் சென்ற காட்டிலாக்கா அதிகாரிகள் ஓநாய்க் கூட்டத்தின் நடுவே ஆறு வயதுடைய சிறுவன், இரண்டு கால்களோடு இரண்டு கைகளையும் தரையில் ஊன்றி, நான்குகால் பாய்ச்சலில் தாவித்தாவி, ஓநாய்களோடு ஓநாயாய் ஓடு வதைக் கண்டார்கள். இந்த அதிசயக் காட்சியைக் கண்ட அதிகாரிகள் பக்குவமாகப் பழுதில்லாமல் சிறுவனை வளைத்துப் பிடித்துவிட்டார்கள். சிறுவனோ பிடித்தவர்

களைக் கடிப்பதும் பிடியினின்று தப்பி ஓட முயல்வதுமாக மிருகத் தன்மையோடு விளங்கினான். அவனைத் தனித்த கூண்டிற்குள் அடைத்து வேகவைத்த மனிதருணவையும், பச்சை மாமிச மிருக உணவையும் உணவாக வைத்த போதும், அவன் உண்ணவேயில்லை. தன்னுடைய இன மாகிய ஓநாய்க் கூட்டத்தைப் பிரிந்த ஏக்கத்தால், சில நாட்களில் இறந்துவிட்டான் ஓநாய்ச் சிறுவன்.

இந்தச் செய்தியறிந்த காவல் துறையினர் தீவிரமாகப் புலன் விசாரித்தனர். ஆறு ஆண்டுகளுக்கு முன், காட் டோரமாக உள்ள வயலில் வேலை செய்து கொண்டிருந்த ஒரு தாய், தன்னுடைய பச்சிளங்குழந்தையை மரத்து நிழலில் உறங்கச் செய்திருந்தாள் என்றும் ஒரு ஓநாய் அந்தக் குழந்தையைக் கௌவித் தூக்கிக் கொண்டு காட்டிற்குள் ஓடி மறைந்து விடடதென்றும் செய்தி தெரிந்தது. பெற்றவர்கள் குழந்தையை ஓநாய் கொன்று தின்று விட்டிருக்கும் என்று வேதனையோடு வீடு திரும்பி விட்டனர். ஓநாயோ, எப்படியோ குழந்தைக்குப் பாலூட்டி வளர்த்து விட்டது. பிறப்பால் மனித இனமாக இருந்தும், வளர்ப்பால், குழந்தை மிருகப் பண்பைக் கொண்டு வளர்ந்துவிட்டது.

பிறப்பால் அரசன் மக்களாக இருந்தபோதும், இராமன் முதலானோர், வசிட்டனின் வளர்ப்பால், உயர்ந்த பண்பு களின் உறைவிடம் ஆயினர்.

இந்த உண்மையைப் பால காண்டத்துக் குலமுறை கிளத்துப் படலத்தில் விசுவாமித்திரன் கூற்றாக வரும் பாடலைக் கொண்டு அறியலாம்.

"திறையோடும் அரசு இறைஞ்சும் செறிகழற்கால்
தசரதன் ஆம்
பொறையோடும் தொடர்மனத்தான் புதல்வர்எனும்
பெயரேகாண்.
உறைஒடும் நெடுவேலாய்! உபநயன விதிமுடித்து
மறை ஓதுவித்து இவரை வளர்த்தானும் வசிட்டன்
காண்"

இது, விசுவாமித்திரன் கூற்று. இராம இலக்குவர்களைப் பார்த்து ஜனகமன்னன் ''யார் இவர்கள்'' என்று கோசிக முனிவரிடம் கேட்க, முனிவர் பதில் கூறுவதாக அமைந்தது இப்பாடல்.

''பல மனைவியரை மணந்தவன் தசரதன்; அவன் மகனாகிய இராமனும் பலரை மணந்து சீதையைக் கண் கலங்க விடமாட்டான்; ஏகபத்தினி விரதனாக விளங்கு வான். இந்த உயரிய பண்பு வளர்த்த வசிட்டனிடமிருந்து வந்தது. ஆகையால் சந்தேகமின்றிச் சீதையை மண முடித்துக் கொடுக்கலாம்'', என்ற பொருள் தொனிக்க, ''வளர்த்தானும் வசிட்டன் காண்'' என்றான் விசுவாமித் திரன். விசுவாமித்திரன் கூற்றால், இராமனைப் பெற்ற தசரதன் பெறாத ஏற்றத்தை, வளர்த்த வசிட்டன் பெறுகிறான்.

விசுவாமித்திரர் தசரதனிடம் வந்து தான் செய்யும் வேள்வி காத்தலுக்குக் கரிய செம்மலாகிய இராமனைத் தருமாறு உயிர் இரக்கும் கொடுங்கூற்றின் உளைய வேண்டி னார். உயிரினும் இனிய இராமனை அனுப்ப மனமற்ற தசரதன், தானே வேள்வி காக்க வருவதாகச் சொன்னான். உடனே விசுவாமித்திர முனிவர் முனிந்து எழுந்தார். கோசிக முனிவரின் சினத்தைக் கண்ட வசிட்ட முனிவர், தசரதனை நோக்கி இராமனை முனிவருடன் அனுப்பும்படி கூறினார்.

''பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகும் ஆறுபோல்
ஐய! நின் மகற்கு அளவில் விஞ்சை வந்து
எய்து காலம் இன்று எதிர்ந்தது'' என்னவே,

வசிட்டர் சொன்னார். குருவின் வாசகம் கொண்டு கொற்ற வன், திருவின் கேள்வனைக் கோசிகனோடு அனுப்பினான். இராம பாணம் தாடகையின் தடமார்பிடைப் பாய்ந்ததால், பிந்தி நிகழவிருக்கும் இராவண வதத்திற்கு முந்தி உற்பாத

மாக அவனது கொடி அற்று வீழ்வது போன்று தாடகை வீழ்ந்தாள். இராமனைக் கோசிகனுடன் அனுப்பும்படி தசரதனிடம் வசிட்டன் சொல்லாமல் விட்டிருந்தால், தாடகை வதம் நடப்பதற்கு வாய்ப்பில்லாமல் போயிருக்கும். இந்த நிகழ்ச்சியை நோக்க, தாடகை வீழ்ச்சிக்கு வசிட்டனே காரணமாகிறான்.

மிதிலையில் சீதைக்கும், இராமனுக்கும் திருமணம் நடக்கிறது. அழகுக்கு அழகு செய்வது போன்று, அழகிய சீதையை அலங்கரித்து மணமண்டபத்துக்கு அழைத்து வருகின்றனர். இராமனை வளர்த்த வசிட்டன் சீதையின் அழகைக் கண்டதும் பெரிதும் மகிழ்ந்தான்.

''எங்கள்செய் தவத்தினில் இராமன் என வந்தோன்
சங்கினொடு சக்கரம் உடைத்தனி முதற்பேர்
அம்கண் அரசு; ஆதலின் அவ் அல்லிமலர்புல்லும்
மங்கை இவள் ஆம் என வசிட்டன் மகிழ்வுற்றான்.

இராமனுக்கும் சீதைக்கும் உள்ள மணப்பொருத்தத்தை எண்ணியெண்ணி மகிழ்ந்த வசிட்டன் அவர்களுடைய திருமணச் சடங்குகளையும் தானே செய்தான். இராமனுக்கும், சீதைக்கும் திருமணம் மங்கலமாக முடிந்தது.

பெருமகன் இராமனுக்கும், திருமகள் சீதைக்கும் திருமணம் முடித்து மகிழ்ந்த தசரதன் அவனி மாதையும் இராமனுக்கு மணம் முடிக்க விரும்பினான். மந்திராலோசனை மண்டபத்தில் அமைச்சர்களோடு கலந்து ஆலோசித்தான் அயோத்திவேந்தன்.

''பெருமகன் என்வயின் பிறக்க, சீதை ஆம்
திருமகள் மணவினை தெரியக் கண்டயான்
அருமகன் நிறைகுணத்து அவனி மாது எனும்
ஒருமகள் மணமும்கண்டு உவப்ப உன்னினேன்''

"ஆதலால் இராமனுக்கு அரசை நல்கி, இப்
பேதைமைத் தாய்வரும் பிறப்பை நீக்குறு
மாதவம் தொடங்குவான் வனத்தை நண்ணுவேன்;
யாது நும் கருத்து? என இனைய கூறினான்.

தசரதன்தன் உளக்கருத்தைக் கேட்ட அமைச்சர்கள் இராமன் முடிசூடி நாடாளப் போகிறான் என்ற இன்பமும் தசரதன் அரசு துறந்து காடாளப் போகிறான் என்ற துன்பமும், அடைந்து, இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஒரு பசு போல் இருந்தார்கள். தம் உயிர்க்கு உறுதி எண்ணாமல், தலைமகன் வெகுண்ட போதும், வெம்மையைத்தாங்கி, நீதி விடாது நின்று உரைக்கும் வீரர்களான அமைச்சர்கள், தசரதனுக்குத் தவமல்லாமல் உறுதியில்லை என்று கருதியும், மன்னர்மன்னனுக்குப் பின் இந்நாட்டை அரசாள வேறு மன்னர் இல்லை என்பதை நினைத்தும் விதியின் வலிமையாலும், தசரதன் கருத்துக்கு இசைந்தார்கள்.

அரசர்க்கரசன் கருத்தையும் அமைச்சர்கள் குறிப்பையும் உள்ளத்தில் வாங்கிக் கொண்ட வசிட்டன் நடுநிலைமையோடு சிந்தித்துப் பின்வருமாறு பேசுகிறான்:—

"வேந்தே! நீ தவம் செய்யக் கருதியது தக்கதே. நீ இராமனைப் பெற்றதால், உன் முன்னோர்களைவிடச் சிறப்புப் பெற்றாய். மும்மூர்த்திகளுக்கு முதல்மூர்த்தியாகிய அறத்தின் மூர்த்தியல்லவா உனக்கு மகனாகப் பிறந்திருக்கிறான். பூ மடந்தையும், புவி மடந்தையும் தங்கள் கணவன் என்று கருதுகின்ற இராமன் உன் உயிர்க்கு மட்டுமல்ல, மன்னுயிர்க்கெல்லாம் நல்லவன்.

"மண்ணினும் நல்லள்; மலர்மகள்; கலைமகள்;
கலையூர்;
பெண்ணினும் நல்லள்; பெரும்புகழ்ச் சனகியோ
நல்லள்;
கண்ணினும் நல்லன்; கற்றவர் கற்றிலாதவரும்;
உண்ணும் நீரினும்; உயிரினும் அவனையே உவப்பார்"

மூன்று உலகத்திலும் இராமனை விடச் சிறந்தவர் இல்லை. ஆதலால் அவனை அரசு புரியச் செய்து, நீ துறவு புரிதலே சிறந்தது'' என்று புகன்றான் வசிட்டன்.

வசிட்டனுடைய வாசகத்தைக் கேட்ட தசரதன் பெற்ற மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை.

"மற்று, அவன் சொன்ன வாசகம் கேட்டலும், மகனைப்
பெற்ற அன்றினும், பிஞ்ஞகன் பிடித்தஅப் பெருவில்
இற்ற அன்றினும் எறி மழு வாளவன் இழுக்கம்
உற்ற அன்றினும், பெரியது ஓர் உவகையன் ஆனான்''.

எல்லையற்ற மகிழ்ச்சியடைந்த தசரதன் வசிட்டனை வணங்கி, "உன்னுடைய அருளினால் நான் நாட்டைக் காத்தது போல இராமனும் காக்க அருள் சுரக்க வேண்டும்'' என்று வேண்டினான். வசிட்டன் வாழ்த்தில் அளவற்ற மதிப்பு வைத்திருந்தான் அயோத்தி வேந்தன்.

வசிட்டர் வாழ்த்தினைப் பெற்று அயோத்தி வேந்தன் பெற்ற பெருமகிழ்ச்சியைப் போல, மறைந்த பேரறிஞர் அண்ணா அவர்கள் பெருமகிழ்ச்சி பெற்ற நிகழ்ச்சியொன்று நினைவுக்கு வருகிறது. தமிழகத்தின் முதலமைச்சராகப் பதவியேற்ற அண்ணா அவர்கள் மூதறிஞர் இராஜாஜி, கருமவீரர் காமராசர், பெரியவர் பக்தவத்சலம் ஆகிய சான்றோர் பெருமக்களிடம் வாழ்த்தினையும், ஆலோசனை களையும் பெறுவதற்காகச் சென்றார்கள். இராஜாஜி அவர் களிடம் சென்று அண்ணா அவர்கள் கைகுவித்து வணங்கியதும், இராஜாஜி அவர்கள் 'அஞ்சல்' எனும்படிக் கையுயர்த்தி வாழ்த்தினார்கள். இந்தக் காட்சியமைந்தபுகைப் படங்கள் அன்றைய செய்தித்தாள்களில் வெளியாயின. படத்திற்கு விளக்கமாக "வசிட்டரிடமே வாழ்த்துப் பெற்றேன்'' என்ற அண்ணாவின் பொன்மொழியும் பொலிவூட்டியது.

பேரறிஞர் அண்ணா அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகம் என்ற ஒரு சமூக சீர்திருத்தக் கட்சியைத் தோற்று வித்த அந்நாளில் பெற்ற மகிழ்ச்சியைவிட, மாநில மாநாட்டைத் திருச்சியில் நடத்தி அதனை அரசியல் கட்சியாக மாற்றிய அன்று பெற்ற மகிழ்ச்சியைவிட, 1967 இல் அது ஆளுங்கட்சியாக உயர்ந்த அன்று பெற்ற மகிழ்ச்சியைவிட, இன்றையவசிட்டர் இராஜாஜி அவர்களின் வாழ்த்தினைப் பெற்றதால் பெரிதும் மகிழ்ந்தார்கள். தசரதனும் இராமனைப் பெற்ற அன்று பெற்ற மகிழ்ச்சியை விட, இராமன் மிதிலையில் கார்முகம் என்ற சிவதனுசை இரண்டு துண்டாக முறித்த அன்று பெற்ற மகிழ்ச்சியைவிட, இராமன் பரசுராமனைத் தோல்வி அடையச் செய்த அன்று பெற்ற மகிழ்ச்சியைவிட, அன்றைய வசிட்டர் வாசகத்தைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்தான்.

வசிட்டர் வாசகம் கேட்டுப் பெருமகிழ்ச்சியுற்ற தசரதன் கணிதர்களைக் கொண்டு நாள்கணித்து, மறுநாளே முடி சூட்டுவது என்று முடிவெடுத்தான். பலநாட்டு மன்னர் களுக்கும் ஓலை போக்கினான். வசிட்ட முனிவரிடம் சித்திர நளிர்முடி சூட்டுதற்கு சென்று வேண்டுவ அமைக்கும்படி செப்பினான். மேலும் இராமனுக்கு அரசியல் அறம் கூறும் படியும் வேண்டினான்.

வசிட்டனும் இராமனுக்கு உறுதிப்பொருள் பலவற்றைக் கூறினான்.

> ''வையம் தன்உயிர் ஆகஅம்மன் உயிர்
> உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு,
> ஐயம் இன்றி அறம்கடவாது, அருள்
> மெய்யில் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ?''

இவ்வாறாக அரசர்க்குரிய அறங்கள் பலவற்றைக் கூறி, வேதங்கள் ஓதியபடி, இராமனைப் புண்ணிய தீர்த்தங்களால் மங்கல நீராட்டி, முடிசூட்டுக்கு முதல்நாள் செய்யவேண்டிய

சடங்குகளையெல்லாம் முறைப்படி செய்தான் வசிட்டன். இராமன் பூமகள் கொழுநனாய் மௌலி புனையும் சடங்கு கள் ஒன்றைத் தவிர, மற்றைய சடங்குகள் அனைத்தும் முடிந்து விட்டன.

அணியும், அழகும் பெற்று விளங்கிய, அயோத்தி மாநகரத்தின் மங்கலக் கோலத்தைக் கூனியின் சூழ்ச்சி ஓர் இரவில் அமங்கலமாக்கி விட்டது. கைகேயியின் தூய சிந்தையும் திரிந்தது. நாடாள வேண்டிய இராமன் காடாள வேண்டியவனாகிவிட்டான்.

பொழுது புலர்ந்ததும், வசிட்டன் வீரச் சிங்காதனம் வைத்துச் செய்வன பிறவும் செய்தான். கணிதநூல் உணர்ந்த மாந்தர் காலம் வந்து அடுத்தது என்றனர். தசரதனை அழைத்து வரும்படி சுமந்திரனை அனுப்பினான் வசிட்டன். தன்னுணர்வு இழந்த நிலையில் தரையில் கிடக்கும் தசரதனை வசிட்டனும் வந்து பார்த்தான்; "இறந்தான் அல்லன் அரசன்; இறவாது ஒழிவான் அல்லன்'' என்று உணர்ந்து கொண்டான். கைகேயியின் தீய சிந்தையை அறிவுரை கூறி தூய சிந்தையாக மாற்றும்படி வசிட்டனை வேண்டினான் வேந்தர்வேந்தன். கைகேயிக்கு வசிட்டன் கூறிய அறிவுரை செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று. தன் கழுத்தின் நாணினை அறுத்துத் தன் மகனுக்குக் காப்பின் நாணாக்கிக் கட்ட முயன்ற பழிக்கு நாணாத பாவியாகிய கைகேயியைப் பற்றி வசிட்டனிடம் கூறுகிறான் தசரதன்.

''இன்னே பலவும் பகர்வான்; இரங்காதாளை நோக்கிச்
சொன்னேன் இன்றே இவள்என் தாரம் அல்லள்
துறந்தேன்
மன்னே ஆவான் வரும் அப் பரதன் தனையும்
மகனென்று
உன்னேன் முனிவா! அவனும் ஆகான் உரிமைக்கு''
என்றான்.

பாவம்! ஏதும் அறியாத பரதன் —நீதிக்கு நிலைக்களனான பரதன்—பண்பின் பிறப்பிடமான பரதன்—பாழ்த்தபாவி கைகேயியிக்கு மகனாகப் பிறந்த பாவத்தினாலே பெற்ற தந்தையே ''இவன் எனக்குப் பிள்ளையில்லை'' என்று சொல்லும் நிலைக்குத் தள்ளப்பட்டான்.

வசிட்டமுனிவன், அரசர்கள் அமர்ந்திருந்த அவைக்குச் சென்று சோகச் செய்தியைச் சொல்லுகிறான்:—

''கொண்டாள் வரம் இரண்டு கேகயர்கோன் கொம்பு; அவட்கு
தண்டாத செங்கோல் தயரதனும் தான் அளித்தான்,
ஒண்தார் முகிலை வனம்போக என்று ஒருப்படுத்தான்;
எண்தானும் வேறில்லை; ஈது அடுத்தவாறு என்றான்''

''வேந்தன் பணியினால் கைகேசி மெய்ப்புதல்வன்
பாந்தன் மிசைகிடந்த பார்அளிப்பான் ஆயினான்,
ஏந்து தடந்தோள் இராமன் திருமடந்தை
காந்தள் ஒருமுறைபோய்க் காடுஉறைவான் ஆயினான்''

வசிட்டன் சொல்லிலிருந்து, பரதன் பாராளப் போகிறான் என்றும், இராமன் காடாளப் போகிறான் என்றும் உறுதியாகி விட்டது. பரதன் பாராளுவதைப் பற்றிக் கவலையில்லை வசிட்டனுக்கு. இராமனைக் காடு செல்லாமல் தடுத்து நிறுத்தித் தசரதன் உயிரைக் காக்கலாமே என்ற எண்ணமே மேலிட்டது. ஆகையால் இராமனை நோக்கி, ''ஐயனே! நீ உன் தந்தையைப் பிரிந்து சென்றால், அவர் உயிர் அவரை விட்டுப் பிரிந்துவிடும்!'' என்றான் வசிட்டன். இராமன் வசிட்டனை நோக்கி, ''தந்தையின் பணியைத் தலைமேல் ஏந்துதல் என் கடமை; அவருடைய இடரை நீக்குதல் தங்கள் கடமை'' என்று சொல்லிப் புறப்பட்டு விட்டான் இராகவன். ''விதியினை யார் வெல்ல வல்லார்?'' என்று வேதனைப்பட்டான் வசிட்டன். இராமன் காடு

போயினான் என்று கேள்விப்பட்டதுமே அரசனுடைய ஆவி போயிற்று. இதனை அறிந்த வேத முனிவன் விதி செய்த வினையை நோக்கி விம்மினான்.

இறந்து போன தசரதன் உடல் தைலத்தில் இட்டுப் பரதன் வரும்வரையில் பாதுகாத்து வைத்திருந்து, பரதன் வந்ததும் யானை மேல் கொண்டு சென்று, சரயு நதிக் கரையில் ஈமச் சடங்கு செய்யப் பெறுகிறது. தந்தைக்கு இறுதிக் கடன் செய்ய எழுந்த பரதனை வசிட்டன் தடுத்துக் கூறுகிறான்.

"அன்னை தீமையால் அரசன் நின்னையும்
துன்னு துன்பத்தால் துறந்து போயினான்''.

பரதனை விலக்கிய வசிட்டன், சத்துருக்கனைக் கொண்டு ஈமக் கடன் செய்விக்கிறான்.

தசரதன் மறைந்த பிறகு அயோத்திக்கு அரசனில்லாத நிலை ஏற்பட்டு விடுகிறது. பத்துநாட்கள் இறுதிச் சடங்குகள் முடிந்ததும், வசிட்டனை முதன்மையாகக் கொண்டு மந்திரக் கிழவர்கள் பரதனிடம் செல்கின்றனர். சென்றவர்களில் சுமந்திரன் வாக்கினால் அன்றி நோக்கினால் குறிப்புணர்த்தியதை வாங்கிக் கொண்ட வசிட்டன், அயோத்தி அரசை ஏற்குமாறு பரதனை வேண்டினான். வசிட்டன் வேஃண்டுதலைப் பரதன் மறுத்து, இராமனை அழைத்துவந்து முடிசூட்ட பரிவாரங்களோடு புறப்பட்டு விட்டான். பரதனோடு வசிட்டனும் சென்றான்.

ஆரண்யத்தில் பரதன் இராமனைக் கண்டு அவன் மலரடி தொழுதான். இராமனும் பரதனை எடுத்து மார்புறத் தழுவிக் கண்ணீரால் குளிப்பாட்டித் "தந்தை நலமா?'' என்றான். "உன்னுடைய பிரிவினால் தந்தை உம்பரான்''; என்றான் பரதன். "தந்தை விண்ணிடையடைந்தனன்,'' என்ற சொல் கேட்ட இராமன் உணர்விழந்து மண்ணில்

வீழ்ந்து, அழுது புலம்பினான். அழுது புலம்பிய இராமனை வசிட்டன் தேற்றினான்.

“துறத்தலும், நல் அறத் துறையும் அல்லது
புறத்து ஒரு துணை இலை; பொருந்தும்
மன்னுயிர்க்கு;
இறத்தலும் பிறத்தலும் இயற்கை என்பதை
மறத்தியோ, மறைகளின் வரம்பு கண்ட நீ.”

என்று ஆறுதல் கூறித் தேற்றித் தந்தைக்கு நீர்க்கடன் செய்வித்தான் வசிட்டன்.

மறுநாள் காலையில் பரதன் இராமனைப் பணிந்து அயோத்தி அரசையேற்குமாறு வேண்டினான். இராமனோ பரதனையே முடிசூட்டிக் கொள்ளுமாறு ஆணையிட்டான். இருவருக்கும் நிகழ்ந்த வாக்குவாதத்தை இடைமறித்து வசிட்டன் “ஐம்பெரும் குரவர்களுக்குள்ளே ஆசிரியனே சிறந்தவனாவான் உனக்குக் கற்பித்த ஆசிரியனாகிய நான் ஆணையிடுகிறேன். நீ முடிசூடி இந்நாட்டைக் காப்பாயாக!” என்றான்.

தாய் எட்டடி பாய்ந்தால் குட்டி பதினாறடி பாயும் என் பார்கள். ஆறிய சிந்தனை அறிஞனான வசிட்டன் ஆணை யினை, ஒரே வினா எழுப்பி மறுத்து விட்டான் இராமன். “தாயும் தந்தையும் பணித்த பணியினை முன்னரே செய்வ தாக ஏற்றுக் கொண்ட பிறகு பின்னுறப் பணித்த தங்கள் ஆணையினை ஏற்றுக் கொள்ள முடியுமா?” என்ற இராமன் வினாவுக்கு விடை ஏது சொல்வான் வசிட்டன். இராம னுடைய திருவடிகளை முடிமேல் சூடித் திரும்பிய பரத னோடு வசிட்டனும் திரும்பிவிட்டான். இராமன் சீதை யோடும், இலக்குவனோடும் தென்திசை சென்றுவிட்டான்.

பதினான்கு ஆண்டுகள் ஓடி மறைந்தன. இலங்கைப் போர் முடிந்தது. சிறையிருந்த சீதை மீட்கப் பெற்றாள். இராமாவதாரநோக்கம்நிறைவுற்றது. இராமன் அயோத்திக்கு

மீண்டான். பாதுகையின் கீழிருந்து பாராண்ட பரதன் இராமனுக்கு பட்டாபிஷேகம் செய்யமுனைந்தான் வசிட்டனையும், மற்றைய மறையவர்களையும்சுமந்திரனை அனுப்பி அழைத்தான் பரதன். வந்து சேர்ந்த வசிட்டன், இராமனுக்கு முடிசூட்ட, ''நாளையே நல்ல நாள்'' என்றான் மறுநாள் நடைபெறப் போகும் முடிசூட்டலுக்கு அன்று நடத்த வேண்டிய சடங்குகளைச் செய்து முடிக்கும்படி மற்றைய மறையவர்களுக்குப் பணித்தான் வசிட்டன், மறையவர்கள் நாற்கடல் நீரும், நன்னதி நீரும் கொண்டு வந்து இராமனுக்கு மங்கலாபிஷேகம் செய்வித்தனர். மகுடாபிஷேக மண்டபத்தில், பொன்னாலமைந்த பீடத்தில். பளிங்கு மாடத்தில், மங்கல கீதம் பாட, மறையொலி முழங்க இராமனுக்கு முடிசூட்டு விழா நடைபெற்றது

''அரியணை அனுமன் தாங்க,
அங்கதன் உடைவாள் ஏந்த
பரதன்வெண் குடைக்கவிக்க,
இருவரும் கவரிவீச
விரிகடல் உலகம் ஏத்தும்,
வெண்ணெயூர்ச் சடையன் வண்மை
மரபுளோன் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.

பதினான்காண்டுகளுக்கு முன்னால் நடைபெற வேண்டிய பட்டாபிஷேகம் இப்போதுதான் நடந்து முடிந்தது. இன்றைக்கும் அன்றைக்கும் எத்தனையோ மாற்றங்கள்! அன்று நடந்திருந்தால் தசரதன் இருந்திருப் பான்; இன்று அவன் இல்லை; தசரதன் நிலையில் இன்று அனுமன் இருக்கிறான். அனுமனைத் தன் தந்தையாகவே ஏற்றுக் கொண்டவன் இன்றைய இராமன்.

இலங்கைப் போரில் இந்திரசித்தனுடைய பிரம்மாத்திரத்தி னால் இராமனும், இலக்குவனும் சேனைகளும் உயிரிழந்த

நிலையில் கிடந்தார்கள். அனுமன் மருத்து மலையைக் கொண்டுவந்து மூலிகையின் சக்தியால்எல்லோரையும் உயிர் பெற்று எழச் செய்தான். நன்றிக்கு வித்தான இராமன் அனுமனைத் தழுவிக் கொண்டு பின்வருமாறு பேசுகிறான்:-

"நாங்கள் தசரத குமாரர்களாகப் பிறந்தோம். பிரம்மாத்திரத்தால் இறந்துவிட்ட நாங்கள், அனுமனே! இன்று உன்னால் மீண்டும் பிறந்து விட்டோம். இன்றுமுதல் உன் பிள்ளைகள் நாங்கள். நீயோ தருமதேவதையின் பிள்ளை. தருமத்தின் தனிமை தீர்க்கவந்த உனக்குப் பிள்ளைகளாய் விளங்குவதிலே நாங்கள் பெருமையடை கிறோம்"

"முன்னாளில் தோன்றினார் முறையின் நீங்கலாது
என்னில் தோன்றிய துயரின் ஈறுசேர்
மன்னில் தோன்றினேம் முன்னம்; மாண்டுளேம்;
நின்னில் தோன்றினேம் நெறியில் தோன்றினாய்!"

நன்றியுணர்வுடைய இராமன் அனுமனைத் தந்தையெனப் போற்றினான். அன்றைய தந்தையாகிய தசரதன் அரியணை அளிக்க முன் வந்தான். இன்றைய தந்தையாகிய அனுமன் அரியனையைத் தாங்குகிறான். தந்தையில்லாக் குறை நிறைவெய்துகிறது.

பதினான்கு ஆண்டுகளுக்கு முன் பட்டாபிஷேகம் நடந்திருந்தால் இன்றை நிலைபோன்று அங்கதன் உடை வாள் ஏந்தி நின்றிருக்க முடியாது. இராமனது வாளியால் வாலி இறக்கும்போதுதான் இராமனிடம் அங்கதனைக் கையடையாகத் தந்தான். இராமனும் அங்கதனிடம் பொன்னுடை வாளை நீட்டி, "நீ இது பொறுத்தி" என்று அளிக்க அங்கதன் ஏற்றுக் கொண்டான். அங்கதன் உடைவாள் ஏந்தி நிற்கும் சேவகச் சிறப்பை இன்றைய பட்டாபிஷேகத் தில் காண முடிகிறது.

பதினான்கு ஆண்டுகளுக்கு முன் பட்டாபிஷேகம் நடந்திருந்தால் பரதனையும் சத்துருக்கனையும் அந்த விழாவில் கண்டிருக்க முடியாது. காரணம் அப்போது அவர்கள் இருவரும் கேகய நாட்டில் இருந்தார்கள். இன்று பரதன் வெண்குடை கவித்து நிற்கிறான். சத்துருக்கன் கவரி வீசி நிற்கிறான். அன்று பரதனும் சத்துருக்கனும் இல்லாத குறையோடு நடந்திருக்க வேண்டிய முடிசூட்டுவிழா இன்று நிறைவோடு நடக்கிறது. மேலும் முடிசூட்டு விழா அன்று இலக்குவனுக்குக் கவரி வீசும் வாய்ப்புக் கிடைத்திருந்தாலும் தான்மட்டும் நின்றுதான் கவரி வீசியிருப்பான். இன்றோ சத்துருக்கனோடு இணைந்து வீசும் பேறு கிடைத்திருக்கிறது. இளையவர்கள் இருவரும் இணைந்து நின்று கவரி வீசும் காட்சி பொருத்தமான காட்சியாகும்.

அன்று நிகழவிருந்த விழாவிற்கும் இன்று நிகழ்ந்த விழாவிற்கும் பல வேறுபாடுகள் இருப்பினும், ஒரு செயலில் மட்டும் வேறுபாடு கண்டிருக்க முடியாது. அதுதான் முடிபுனையும் செயல், அன்று மௌலி புனைய இருந்தவனும் வசிட்டன்தான்! இன்று மௌலி புனைந்தவனும் வசிட்டன் தான்! ஆகையால் தான் கம்பர் "வசிட்டனே புனைந்தான் மௌலி" என்று முடித்தார்.

"வசிட்டனே" என்ற சொல்லில் வந்த ஏகாரம் இசையை நிறைப்பதற்கு மட்டும் வந்த ஏகாரமன்று. பிரிநிலையாகவும், தேற்றமாகவும் இணைந்து வந்த ஏகாரமாக விளங்குகிறது. மேலும் அந்த ஏகாரம் பல பொருள்களைத் தன்னிடத்தே அடக்கிக் கொண்டிருக்கிறது

எந்த வசிட்டன் மகப்பேறு யாகம் செய்யும்படி தசரதனைத் தூண்டினானோ, எந்த வசிட்டன் இராமனுக்குப் பெயர் சூட்டினானோ, எந்த வசிட்டன் இராமனுக்குக் கல்வி கற்பித்தானோ, எந்த வசிட்டன் இராமனை வளர்த்தானோ, எந்த வசிட்டன் தாடகையை

வதைக்க இராமனை அனுப்பும்படி சொன்னானோ, எந்த வசிட்டன் சீதா ராம திருமணம் செய்து வைத்தானோ, எந்த வசிட்டன் முன்பு முடிசூட்ட சடங்குகள் செய்தானோ, எந்த வசிட்டன் இராமனைக் காடு செல்லாமல் தடுக்க முயன்றானோ, எந்த வசிட்டன் காடு சென்ற இராமனை பரதனுடன் நாடழைத்துச் செல்ல வந்தானோ—அந்த வசிட்டனே புனைந்தான் மௌலி.

அனுமன், அங்கதன், பரதன், இலக்குவன், சத்துருக்கன் போலல்லாமல் முடிபுனையும், தகுதி படைத்த வசிட்டனே புனைந்தான் மௌலி என்று பிரிநிலையாகவும், அன்று முடிசூட்டும் வாய்ப்பை இழந்து கவலையுற்றுக் காத்திருந்து, பதினான்கு ஆண்டுகளுக்குப் பின் இழந்த வாய்ப்பை மீண்டும் பெற்ற அந்த "வசிட்டனே புனைந்தான் மௌலி" என்று தேற்றமாகவும் "வசிட்டனே" என்பதிலுள்ள ஏகாரம் அமைகிறது.

வசிட்டன் முடி சூட்டினான் என்பது பாடலில் தெரிகிறது; "இராமனுக்குச் சூட்டினான்" என்று பாடலில் காணோம். கம்பன் பாடலில் இராமனைக் காண முடியவில்லை. இராமன் தோன்றாமல் தோன்றுகிறான்.

வசிட்டன், இராமன் என்னும் ஒருவன் தலையிலே முடிசூட்டவில்லை. கோசல நாட்டு மக்கள் அனைவரது தலைகளிலும் முடிசூட்டினான். கோசலத்து மக்கள் உண்ணும் நீரினும், உயிரினும் இராமனது கருணையையே காணுகின்றனர் என்பதைப் புரிந்து கொண்டவன் வசிட்டன். உயிரெல்லாம் உறைவதோர் உடம்பாகி ஆண்ட, தசரத மன்னனுக்கு மகனாகிய இராமனும் முடிமன்னனாக விளங்காமல், குடிமன்னனாக விளங்குவான்; இராமனுடைய ஆட்சியில் மக்கள் எல்லாரும் அந்நாட்டு மன்னர்களாக விளங்குவார்கள் என்பதை விளக்குவதற்காகவே இராமனைத் தோன்றாமல் செய்து விட்டான் கம்பன்.

மக்களை மக்களாக மதிக்கும் இராமராஜ்ய ஆட்சிக்கு வசிட்டனே புனைந்தான் மௌலி

தசரத வள்ளல் காண விரும்பிய இராம ராஜ்யம், பதினான்கு ஆண்டுகள் நந்தியம்பதியில், நாதன் பாதுகையின் கீழ் பரதன் வாயிலாக நடந்து, பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகு வசிட்டன் கைகளினாலேயே முடிசூட்டிக் கொண்டது. கோசல நாட்டு வள்ளலாகிய இராமனுக்கு வசிட்டர் சூட்டும் மணிமுடியைக் கொடுக்க, தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளல் வாழும் நாளில் இராமர் பட்டாபிஷேகம் நடக்கவில்லையே என்ற ஏக்கம் பிறந்து விட்டது கம்பனுக்கு. வள்ளன்மைப் பண்பு பரம்பரைப் பண்பல்லவா! ஆகையால்தான் சடையப்பர் முன்னோருக்கும் கொடை முடிசூட்டி விட்டான் கம்பன்.

"விரிகடல் உலகம் ஏத்தும்
வெண்ணெயூர்ச் சடையன் வண்மை
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி."

# கம்பனில் ''ஞாயிறு''

இயற்கை எழிலை, அழகின் சிரிப்பாக்கிக் காட்டப் புகுந்த பாவேந்தர் பாரதிதாசனார், 'காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன்' என்று தொடங்குகிறார் புரட்சிக் கவிஞர் தனக்குக் கவிதை தந்த அந்த அழகென்பாள், ''மாலையிலே மேற்றிசையில் இலகுகின்ற மாணிக்கச்சுடரில் அவள் இருந்தாள்.'' என்றும் கூறுகிறார்.

கம்ப நாடனும், தன் காவியத்திலே ஞாயிறு போற்றத் தவறவில்லை. கம்பன் காவியத்துள் கதிரவன் ஒளி புகாத இடமே இல்லை என்னும்படி, ஆறு காண்டங்களிலும் ஆங்காங்கே ஞாயிற்றின் கதிர்க்கரங்கள் பாய்ந்து ஒளியூட்டி, உயிர்ப்பூட்டி, உணர்ச்சியைத் தூண்டுகின்றன.

கம்பனில் ஞாயிறு அணியிலக்கணத்துக்காக மட்டும் அமைய வில்லை. காவியத் தலைவனான காகுத்தன் வந்த வமிசத்தின் மூலவனாகவும் முன் நிறுத்திக் குலமுறை கிளத்துகிறான் கம்பன். ''சூரியன் மரபில் தோன்றிச் சுடர் நெடு நேமியாண்டவன்'', ''பனிவென்ற பரிதி போன்று பகை வென்று பாராண்டவன்''; ''உலகுக்கு ஒரு ஞாயிறு எனத் தனியொருவனாய்த் தரணியாண்டவன்'' என்றுஞாயிற்றோடு ஒப்பிட்டுத்தான் தயரதனைப் புகழ்கிறான் கம்பன். அந்தச் சூரியன குலத்திலே, இருள் அழிய இரவி தோன்றியதுபோல், இலங்கை அரக்கர் அழிய இராகவன் தோன்றினான்.

இயற்கை எழில் காட்டும் ஞாயிற்றினை உவமைகாட்டி இராம காதைக்கு அற்புத அணி செய்கிறான் கம்பன். அயோத்தி மாநகரிலே, வெண் சுதை தீட்டிய மாளிகைகள் மீது பொன் தகடு வேய்ந்திருப்பது வெள்ளிப் பனிமலையின் மீது இள வெயில் விரித்தது போன்று இருந்ததாம். தெருக்களிலே பொன்னாடையோடு திரியும் யானைகள், உதயகிரி கதிரொடு திரிவது போன்றுளதாம். கருங்கடலில் கதிரவன் தோன்றுவது, பரந்தாமன் மார்பில் கௌஸ்துபரத்தினம் விளங்குவது போன்று இருந்ததாம். எழுகின்ற இள ஞாயிற்றின் செங்கதிர்கள், கண்ணுதற் கடவுள் செஞ்சடை விரித்தது போன்று இருந்தனவாம். ஆயிரம் கதிர்களோடு வெய்யவன் இருள் கிழித்து எழுவது, ஆயிரம் கரங்கள் ஒச்சி நரசிங்க மூர்த்தி, இரணியன் உடல் கிழிக்க எழுந்தது போன்று இருந்ததாம்.

உலகத்தில் இல்லாத புதுமையைக் கம்பன் தன் இலக்கியத்தில் படைத்துக் காட்டி இன்ப மூட்டுகிறான். அஞ்சன ஞாயிறு போன்ற ஐயனை நோக்கி, வஞ்சியின் வதனம் என்னும் தாமரை மலர்ந்ததாம். சூரியனைப் போன்று தசரதன் தேரில் சென்ற போது, மன்னர்களின் செங்கைகளாகிய பங்கயங்கள் குவிந்தனவாம். செஞ் ஞாயிற்றை மட்டுமே கண்டுள்ள நமக்கு, வேறோர் கருஞாயிற்றைப் படைத்துக் காட்டியும், தாமரையை மலர்த்தும் சக்தி வாய்ந்த கதிரவனை மட்டுமே கண்டுள்ள நமக்குக் குவிக்கும் சக்தி வாய்ந்த மற்றொரு கதிரவனைப் படைத்துக் காட்டியும் விந்தை செய்கிறான் கம்பன்.

சீதையைப் பிரிந்து, வருந்தித்தேடி அலையும் இராமனுக்குத் திருமகளின் அவதாரமாகிய சீதை, மீண்டும் திருமகளாகித் தாமரையில் புகுந்து விடவில்லை என்று காட்டுவான் போல், தாமரையைக் கதிரவன் கட்டவிழ்த்துக் காட்டினானாம். கதிரவன் மைந்தனாகிய சுக்கிரீவன் முடி சூடும் நேரத்தில், அம் மகனுக்குச் செல்வம் சென்று சேரும்

பொருட்டு, கதிரவன் தன் கதிர்க்கரங்களால் தாமரையின் இதழ்க் கதவம் திறந்து, செல்வத் திருமகளை வெளி விட்டானாம். சூரியோதயத்தில் இயல்பாகத் தானே மலரும் தாமரையை இரவி தன் இளங்கரங்களால் இதழ் விரித்து மலர்த்துவதாகக் காட்டுகிறான் கம்பன்.

தட்சணாயனத்தில், இயல்பாக வடக்கிலிருந்து தென்பால் செல்லும் சூரியனை, இராமன் சீதையைத் தேடுவதற்கு, அனுமனுக்கு முன் அனுப்பிய தூதனெனக் கற்பிக்கின்றான். சீதையை தேடிச் சென்ற அனுமன் மீண்டும் தென்திசையி லிருந்து வடக்குநோக்கி வந்ததை, கிழக்கே தோன்றிமேற்கே செல்லும் சூரியன் தெற்கே தோன்றி வடக்கு நோக்கி வரு வதைப்போன்று இருந்ததென உவமை கூறுகிறான் கம்பன். கதிரவனையும் திசை திருப்பிச் செலுத்தும் கம்பனின் கற்பனைத்திறம் கண்டு நாமும் மகிழ்கிறோம்.

தன் குலத்திலே உதித்த—தயரதனது உயிர் ஒடுங்குமாறு கொடுமை இழைத்த கைகேயியின் மீது சினங்கொண்டவன் போல, ஞாயிறு முகஞ் சிவந்து குணக் குன்றில் தோன்றினானாம். தயரதனும் வானடைந்தான் அவனுக்குப்பின் ஆளவேண்டிய இராமனும் கானடைந்தான் ‘இராமன் மீண்டும் வருமளவும் யானே காப்பேன்’ என்பான் போலச் சூரியன் சுடர்த்தேர் ஏறித் தோன்றினானாம். இராவணனது கொடுமைக்குப் பயந்து, இலங்கை மாநகரை எட்டிப் பார்ப்பதற்கும் அஞ்சி இவ்வளவு நாள் ஒதுங்கிச் சென்ற சூரியன், ‘இராமன் வந்துவிட்டான்’ என்றதும் அச்சம் தீர்ந்து தன் ஆசையைத் தீர்த்துக் கொள்பவன் போல எழுந்தானாம். இராமனது பட்டாபிஷேக முடிக்கு ஏற்ற இரத்தினத்தைக் கிழக்குத் திக்குப் பாலகனாகிய இந்திரன் ஏந்தினாற் போன்று சூரியன் எழுந்தானாம் இவ்வாறு, இயற்கையாக எழுகின்ற சூரியனைக் கதை நிகழ்ச்சிக்கேற்பத் தொடர்புபடுத்தித் தற்குறிப்பேற்ற அணி பூட்டுகிறான் கம்பன்.

அதே போல, இயற்கையாக மறையும் சூரியனையும் கதை நிகழ்ச்சிக்கேற்பத் தன் குறிப்பேற்றி அழகுபடுத்து கிறான் கம்பன். காகுத்தன் காடு செல்வதைக் காணச் சகியாதவன் போல், கதிரவன் மலையில் மறைந்து கொண் டானாம். தன் குலத்தவனான தயரதன் இறந்ததற்காகச் சூரியன் கடலில் மூழ்கி ஈமக் கடன் கழித்தானாம் மேருவுக்கு இப்பால் எங்குத் தேடியும் சீதை கிடைக்கப் பெறாமையால், மலைக்கு அப்பாலும் தேடிச் சென்றானாம். மிதிலையில் சீதையின் காம வெப்பம் தன்னையும் தாக்கு தலினாலே அதைத் தாங்க முடியாத கதிரவன் ஓடிப்போய் கடலில் குதித்தானாம். இராவணன் முடிமணிகளைச் சுக்கிவன் வீழ்த்தியதால், சுக்கிரீவனின் தந்தையான தனக்கும் இராவணன் துன்பம் செய்வான், என்று அஞ்சிச் சூரியன் மேலைக் குன்றிலே ஓடி ஒளிந்து கொண்டானாம். இலங்கைப் போர் முடிந்து இராமன் அயோத்தி மீண்ட போது எதிர் கொள்ளவரும் பரதனின் பாதங்கள் சுடாத வாறு கதிரவன் தன் கதிர்களைச் சுருக்கிக் கொண்டானாம்.

கம்பன் தன் காப்பியத்தில் ஞாயிற்றின் தோற்றத்தை யும் மறைவையும் மட்டுமா காட்டுகிறான்? கரிய உதயகிரி யில் கதிரவன் உதிப்பதில், யானைத் தோல் போர்த்த உருத்திர மூர்த்தியின் நெற்றிக் கண்ணைக் காட்டுகிறான். இளைய வீரன் சினத்திலே கடும்பகலின் வெம்மையைக் காட்டுகிறான். அசுரனின் உடலில் திருமாலின் சக்கரம் பாய்ந்து வெளிப்பட்ட இரத்தத்தில், செக்கர் வானத்தைக் காட்டுகிறான். சூரியனை இராகு, கேது என்ற பாம்புகள் விழுங்கிப் பின்விடுவதில், மனித வாழ்வில் தீமை நேர்வதும் பின் நீங்குவதுமான விதியின் விளையாடலைக் காட்டுகிறான்.

இவ்வுலகத்து வாழும் எண்ணிலாத உயிர்கள் இறக்கு மாறு இதுவென்பால் போல முன்னை நாள் இறந்து, பின்னாள் பிறக்குமாறு இதுவென்பால் போல் பிறக்கின்ற பிறவா வெய்யோன், இராமகாதைக்கு மெருகேற்றிக்கவிதைச்

சுவையூட்டி நிற்கிறான். அம்மம்மா! கம்பன் தன் இராம காதையில், இயற்கை எழில் காட்டும் ஞாயிற்றினைக்காட்டி, இலக்கியச் சுவையூட்டும் இடங்கள் எத்தனையோ! எத்தனையோ! அத்தனையும் அமுத ஊற்று!

ஆகையால்,

''ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
நாயகன் நற்கதைக்கு(கு) ஆய எழிலுடன்
பாயும் சுவை யூட்ட லான்.''

# தமிழச் சாதியின் அமரத் தன்மை

**பை**ந்தமிழ்த் தேர்ப்பாகன் பாரதிக்குச் செந்தமிழ்த் தென்புதுவையில், இன்று (11-12-82) நூற்றாண்டு நிறைவுத் திருவிழா. சி. சுப்பிரமணிய பாரதிக்கு, நாளை (12-12-82) நூற்று ஒன்றாவது ஆண்டு தொடங்குகிறது. 1982 டிசம்பர் 11, 12ஆம் நாட்களாகிய இரு நாட்களையும் திருநாட்களாகப் புதுவை மாநில அரசும் மக்களும் கொண்டாடிப் பெருமையுறுகின்றனர்; 'பாரதி பல்லாண்டு வாழ்க' என வாழ்த்தி வணங்குகின்றனர். அவர்கள் வாழ்த்தும் பலிக்கும்; பாரதியும் பல்லாண்டு வாழ்வான். வாழ்த்துகின்ற இதயங்கள், தமிழ்ச்சுவை நிறைந்தவை; வாய்கள் தமிழ்மணம் கமழ்பவை. 'தமிழுக்கும் அமுதென்று பேர்' என்றான் பாவேந்தன் பாரதிதாசன். அந்த அமுதத்தமிழால் வாழ்த்தினால், அமரத்தன்மை கிட்டாதா என்ன?

எட்டையபுரத்தில் 1882 டிசம்பர் 11இல் சின்னசாமி ஐயருக்கும் இலட்சுமியம்மாளுக்கும் குழந்தையாகப் பிறந்த சுப்பிரமணியன், 'சுப்பையா' என்று கொஞ்சப் பெற்று, "சுப்பிரமணியபாரதி" என்று பட்டம் பெற்று, 'தேசியக்கவி' என்று பாராட்டப் பெற்று, "சுதேசி ஐயர்" என்று பரதேசிகளும் பாராட்டும்படி, புதுவை மண்ணிலே நடமாடி, சென்னையிலே 1921 செப்டம்பர் 11இல், தன்னுடைய பொன்னுடலை மறைத்துக் கொண்டான். எலும்போடும் தசையோடும் கூடிய அவனுடைய பூதவுடம்பில் புகுந்து, உயிரோடும் உணர்வோடும் இரண்டறக்கலந்து நடமாடிக்

கிடந்த, ''தமிழ்'', புகழுடம்பில் புகுந்து நடனமாடத் தொடங்கி விட்டது; பாரதி கூடுவிட்டுக் கூடுபாய்ந்து விட்டான்; சித்தனாகி விட்டான். மானுடக் கவியாகிய தனக்கு, அமரகவியாகும் காலம் வரும் என்று, தன்னைத் தான் நம்பிய காரணத்தினாலேதான், ''எனக்கு முன்னே சித்தர் பலர் இருந்தாரப்பா! நானும் வந்தேன் ஒரு சித்தன் இந்த நாட்டில்'' என்று பாடினான் போலும்! ஆம் கவிஞன் சாவதில்லைதான்! அமரகவியாக இந்த நாட்டினால் மட்டும் போற்றப்பெற்றவன், எந்த நாட்டினாலும் போற்றும் வண்ணம், 'மகாகவி'யாகமாறி, உலக நாடுகளில் உலாவந்து கொண்டிருக்கிறான். நூற்றாண்டு மட்டுமா வாழ்ந்தான் பாரதி? ஆயிரம், ஆயிரம், பல்லாயிரம் ஆண்டுகள் வாழப் போகும் மகாகவிக்கு மரணமேயில்லை.

மகாகவி பாரதிக்கு மரணமிலாப் பெருவாழ்வை யளித்தது தமிழ்மொழி. தமிழ்மொழி, அமரத்தன்மை வாய்ந்தது; அமரத்தன்மை யளிப்பது. தமிழ் மொழியின், அமரத்தன்மையைப் பாரதி பாட்டிலே நின்று தமிழ்த்தாய் கூறுவதைக் கேளுங்கள்:-

ஆதிசிவன் பெற்றுவிட்டான்—என்னை
ஆரிய மைந்தன் அகத்தியன் என்றோர்
வேதியன் கண்டுமகிழ்ந்தே—நிறை
மேவும் இலக்கணம் செய்து கொடுத்தான்.
மூன்று குலத்தமிழ் மன்னர்—என்னை
மூண்டநல் லன்பொடு நித்தம் வளர்த்தார்;
ஆன்ற மொழிகளி னுள்ளே—உயர்
ஆரியத் திற்கு நிகரென வாழ்ந்தேன்.
கள்ளையும் தீயையும் சேர்த்து—நல்ல
காற்றையும் வான வெளியையும் சேர்த்துத்
தெள்ளு தமிழ்ப்புல வோர்கள்—பல
தீஞ்சுவைக் காவியம் செய்து கொடுத்தார்.

தந்தை அருள்வலி யாலும்—முன்பு
சான்ற புலவர் தவவலி யாலும்
இந்தக் கணமட்டும் காலன் என்னை
ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சி யிருந்தான்

இது. காற்றாலும், தீயாலும், கடலாலும், கால வெள்ளத்தாலும் அழியாது அமரத்தன்மை வாய்ந்த தமிழ்த்தாயின் கூற்று. எமனும் ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சுகின்ற தமிழ்ச் சக்தியைத் தன்னகத்தே கொண்ட காரணத்தால்தானோ, பாரதி தன் காலால் மிதிக்க, காலனை அழைத்தான்?

"காலா! உனைநான்சிறு புல்லென மதிக்கிறேன்;
என்றன்
காலருகே வாடா! சற்றேஉனை மிதிக்கிறேன்"

என்று அச்சமில்லாமல் அழைத்த காரணத்தால் தானோ எமன் பழிதீர்த்துக் கொள்வதற்காகப் பார்த்தசாரதி கோயில் யானையை ஏவித் தன் காலால் பாரதியை இடறச் செய்தான்? "நாமார்க்கும் குடியல்லோம்;நமனையஞ்சோம்" என்று பாடிய அப்பர் பெருமானின், வாழையடி வாழையாக வந்த தமிழ்ப் பரம்பரையிலே வந்தவனல்லவா பாரதி? பல நாள் போராட்டத்திற்குப் பிறகு, எமனால், பாரதியின் உயிரைத்தான் கவர முடிந்ததேயொழிய அவனுடைய உயிரோடு கலந்த தமிழ்உணர்வை ஒரு சிறிதும் அசைக்க முடியவில்லையே! பாரதியின் தமிழ் உணர்வு, இன்று பாரெங்கும் பசுமை மாறாமல் படர்வதைக் கண்டு நாம் பூரித்துப் போகிறோம். அவன் பாடல்கள், அமரத்தன்மை வாய்ந்தவைகளாகி விட்டன. இன்றும் தன் பாட்டுத்திறத்தாலே உலகைப் பாலித்திடச் செய்கிறான் பாரதி என்பதை நாம் அறிகிறோம்.

"மாறுத லின்றிப் பராசக்தி தன்புகழ்
வையமிசை நித்தம் பாடுகின்றோம்
நூறுவயது புகழுடன் வாழ்ந்துயர்
நோக்கங்கள் பெற்றிட வேண்டுமென்றே"

பாரதி பராசக்தியிடம் வேண்டிய வேண்டுதல் பலித்து விட்டது; உயர்ந்த நோக்கங்களைப் பெற்றுப் புகழோடு நூறுவயது வாழ்ந்து விட்டான்; மேலும் எத்தனை வயது வரை வாழ்வான்? என்பதைச் சிந்திப்போம்.

"தமிழால், பாரதி தகுதிபெற்றான்; தமிழ், பாரதியால் தகுதி பெற்றது" என்றான் பாவேந்தன். பாவேந்தன் கூற்றுப்படி, தமிழ் உள்ளவரையில் பாரதி வாழ்வான்; பாரதி உள்ளவரை தமிழ் வாழும். தமிழ் எந்தநாள் வரை வாழும்? என்ற கேள்விக்குப் பாரதி பாட்டில் தமிழ்த் தாயே விடையளிக்கிறாள்.

"தந்தை அருள்வலி யாலும்-இன்று
சார்ந்த புலவர் தவவலியாலும்,
இந்தப்பெரும் பழிதீரும்-புகழ்
ஏறிப் புவிமிசை என்றும் இருப்பேன்"

'இன்று சார்ந்த புலவர் தவவலியால், புகழ் ஏறிப் புவிமிசை என்றும் இருப்பேன்' என்று தமிழ்த்தாய் கூறியது, பாரதியை நம்பித்தானே? தமிழ்த்தாய், இதுநாள் வரை வாழ்ந்தது, "முன்பு சான்ற புலவர் தவவலிமையால்." இனி வாழப் போவது இன்று சார்ந்த புலவர் தவவலிமையால் ஆம்! அந்தத் தெள்ளுதமிழ்ப் புலவர்கள், பல தீஞ்சுவைக் காவியங்களைக் கொடுத்திராவிட்டால், மெல்லமெல்லத் தமிழ் மொழி செத்திருக்கும், என்று கருதினான் பாரதி. அன்னைத் தமிழ், கன்னித்தமிழாகவே காட்சியளிப்பதற்குக் காரணமானவர்கள், காவியப் புலவர்களே என்பது பாரதியின் கருத்து. அந்தக் கருத்தினாலே தான், பல மொழிகளையும் பயின்ற பாரதி, தன்னை "ஷெல்லிதாசன்"

என்று சொல்லிக் கொண்ட பாரதி, தமிழ்ச் சுவையைப் பெரிதும் துய்த்துத் துய்த்து; தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டு, இங்கு அமரர் சிறப்புக் கண்டான்.

பாரதி தான் கண்ட சிறப்பினைக் கூறுகிறான் கேளுங்கள்:-

"சிலப்பதி காரச் செய்யுளைக் கருதியும்
திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் கருதியும்,
எல்லையொன் றின்மை எனும்பொருள் அதனைக்
கம்பன் குறிகளால் காட்டிட முயலும்
முயற்சியைக் கருதியும் முன்புநான் தமிழ்ச்
சாதியை "அமரத்தன்மை வாய்ந்தது" என்று
உறுதிகொண் டிருந்தேன்."

பாரதியின் பாட்டொலியில், சிலப்பதிகாரப் பண்களும், குறட்பாக்களின் கீதமும், கம்பன் இசைத்த கவிதைகளும் நமக்குக் கேட்கின்றன. பாரதியின் பாட்டொளியில், சேரன் தம்பி இளங்கோவும், தெய்வப் புலவர் திருவள்ளுவரும், கம்பன் என்ற ஒரு மானிடனும், அவன் உள்ளக் கமலத்தில் கொலுவிருக்கும் காட்சி நம் அறிவுக்கண்களுக்குத் தெரிகிறது. இந்த மூன்று புலவர்களும், அமுதத் தமிழால், தமிழ்ச் சாதிக்கு அமரத்தன்மை அருளியவர்கள் என்பது பாரதியின் கொள்கை. கன்னலிலே சுவையறியும் குழந்தையைப்போல் பாரதி முதலில் சிலப்பதிகாரத்தைப் படித்தான்; பின்பு, வள்ளுவத்தை நன்கு உணர்ந்தான்; இறுதியில் கம்பன் காவியத்தில் கலந்தான். மூன்றையும் படித்து முடித்த பின், ஒரு முடிவுக்கு வருகிறான். தன் முடிவை உலகறிய முழக்கம் செய்கிறான்.

"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்,
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை.
உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை.

பாரதி முடிவில் அவன் வழிபடு தெய்வமாகிய பராசக்தியின் மீது சத்தியம் செய்யாத குறை ஒன்றுதான் தோன்றுகிறது; அந்த அளவிற்கு உறுதி கொண்டிருக்கிறான்.

பாரதியின் உறுதியான உள்ளத்தில், கம்பன் முதலிடம் பெற்ற காரணம் என்ன? தமிழ்ச் சாதி, அவகாசமின்மையாலோ, சோம்பலினாலோ, மற்ற இருவரின் நூல்களையும் படிக்கத்தவறினாலும், கம்பன் காவியத்தைத் தவறாது கற்க வேண்டும் என்பதே பாரதியின் குறிக்கோள். கம்பன் காவியம், சிலம்பு சிறப்பிக்கும் பெண்மைக் கற்போடு பிறன் மனை நோக்காத ஆண்மைக் கற்பையும் போற்றுகின்றது. கம்பன் வழி நின்றுதான் பாரதி,

"கற்பு நிலையென்று பேசவந்தார்—இரு
கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்"

என்று பாடினான்.

கம்பன், பழைய கதையைத்தானே வாங்கிப் பாடினான்; அவனுக்கா முதன்மையளிக்க வேண்டும்? என்றால், வள்ளுவத்தின் கருத்துக்களைப் பெய்து காவியம் படைத்தலினாலே, கம்பன் முதன்மைக்கு உரியவனாகிறான். கம்பன் அவையடக்கம் கூறும்போது:

"வையம் என்னை இகழவும் மாசுஎனக்கு
எய்தவும் இது இயம்புவது யாதெனில்
பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே"

என்று பாடினான்.

“கம்பன் காவியத்திற்குள் வள்ளுவத்தின் மாட்சி மண்டிக்கிடக்கின்றது என்பதைக் கற்றவர்கள் நன்கு அறிவர். மேலும், சாதாரண மானிடன்தான் கம்பன்; மானிடம் போற்றும் மாக்கதையைப் பாடினான்; எல்லை யற்ற பரம்பொருளை மண்ணுலகத்திற்குக் கொண்டுவந்து, கால் நிலம் தோய நிறுத்திக் காட்டினான்; மனித இராமனைத் தெய்வராமனாகக் காட்ட முயற்சி செய்தான்; முயற்சிதான் கம்பனுடையது. அந்த முயற்சியைத் திருவினையாக்கிய பெருமை தெய்வத்தைச் சேர்ந்தது. அந்தத் தெய்வம் யார்? அவள்தான் “பராசக்தி”. அவளைத் தான், “யாதுமாகி நின்றாய்- காளீ!- எங்கும் நீ நிறைந் தாய்” என்று பாரதி வழிபட்டான்.

முன்னை இலங்கை அரக்கர் அழிய
முடித்தவில் யாருடைவில்?-எங்கள்
அன்னை பயங்கரி பாரத தேவிநல்
ஆரிய ராணியின் வில்
இந்திர சித்தன் இரண்டு துண்டாக
எடுத்த வில்யாருடைவில்?—எங்கள்
மந்திரத் தெய்வம் பாரத ராணி
வயிரவி தன்னுடை வில்

என்று தாளம் போட்டுப் பாடுகிறான் பாரதி. மேலும்,

“நல்லறம் நாடிய மன்னரை வாழ்த்தி
நயம்புரி வாள் எங்கள்தாய்-அவர்
அல்லவராயின் அவரை விழுங்கிப்பின்
ஆனந்தக் கூத்திடுவாள்”

என்று சிந்துபாடி ஆடுகிறான் பாரதி.

"கம்பநாடு உடைய வள்ளல் கவிச்சக்கர
வர்த்திபார் மேல்
நம்புபா மாலையாலே நரருக்கு இன்று
அமுதம் ஈந்தான்"

இந்த வரிகள் கம்பன் காவியச் சிறப்புப் பாயிரச்செய்யுளில் உள்ளவை. கம்பன் காவியம், மனிதகுலத்துக்கு அமரத் தன்மை வழங்கும் ஆற்றல் உள்ளது.

ஆகையால், பாரதியைப் பாரட்டுகின்றவர்கள், அவனது உள்ளத்தில் குடிகொண்ட முப்பெரும் புலவர்களில், முன்னே நிற்கும் கம்பனைக் கூறு போட்டுச் சிதைக்கக் கருதுவது, பாரதியைக்கொன்றிடல் போன்ற தீயசெயலாகும். எனவே,

தமிழ்ச் சாதியினர், பாரதியையும் பாரதியின் இதயக் கமலத்தில் குடிகொண்ட புலவர்களையும் எத்துணையும் பேதமுறாது போற்றி, அமரத் தன்மை எய்துவார்களாக!

இது,

சாதனை செய்க பராசக்தி.

# மலேசியாவில் கம்பன்

## பயணக்கட்டுரை

அமரர் கம்பன் அடிப்பொடி அவர்கட்குக் கவிச் சக்கரவர்த்தி கம்பன் மீது தீராத காதல் உண்டு. தன்னுடைய வாழ்நாளைக் காந்தியப் பணிக்கும் கம்பன் பணிக்குமே அர்ப்பணித்தவர் அவர். மகாத்மா காந்தி மீது அவருக்கு எவ்வளவு காதல் உண்டோ, அவ்வளவு காதல் கவிச்சக்கரவர்த்தி கம்பன் மீதும் உண்டு. அவருடைய அரசியல் பணி காந்தியத்தில் முடிந்தது; இலக்கியப்பணி கம்பனில் முடிந்தது.

காரைக்குடியில் சா. கணேசனாகப் பிறந்த அவர்கள், கம்பன் அடிப்பொடியாக மறைந்தார்கள். கம்பன் அடிப் பொடியவர்கள் நாற்பத்து மூன்று ஆண்டுகளாகக் கம்பன் திருநாளைக் கொண்டாடினார்கள்; தமிழ்நாட்டில் நாற்பத்தைந்துக்கு மேற்பட்ட கம்பன் கழகங்களை நாட்டினார்கள். கம்பன் கழகங்களைத் தமிழகத்தில் மட்டுமன்றிப் பாரதநாட்டுப் பல மாநிலங்களிலும் இலங்கை நாட்டு யாழ்ப்பாண நகரத்திலும், மலேசிய நாட்டு மலாக்கா நகரத்திலும் நட்டார்கள்.

மலேசிய மண்ணில், மலாக்கா நகரத்தில் ஊன்றிய கம்பன் கழகம்,இன்று அந்த நாட்டின் பல மாநிலங்களிலும் கிளைவிரித்து மணம்பரப்பிக் கொண்டிருக்கிறது. கம்பன் அடிப்பொடி, முரு பழ. இரத்தினஞ்செட்டியார், கவியரசு கண்ணதாசன், புலவர் கீரன் முதலிய தமிழ்ப் பெருமக்கள், மலேசியாவுக்குச் சென்ற சமயங்களில் தங்கள் சிறப்புரை

யால் மலேசியக் கம்பன் கழகத்திற்குச் சிறப்பூட்டியிருக் கிறார்கள்.

1966ல் உலகத் தமிழ் மாநாட்டைக் கோலாலம்பூரில் முதன் முதலில் நடத்தி உலகத்திற்கே வழி காட்டியது மலேசியத் திருநாடு. மலேசியக் கம்பன் கழகமும் ஆண்டு தோறும் கம்பன் விழாவைக் கொண்டாடிக் கன்னித்தமிழ் வளர்க்க வேண்டுமென்பது கம்பன் அடிப்பொடியவர்களின் பேராவல். அந்தப் பேராவலைத் தூண்டிவிட்டுத் துணை நின்றவர், மலாக்கா நகரத்தில் செல்வமும், செல்வாக்கும், வளமும் வள்ளன்மையும் பெற்றுச் சிறப்போடு வாழும் திருமிகு. "வெங்கா" அவர்கள்.

திருமிகு. வெங்கடாசலம் அவர்கள், செட்டிநாட்டில் அமராவதி புதூரில் பிறந்து, காரைக்குடியில் குடிபுகுந்து, "வெங்கா" என்று மலேசிய மக்களால் செல்லமாக அழைக்கப்பெற்று, மலாக்காவில் மதிப்புயர்ந்து வாழ்ந்து வருகிறார்கள் மலாக்காவில், "உயர்நீதிமன்ற வழக்கறிஞர் கள் கூடம்" நிறுவி, அறத்தின் ஆலோசகராக விளங்கி வரும் வெங்கா அவர்களை அறியாத மலாக்கா மாநிலத்தவரும் இல்லை; மலேசியத் தமிழர்களும் இல்லை எனலாம். இத்தகைய புகழ்பெற்ற வெங்கா அவர்களின் விருப்பத்திற்கேற்ப, கம்பன் அடிப்பொடியவர்கள் மலேசியா வில் கம்பன் விழாக்காண விழைந்ததில் வியப்பொன்று மில்லை.

கம்பன் அடிப்பொடியவர்கள், கம்பனையே கடவுளாகப் போற்றியவர்கள். வெங்கா அவர்களோ, கம்பன் அடிப்பொடி யவர்களையே கம்பனாகக் காணுகின்றவர்கள்.

'மற்றுஇனி உரைப்பது என்னே?
வானிடை, மண்ணில், நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்;
தீயரே எனினும், உன்னோடு

உற்றவர் எனக்கும் உற்றார்;
உன்கிளை எனது; என்காதல்
சுற்றம், உன் சுற்றம்; நீ என்
இன்னுயிர்த் துணைவன், என்றான்.

என்ற கம்பன் பாடலுக்கு இலக்கணமாக, கம்பன் அடிப் பொடிக்கு வேண்டியவர்களெல்லாம், வெங்கா அவர்களுக்கும் வேண்டியவர்கள்; அவருக்கு வேண்டாதவர்களெல்லாம் இவருக்கும் வேண்டாதவர்கள். இருவருக்கும் வேண்டியவர் கள், கம்பனுக்கு வேண்டியவர்கள். கம்பனுக்கு வேண்டிய புலவர்களைக் கொண்டு மலேசியாவில் கம்பன் விழாவைத் தொடங்குவதென்று 1979ல் முடிவெடுத்தார்கள். கம்பன் அடிப்பொடியவர்களின், கம்பன் மணிமண்டபப் பணியின் காரணமாகவும். அவர்களைத் தளரச் செய்துவந்த பிணி யின் காரணமாகவும், அப்போது அவர்கள் எடுத்த முடிவு முடியாமல் போயிற்று.

கண்கெட்ட காலன், 1982ல் கம்பன் அடிப்பொடியவர் களின் உயிரைக் கவர்ந்து கொண்டான். கன்னித் தமிழ் நாடு, கம்பன் அடிப்பொடியவர்களை இழந்து கவலை யுற்றது.

''நந்தா விளக்கு அனைய நாயகனே! நானிலத்தோர்
தந்தாய்! தனிஅறத்தின் தாயே! தயாநிலையே!
எந்தாய்! இகல்வேந்தர் ஏறே! இறந்தனையே!
அந்தோ! இனிவாய்மைக்கு ஆர்உளரே மற்று?''

என்று தசரதனைப் பிரிந்த இராமனைப் போன்று, அனை வரும் அழுது புலம்பினார்கள் மற்றவர்களினும் கம்பன் தொண்டர்களாகிய எங்களுடைய வேதனை இரட்டிப்பாகி எழுந்தது. 'கம்பனுக்குத் தலைமைத் தொண்டரை இழந் தோமே!' என்ற வேதனை ஒன்று; 'கம்பன் அடிப்பொடி யவர்கள், கடல் கடந்த நாடுகளிலும் கம்பன் விழாக்காண முயன்ற முயற்சி வீணாயிற்றே' என்ற வேதனை மற்

றொன்று. எங்களுடைய இரட்டிப்பு வேதனையைக் கடந்து என்னுடைய வேதனை மும்மடங்காகியது. அண்ணன் கம்பன் அடிப்பொடியவர்கள்,மலேசியக் கம்பன் விழாவுக்கு என்னையும் (புலவர் அருணகிரி) அழைத்துச் செல்வதாகச் சொன்னாரே, அவருடைய விருப்பம் நிறைவேறாமல் போய் விட்டதே என்ற வேதனைதான் அது.

"சூழ்வினை நான்முகத்து ஒருவர் சூழினும்
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ?"

வெளிநாடு செல்வதற்கு 1979ல் எடுத்த பாஸ்போர்ட்டும் வீணாகிக் காலாவதி ஆகிவிட்டது. மேலும் எனக்கு ஏற் பட்ட நோயுற்ற வாழ்வும் என் ஆசையை மறக்கச் செய்து விட்டது.

கம்பன் அடிப்பொடியவர்களின் இதய விருப்பத்தைச் சென்ற 1984 ஆம் ஆணடு,மே திங்களில் அவருடையஇதயம் கவர்ந்த சீடர் திருமிகு வெங்கா அவர்கள் நிறைவேற்றத் தொடங்கி விட்டார்கள். வெங்கா அவர்களின் முயற்சியால் மலாக்காவில் கம்பன் விழாக் கொண்டாடப்பெற்றது. அந்த விழாவிற்குத் திருக்குறளார். வீ. முனிசாமி அவர்களும் டாக்டர் சரஸ்வதி இராமநாதன் அவர்களும் அழைக்கப்பெற் றார்கள். முதலாண்டு விழா இனிதே முடிந்தது,

இரண்டாவது ஆண்டாக இந்த 1985 ஆம் ஆண்டு, மே திங்கள் 18, 19 ஆம் நாட்களில் கொண்டாடுவதென்று முடி வெடுக்கப் பெற்றது. முதலாண்டு விழாவில் தமிழ் ரசிகப் பெருமக்கள் காட்டிய ஆர்வத்தைக்கண்ட மலேசியக் கம்பன் கழகத்தார் இரண்டாவது ஆண்டு விழாவினைச் சீரும் சிறப்புமாகக் கொண்டாடுவதென்று முடிவெடுத்தனர். மலேசியக் கம்பன் கழகத்தார் எல்லோரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தி வாழ்கின்ற காரணத்தால், நினைத்ததை நினைத்தபடி செய்து முடிக்கும் உறுதிப்பாடு உடையவர்

கள். இந்த ஆண்டு விழாவில் பங்கு பெற ஒன்பது புலவர் களைத் தமிழ்நாட்டிலிருந்து அழைத்தனர்.

திருமிகு. க. கு. கோதண்டராமன், சுப. அருணாசலம், மா. கண்ணப்பன், அப்துல் கறீம், சோ. சத்தியசீலன், சாலமன் பாப்பையா, சரஸ்வதி இராமனாதன், சி. எஸ். விசாலாட்சி ஆகிய எண்மரோடு ஒன்பதின்மராக அடியேனும் அழைக்கப் பெற்றேன். பிறருக்கு எப்படியோ, அழைப்பைக் கண்ட நான் கண்ணிலான் கண் பெற்ற பெருமகிழ்ச்சியுற்றேன். எங்கள் எல்லோருக்கும் பாஸ் போர்ட், விசா, டிக்கெட் எடுத்துக்கொடுக்கும்பொறுப்பினைக் கம்பன் கழகத்துக்காக, கணேஷ் டிராவல்ஸ் ஏற்றுக் கொண்டது. எங்களுக்கு எந்தத் தொல்லையுமேயில்லை. 14-5-85 பகல் மணி 12-15க்குப் புறப்படும் MAS விமானத் தில் மலேசியப் பயணம் உறுதி செய்யப் பெற்றது.

கோவை, கரூர், காரைக்குடி, அதிராம்பட்டினம் திருச்சி, மதுரை, பள்ளத்தூர், புதுவை ஆகிய நகரங்களில் வாழும் நாங்கள் 14-5-85 காலை 9 மணிக்கே சென்னை விமான நிலையத்திற்கு வந்து சேர்ந்தோம். எங்கள் குடும்பத்தினரும் நண்பர்களும், வெளிநாடு செல்லும் எங்களை வாழ்த்தி வழியனுப்பினர். விமான நிலையச் சுங்கச் சடங்குகளை முடித்துக் கொண்டு விமானத் தடத்திற்குச் சென்றோம். எங்களுக்காக மலேசிய விமானம் கம்பீரமாகக் காத்துக் கொண்டிருந்தது. மலேசியக் கம்பன் கழகத்தார் தமிழ்நாட்டுப் புலவர் பெருமக்களை மரியாதை யோடு அழைத்துச் செல்ல, புட்பக விமானத்தையேஅனுப்பி யிருக்கிறார்கள் என்ற உணர்வு தான் எங்கட்கு ஏற்பட்டது.

விமானத்தில் ஏறி உள்ளே சென்றதும், உள்ளிடம் அயோத்தி மாநகரத்தின் தசரதன் சபாமண்டபமோ? இலங்கை மாநகரத்தின் இராவணன் கொலு மண்டபமோ? என்று ஐயுறும்படியிருந்தது. விமானத்தில் பணி புரியும் அரம்பையர் போன்ற மலேசிய மங்கையரும், அழகு மிக்க

காளையரும், எங்களை இன்முகம் காட்டி இருகை நீட்டி வரவேற்று, இருக்கை காட்டி அமரச் செய்து, பக்குவம் வந்த பழச்சாறும் பாகமான நல்ல உணவும் தந்து எங்களை உபசரித்தனர். கன்னித்தமிழ் பாடும் கம்பனுக்கு எத்தனை உபசரிப்பு!

இறக்கை விரித்த விமானம், தரையிலே தாவிப் பாய்ந்து, விண்ணிலே விசைத்தெழுந்து, காற்றிலேறிக் கடல் மேல் மேகக் கூட்டங்களுக்கு மேல் பறக்கும் போது, எங்கள் உள்ளம் களிப்பிலே திளைத்துக் கற்பனை உலகிலே சஞ்சரித்தது. அன்று, இலங்கையைக் காணச் சென்ற அனுமன், கடலின் மேல் தாவிப் பாய்ந்து விண்ணிலே சென்ற காட்சி இப்படித்தான் இருந்திருக்குமோ? என்று வியந்தோம். ''விமானம் கடல் தாவு படலம்'' பாடுவதற்குக் கம்பன் அடிப்பொடி இன்றில்லையே என்றும் ஏங்கினோம்.

விமானத்தில் எங்களோடு பயணம் செய்தவர்கள், கண்ணாடிச் சன்னல்களின் வழியே கீழ் நோக்கிக் காட்டி, 'இதுதான் அந்தமான், இதுதான் நிக்கோபார், இதுதான் சுமித்திரா' என்று காட்டிக் கொண்டே வந்தனர். இந்தச் செயல், எங்கள் உள்ளத்தை மீட்சிப்படலத்திற்கு இழுத்துச் சென்று விட்டது. அன்று, இலங்கையிலிருந்து புட்பக விமானத்தில் இராமன் மீண்ட போது, சேதுவையும், பொதிகையினையும், கோதாவரியினையும் இப்படித்தான் சீதைக்குக் காட்டிக் கொண்டே வந்திருப்பானோ! என்று கற்பன்ன செய்து கொண்டோம்.

வான் வழிச் சென்ற விமானம், எங்களை வயிற்றில் பொதிந்து கொண்டு மூன்றரை மணி நேரம் பறந்தது. மூன்றரை மணி நேரமும் சென்றதே தெரியவில்லை எங்களுக்கு. இந்திய மணிக்கும் மலேசிய மணிக்கும், இரண்டரை மணி நேரம் வித்தியாசம். மாலை ஆறு மணிக்கு விமானம் மலேசிய நாட்டின் தலை நகரமான கோலாலம்பூர் மண்ணைத் தொட்டுப் பணிந்து நின்றது.

கோலாலம்பூர் விமான நிலையம், பூலோக சுவர்க்கம் போன்றிருந்தது. செயற்கையழகின் சிறப்பினை அங்கே காண முடிந்தது. பளபளத்து விளங்கும் பளிங்குச் சுவர்கள்; மின் விளக்குகள் அலங்கரிக்கும் மேல்தளம்; தானே இயங்கி ஏற்றி இறக்கும் மெத்தைப்படி; குப்பையோ கூளமோ இன்றிப் பரிசுத்தம் தவழும் தளவரிசை; அழகெனும் அழகுக்கு அழகு இழைத்து அமைத்த அந்த நிலையம் இந்திரனது கொலு மண்டபம் போன்றிருந்தது. இந்த அற்பதக் காட்சியைக் கண்ட எங்கள் கண்கள் இமைத்தலை மறந்தன. நாங்கள் அனைவரும் இமையா நாட்டத்து இமையவர்களாகிவிட்டோம். கம்பனைக் கற்றதனால் நாங்கள் தேவர்களாகி விட்டோம்.

"பொன்கொண்டு இழைத்த? மணியைக்கொடு
பொதிந்த?
மின்கொண்டு அமைத்த? வெயிலைக்கொடு சமைத்த?
என்கொண்டு இயற்றிய எனத்தெரி கிலாத
வன்கொண்டல் விட்டு மதி முட்டுவன மாடம்"

என்று இலங்கை மாநகரத்தை வருணித்த கம்பன், இந்த நிலையத்தைக் கண்டிருந்தால் எப்படி வருணித்திருப் பானோ? என்று அதிசயித்தோம்.

கோலாலம்பூர் விமான நிலையத்தில் வரவேற்று மலாக் காவிற்கு அழைத்துச் செல்ல, திருமிகு துரைராஜ், காந்தி, சுப்பையா ஆகிய மூன்று அன்பர்கள வரவேற்பாளர்களாக வந்திருந்தார்கள். அன்பர்கள் என்ற சொல்லுக்கு இலக்கண மாக அமைந்தவர்கள் அவர்கள். அவர்கள் மூவரும் மூன்று தேர்களில் வந்திருந்தார்கள். அந்தத் தேர்களுக்குப் பெயர் "கார்கள்". ஒட்டை உடைசல் தகர டப்பாக்களை யெல்லாம் கார்கள் என்று கண்ட எங்கள் கண்களுக்கு குளிர்ச்சிக் கண்ணாடியும், குளிர் சாதனமும், வெல்வெட் விரிப்பும் பொருத்திப் பளபளத்து விளங்கும் நீண்ட கார்கள், மணி நெடுந்தேர்களாகவே தோன்றின. முரசுக் கட்டிலில்

துயின்ற மோசிகீரனை இந்தக் கார்களில் அமர்த்தினால், எழுப்பினால் கூட எழுந்திருக்க மாட்டான் என்று சொல்லிச் சிரித்து மகிழ்ந்தோம். கம்பனுக்குக் கிடைத்த மரியாதையை எண்ணியெண்ணி இறும்பூதெய்தினோம்.

முன்னும் பின்னுமாக மூன்று கார்களும், மலாக்காவை நோக்கி நெடுஞ்சாலைகளில் பறந்தன. கார்கள் சென்ற வேகத்தைக் காணும் போது ; 'பறந்தன' என்று தான் சொல்ல வேண்டியிருக்கிறது. குண்டும் குழியும் நறுக்குப் பள்ளங்களும் நிறைந்த சாலைகளில் ஆடியும் சாடியும், துள்ளியும் குதித்தும் ஓடும் கார்களில் சென்று பழக்க முடைய எங்களுக்கு, வழவழப்பான சாலைகளில் ஓடும் கார்கள் வழுக்கிக் கொண்டு பறப்பது போல் இருந்தது. சாலைகளின் இருமருங்கும் வானளாவிய சோலைகள் நின்று எங்களை வரவேற்றன. மலாக்கா சென்று செட்டி யார் தெருவில் கார்கள் நின்றன. திருமிகு சுப்பிரமணிய செட்டியார் தலைமையில், திருமிகு வெங்கா அவர்கள், கம்பன் கழகத்தினரோடு எங்களை மனம் குளிர்ந்து வரவேற்றார்கள். கடல் கடந்த நாட்டிலும் கன்னித் தமிழ்க் கவிஞர் பெருமானுக்குக் கிடைக்கும் மரியாதையை நினைந்து நினைந்து நெகிழ்ந்து போனோம்.

மலாக்கா சென்று சேர்ந்ததும், முதல் மூன்று நாட்கள், மலாக்கா நகரத்தின் முக்கிய இடங்களையும், மலேசிய நாட் டின் முக்கிய பகுதிகளையும் காண்பதற்குச்சுற்றுலாஏற்பாடு செய்திருந்தனர் கம்பன் கழகத்தினர். சுற்றுலாப்பேருந்தில் ஒலி பெருக்கி அமைக்கப் பெற்றிருந்தது. எங்களோடு வழிகாட்டி வந்தவர், ஒவ்வொரு இடங்களின் சிறப்பு களையும் விளக்கிக் கொண்டே வந்தார்கள். எங்கெங்கு நோக்கினும் அழகின் திருக்கோலம் பச்சைப் பசுங்காடு— சாலைகளின் இருபுறமும் ரப்பர்த் தோட்டங்களும் எண் ணெய்ப் பனந்தோப்புகளும் கண்களைக் குளிரச் செய்து விட்டன.

எழில்மேகம் ஆடுகின்ற மலை நாடு-மூன்று
இனம் சேர்ந்து வாழுகின்ற ஒரு வீடு
பொழில் சூழ்ந்த தேசமென்று இசைபாடு—இது
பொதுவாழ்வில் மேன்மை பெற்ற தனிநாடு.

என்று கவியரசு கண்ணதாசன் பாடல்களைப் பாடிக் களித்தவாறே எங்கள் பயணம் தொடர்ந்தது. பத்துமலை முருகன் கோயில், புத்தர் குகைக்கோயில், காசினோ காட்சி, டிக்ஸன் துறைமுகம் முதலிய முக்கிய இடங்களைக் கண்டு ரசித்தோம். மலேசிய நாட்டின் இயற்கை வளங்களும் செயற்கைச் சிறப்புகளும் எங்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டுவிட்டன.

"நிலமகள் முகமோ! திலதமோ! கண்ணோ!
நிறைநெடு மங்கல நாணோ!
இலகுபூண் முலைமேல் ஆரமோ! உயிரின்
இருக்கையோ! திருமகட்கு இனிய
மலர்கொலோ! மாயோன் மார்பில் நன்மணிகள்
வைத்தபொற் பெட்டியோ! வானோர்
உலகின்மேல் உலகோ! ஊழியின் இறுதி
உறையுளோ! யாதுஎன உரைப்பாம்?

என்று அயோத்திமா நகரைப்பற்றிக் கம்பன் பாடிய பாடலே மலேசிய நாட்டுக்கும் பயன்படுகிறது. இராமகாதையில் கம்பன் வருணித்த பல பாடல்களுக்கு மலேசிய மண்ணில் விளக்கம் காண முடிந்தது. மலேசியக் கம்பன் கழகத்தார்கள், மூன்று நாள் சுற்றுலாவின் மூலம், கம்பநாடன் கவிதைகளை உணர்ந்து பேசுவதற்கேற்ப எங்களைப் பக்குவப் படுத்தி விட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

மலாக்கா நதர மண்டபம் மே18ல் விழாக்கோலம் பூண்டது. தமிழ் இலக்கிய ரசிகப் பெருமக்களால் மண்டபம் நிரம்பி வழிந்தது. மங்கல இசையோடு "கம்பன் விழா"

தொடங்கியது. மலேசிய நாட்டின் பொதுப்பணித்துறை அமைச்சர், மாண்புமிகு டத்தோ ச. சாமிவேலு அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்து உரையாற்றினார்கள். அமைச்சர் அவர்கள் ஆங்கிலத்தில்தான் பேசுவார்கள் என்று எதிர்பார்த்திருந்த எங்கள் செவிகளில் இன்பத் தமிழ்த்தேன் பாய்ந்தது. அழுத்தந் திருத்தமாக ஆணித் தரமாக அமைச்சர் ஆற்றியஉரை, கேட்டாரைப் பிணித்தது.

“நான் மலேசிய நாட்டின் பொதுப்பணித்துறை அமைச்சனாகப் பணிபுரிகிறேன். எங்கெங்கு மழைவளங் குறைந்து வறட்சி காணப்படுகிறதோ, அங்கங்கெல்லாம் விமானங்களைச் செலுத்தி மழை பெய்யச் செய்வது என் கடமையாகும். இன்று ஒன்பது தமிழ் விமானங்கள் (தமிழ்ப் புலவர்கள்) இங்கு வந்து இறங்கியிருக்கின்றன. நான் செலுத்துவிக்கும் விமானம், வான்மழையைத்தான் பொழிய வைக்கும். தமிழ் நாட்டிலிருந்து வந்திருக்கும் இந்தவிமானங் களோ தேன் மழையைப் பொழியப் போகின்றன” என்று அமைச்சர் அவர்கள் பேசியதும், ரசிகப் பெருமக்களின் கைதட்டல் ஆரவாரம் அடங்க அதிக நேரமாயிற்று. அமைச்சர் அவர்கள் தொடர்ந்து பேசினார்கள்.

“இராமாயணக்கதை மலேசியருக்குப் புதுமையான தன்று. நீண்ட நெடுங்காலமாக இந்த நாட்டு மக்களின் இரத்தத்தில் ஊறிப்போன கதை இது. அண்மையில் கோலாலம்பூரில் 64 மாடிக் கட்டிடத் திறப்பு விழா ஒன்று நடந்தது. விழாவின் நிறைவாக நாட்டியக் கலைநிகழ்ச்சி யும் நிகழ்ந்தது. நிகழ்ச்சியில், ஒரு மலாய்ப் பெண் சீதையாக வேடந்தரித்துப் பூங்கொடிபோல் அசைந்து, மயில் போன்ற சாயலுடன், ஒய்யாரமாக, அன்னம் போல் நடந்து வந்த காட்சியைக் கண்ட அனைவரும் அதிசயித்துப் போய்விட்டார்கள். சீதை நடையழகைக் கலையுணர்வோடு ஒரு மலாய்ப் பெண் நாட்டியமாடிக் காட்டினாள் என்றால் இராமாயணத்தில் மலேசியருக்குள்ள ஈடுபாடு நன்கு

விளங்கும்.''இவ்வாறு அமைச்சர் அவர்கள்கூறியதும் ரசிகப் பெருமக்களின் மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை. உடனே பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை. ப. சுந்தரேசம் பிள்ளையவர்கள், நைவளப்பண்ணில் அடிக்கடி பாடி மகிழ்விக்கும் கம்பன் காவியப் பாடல் ஒன்று என் நினைவுக்கு வந்து நரம்புகளைத் தட்டி எழுப்பி விட்டது.

''நைவளம் நவிற்றுமொழி நண்ணவர லோடும்
வையம்நுகர் கொற்றவனும், மாதவரும், அல்லார்
கைகள்தலை புக்கன; கருத்துளதும் எல்லாம்
தெய்வம்என உற்ற; உடல் சிந்தைவசம் அன்றோ?''

இந்தப் பாடல்தான் அந்தப்பாடல்.

அடுத்து, அருள்மாமணி. என். டி. எஸ். ஆறுமுகம் பிள்ளையவர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள். வள்ளல் ஆறுமுகம் பிள்ளையவர்கள் திருப்புத்தூரில் பிறந்தவர் என்றாலும் மலேசியாவில் மாபெரும் புகழோடு வாழ்கிறார் கள். ஆறுமுகம்பிள்ளையவர்கள் ஆழ்ந்த கல்வி ஞானம் உடையவராதலால் திருப்புத்தூரில் கல்லூரி நிறுவினார்கள். பிள்ளையவர்கள் கல்வியில் பெரியவனாகிய கம்பனுக்குக் கொண்டாடும் விழாவில் ஆசியுரை வழங்கியது பொருத்த மாக இருந்தது. அருள்மாமணியவர்கள் தன்னுடைய ஆசியுரையில், ''பினாங்கிலும் கம்பன் விழாவைக் கொண்டாட வேண்டும்'' என்ற ஆசையுரையையும் வெளி யிட்டார்கள். மேலும், தமிழகத்திலிருந்து சென்றிருந்த கம்பன் அடியார்களாகிய எங்களை அன்போடு பினாங்கிற்கு அழைத்து அருள்மழை பொழிந்து விட்டார்கள். பிள்ளை யவர்களின் வள்ளன்மையைக் கண்ட நாங்கள், அவருடைய அன்பின் ஆழத்தைக் காணமுடியாமல் திணறிப் போனோம். கம்பன் இன்றிருந்து, இன்று இராமனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தால், ''அருள்மாமணி கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி'' என்று பாடியிருப்பான். மலேசியத் தமிழ் வள்ளல்களின் ஆதரவில்

கம்பன் கிழக்கு ஆசிய நாடுகளிலும் உலாவருவான் என்பது உறுதி.

மலேசிய நாட்டின் சுகாதாரத்துறை அமைச்சர் மாண்புமிகு. டத்தோ கு. பத்மநாபன் அவர்கள் சிறப்புரை யாற்றுகையில் கீழ்க்கண்டவாறு வேண்டுதல் விடுத்தார்கள்:-

"மலேசிய மண், தமிழ்வளர்ச்சித் துறையில் தாழ்ந்த தில்லை. இந்த நாட்டில் தமிழவேள் கோ. சாரங்கபாணி போன்றவர்கள் தமிழுக்காகவே வாழ்ந்தார்கள். அவர்கள் வழியில் கம்பன் கழகம், மலேசிய நாடு முழுதும் கிளை பரப்பிக் கன்னித்தமிழ் வளர்க்க வேண்டும்" என்று குறிப்பிட்டார்கள்.

மலாக்கா கம்பன் விழாவைத் தொடர்ந்து, பத்து பகாட், அலோர்காஜா, பாரிட்புந்தார், செகாமட், மூவர், ஜோகூர்பாரு ஆகிய நகரங்களிலும் பட்டி மண்டப நிகழ்ச்சி கள் நடந்தன. இடையிடையே பல பள்ளிகளில் இலக்கிய நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன. மலாக்காவில் தொடங்கிய கம்பன் விழா, ஜோகூர்பாரு நகரில் நிறைவுற்றது.

நிறைவு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடியவர் மாண்புமிகு செனட்டர் டத்தோ. க. பாசமாணிக்கம். அவர்கள், எல்லோரிடமும் பாசமும் பரிவுமுள்ளவர்; ஜோகூர் மாநிலத்தின் தலைவர்; திருமிகு வெங்கா அவர்களின் இதயம் கவர்ந்த நண்பர். வெங்கா அவர்களும் பாசமாணிக்கம் அவர்களும் மலேசியக் கம்பன் கழகத்தின் இணைச் செயலாளர்கள். இந்த இணைச் செயலாளர்களின் துணையோடுதான், கம்பன், மலேசியாவில் ஒரு மாதம் பவனி வந்தான். மலேசியாவில் கம்பனுக்கு நல்ல காலம் வந்துவிட்டது. மலேசியத் தமிழ்ப்புலவர்களும், தமிழகப் புலவர்களும், கன்னித் தமிழால் கம்பன் புகழ் பாடுவார்கள். ஆண்டாண்டுதோறும் "கம்பன் உலா" நடைபெறும்.

இறுதியாக, ஒன்றை மறக்காமல் நினைதல் வேண்டும். தமிழ்நாட்டு ரசிகர்களுக்கும் மலேசிய ரசிகர்களுக்கும் ஒரு வித்தியாசம் காண முடிந்தது. வெற்று நகைச்சுவைக் கதைகளையே சொல்லி, இங்கே கைதட்டல் வாங்குகிறவர்களுக்கு அங்கே வேலையில்லை. பாடல்களை நிறுத்தி நிதானித்துச் சொல்லி அவற்றிலுள்ள நயங்களை அள்ளிக் கொடுத்தால் ஆர்வத்தோடு கேட்டு ரசிக்கிறார்கள். இந்த ரசனையில் ஆண்களுக்கு நிகராகப் பெண்களும் நிற்கிறார்கள். இதன் விளைவு வீட்டுக்கு வீடு புலவர்களுக்கு விருந்துதான்.

பெருந் தடங்கண் பிறைநுதலார்க்கு எலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்,
விருந்தும் அன்றி விளைவன யாவையே!

குழந்தைக் கதை—1

# பாசமும் பக்தியும்

பாப்பா! இன்று உனக்கு ஒரு கதை சொல்லுகிறேன் கேள். இது, இராமாயணக்கதை.

அயோத்தி மன்னன் தசரதன், எல்லாச் செல்வங்களையும் பெற்றிருந்தும், நீண்ட காலம் குழந்தைச் செல்வத்தைப் பெறாது வருந்தினான். பிறகு யாகம் புரிந்து தவங்கிடந்து நான்கு புதல்வர்களைப் பெற்றான். தசரத மைந்தர்கள் நால்வரில் மூத்தவன் இராமன். இராமன் மீது தசரதனுக்கு அளவற்ற அன்பு. தசரதனுடைய உயிருக்கு நிகரானவன் இராமன்.

ஒருநாள் அயோத்தி மன்னனுடைய அரசமண்டபத்துக்கு விசுவாமித்திர முனிவர் வந்தார், விசுவாமித்திர முனிவர் மிகுந்த தவ வலிமையுடையவர்; மிகுந்த கோபக்காரர். வந்த முனிவரைத் தசரதன் வணங்கினான். பின்பு முனிவரிடம், வந்ததன் காரணத்தையும், வினவினான்.

முனிவரும் வந்த காரணத்தைக் கூறத் தொடங்கினார்: 'நான் வனத்திலே தவம் செய்கிறேன். என்னுடைய யாகத்தைத் தாடகை என்ற கொடியவள் அழித்துக் கொண்டேயிருக்கிறாள். அவளுக்குத் துணையாகப் பல இராக்கதர்கள் இருக்கிறார்கள் அவர்கள், என் யாகத்தை அழிக்காதவாறு காக்க, கரிய திருமேனியுடைய உன்மகன் இராமனை என்னோடு அனுப்புக' என்று சொன்னார்.

அந்தச் சொல், தசரதனிடம் ‘உன் உயிரை எனக்குக்கொடு’ என்று எமன் கேட்பது போல் இருந்தது.

உயிருக்கு நிகரான தன் மகன் இராமனைக் கொடு என்று முனிவன் கேட்ட சொல், மார்பிலே வேல் பாய்ந்து புரையோடிப்போன புண்ணில் கொள்ளிக்கட்டையைச் செருகியதுபோன்று மன்னன் செவியிலே நுழைந்தது. நீண்டகாலமாகக் கண்ணில்லாத குருடன், கண்களைப் பெற்று மகிழும் நேரத்தில் மீண்டும் கண்களை இழந்தவன் போன்று தடுமாறினான். நீண்டகாலமாக மன்னனுடைய உள்ளத்தில் ஒரு துயரம் அச்சுறுத்திக் கொண்டிருந்தது. அந்தத் துயரம், இந்த நேரத்தில் அரசனுடைய உயிரை வெளியே உதைத்துத் தள்ள முயன்றது. உயிரோ ஊசலாடிக் கொண்டிருந்தது. இப்படியாகத் தசரத சக்கரவர்த்தி தன் நிலை தடுமாறித் தத்தளித்தான்.

என்ன பாப்பா! கதையை ஆவலோடு கேட்டுக் கொண்டு வந்த நீ, ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து விட்டாய். சந்தேகம் ஏதாவது உண்டா? ஓ! தசரதனது உள்ளத்தில் நீண்டநாள் உறைந்து கிடந்த துயரம் என்னவென்று சிந்திக்கிறாயா? நானே சொல்லுகிறேன் கேள்.

சிரவணன் என்ற அந்தண இளைஞன் ஒருவன், முதுமை எய்திய தன் பெற்றோர்களைக் காவடியில்அமர்த்தித் தோளில் சுமந்து கொண்டு காட்டுவழியில் பயணம் செய்து கொண்டிருந்தான். வயோதிகப் பெற்றோர்கள் இருவரும் கண்பார்வை இழந்தவர்கள். இருவருக்கும் ஒரே உயிராக இருந்தவன் சிரவணன் என்ற மகன் ஒருவன்தான் இல்லற வாழ்வில் தவங்கிடந்து இருவரும் ஒரே மகனைப் பெற்றோர்கள். இருவருக்கும் சிரவணன் மீது பாசம் அதிகம். சிரவணனோ, பெற்றோர் மீது பக்தி மிகுந்தவன். அதனால்தான் வயதேறிய பெற்றோர்களைப் புறக்கணிக்காமல் போற்றித் தோளில் சுமந்து சென்றான்.

வழியில், கண்ணிழந்த பெற்றோர்கள் தண்ணீர் வேண்டுமெனக் கேட்டார்கள். சிரவணன் பெற்றோர்களை ஒரு மரத்து நிழலில் இருக்கச் செய்து, நீர்நிலையைத் தேடிச் சென்றான். சுற்றிலும் புதர்களால் சூழப்பெற்ற குளத்தில் குடுவையால் நீர் முகந்தான். குறுகிய வாயுடைய குடுவையில் 'குடுகுடு' வென்ற சப்தத்தோடு நீர் புகுந்தது.

காட்டிலே வேட்டையாடச் சென்ற தசரதன் காதில் குடுகுடுவென்ற சப்தம் விழுந்தது. யானை நீர் பருகுவதாகக் கருதி ஒலி வந்த வழியில் அம்பெய்து விட்டான் தசரதன். அரசன் எய்த அம்பு அந்தணச் சிறுவன் மீது பாய்ந்தது. அவன் 'ஐயோ' என்று அலறி வீழ்ந்தான். மன்னன் அஞ்சித் திடுக்கிட்டு விரைந்து ஓடி வீழ்ந்தவனை வாரி யெடுத்துத் தன் செயலுக்கு மன்னிப்பு வேண்டி, இளைஞன் வரலாற்றைக் கேட்டான். சிரவணன் தன் வரலாறு கூறி தன் பெற்றோர்கள் இருக்கும் இடத்தையும் சுட்டி, தாகத்தோடு தவிக்கும் அவர்களுக்குத் தண்ணீர் கொண்டு சென்று கொடுத்து உதவும்படி வேண்டி உயிர் துறந்தான்.

தசரதன், சிரவணன் வேண்டியவாறே நீர் கொண்டு சென்று சிரவணனுடைய பெற்றோரிடம் நடந்ததைக்கூறி, நீர் பருகும்படி வேண்டினான். புத்திரசோகம் தாங்க முடியாத அவர்கள், இன்று எங்களுக்கு நேர்ந்த இழப்பு, நாளை உனக்கும் ஏற்படும் என்று சபித்து உயிர் துறந்தனர்.

சான்றோர் இட்ட சாபம் என்று பலித்துவிடுமோ என்ற துயரம் தான் தசரதனுடைய உள்மனத்தில் உறுத்திக், கொண்டிருந்தது. இதுவே 'உள் நிலாவிய துயரம்'. இந்தத் துயரத்தில் ஒடுங்கிக் கிடக்கும் கதை இது. இந்தக் கதை, காந்தியடிகளுக்கு மிகவும் பிடித்தமானது.

சிரவணன் கதையால், பெற்றோர்கள் பிள்ளை மீது கொண்டுள்ள பாசத்தையும், பிள்ளை பெற்றோர் மீது கொண்டுள்ள பக்தியையும் நன்கு உணரலாம்.

பாப்பா! நீயும் உன் பெற்றோரிடம் பக்தியோடு நடந்து கொள்.

குழந்தைக் கதை—II

# விளையாட்டே வினையானது

பாப்பா! நான் ஒரு கதைசொல்லுகிறேன் கேள்! இது ஒரு இராமாயணக்கதை. இராமாயணக் கதையா? 'அதுபெரிய கதையாயிற்றே!' என்று எண்ணுகிறாயா? ஆமாம்! அந்தப் பெரிய கதையை உருவாக்கிய சிறிய கதை இது. சிறிய கதை பெரிய கதையை உருவாக்கிய நிகழ்ச்சியை அறிந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்படு வாயல்லவா? அதற்காகத்தான் சொல்லுகிறேன், கேள்.

குழந்தாய்! நம்முடைய பாரத நாட்டின் வடபகுதியில் கோசல நாடு என்று ஒரு நாடு இருந்தது. அந்தக் கோசல நாட்டின் தலைநகரம் அயோத்தி மாநகரம். அயோத்தி மாநகருக்கு அரசன் தசரதன். தசரதன், அரசர்களுக்கெல் லாம் அரசன். ஆகையினால், அவனைத் 'தசரதச் சக்கர வர்த்தி' என்று அழைப்பார்கள்.

தசரதச் சக்கரவர்த்தியின் மூத்த மகன் இராமன். அந்த ராமன் உன்னைப் போலப் பிள்ளைப் பிராயமாக இருந்த போது விளையாட்டாக ஒரு தீமையைச் செய்துவிட்டான். இராமன், அன்று செய்த சிறிய தீமை, உணர்ச்சியாக உருவெடுத்து நீண்டு. பெரிய துயரத்தை உருவாக்கிவிட்டது. நாட்டை ஆளவேண்டியவன் காட்டில் அலைய வேண்டிய வனானான். அரண்மனையில் மனைவியோடு வாழ

வேண்டியவன், ஆரண்யத்தில் மனைவியைப் பிரிந்து அவதிப் பட்டான்.

பாலராமன் அரண்மனை முற்றத்தில் வில்லில் உண்டை வைத்துத் தெறித்து விளையாடிய விளையாட்டு வினையாக மாறி இலங்கை வரையில் சென்று சண்டையிட வேண்டிய நிலைக்குக் கொண்டு சென்றுவிட்டது. விளை யாட்டே வினையானது.

சின்னஞ்சிறு குழந்தாய்! கதையைக் கேட்டுக் கொண் டிருக்கும் போதே, என்ன சிந்தனை செய்யத் தொடங்கி விட்டாய்? வினையாக விளைந்த விளையாட்டு, என்ன வென்று சிந்திக்கிறாயா? அந்த விளையாட்டுக் கதையைத் தான் சொல்லுகிறேன் கேள்.

அயோத்தி மாநகரத்து அரண்மனையில் கூனி என்ற வேலைக்காரி ஒருத்தி இருந்தாள். அவளுடைய சொந்தப் பெயர் 'மந்தரை'. மந்தரை, இராமனுடைய சிற்றன்னை கைகேயியிக்குத் தோழி, கூனல் முதுகோடு கூடிய காரணத் தால், மந்தரையை எல்லோரும் கூனி என்றே கூறுவார்கள். கூனிக்கு உடலும் கூனல்; உள்ளமும் கூனல். உள்ளமும் கூனிய கொடியவளாகிய கூனியிடம் விளையாட்டாக ஒரு செயலைச் செய்துவிட்டான் இராமன்.

இராமன் வில்வித்தை பயிலும் போது, வில்லில் மண்ணு ருண்டை வைத்துக் குறிவைத்து அடித்துப் பயிற்சி செய் தான். அப்போது, அவ்வழியாகச் சென்ற கூனியின் முதுகைக் குறிவைத்து உண்டையால் அடித்து விளையாடி விட்டான். இது, விளையாட்டுத்தான்; வேண்டுமென்றே செய்ததில்லை. என்றாலும், கூனிக்குக் கோபத்தை மூட்டி விட்டது.

மூண்ட கோபத்தை வெளிப்படுத்தவும் முடியவில்லை; மறக்கவும் முடியவில்லை. அரசிக்கு வேலைக்காரிதானே

கூனி. எளியவளான அவளால் இராமனை எதுவும் செய்ய முடியவில்லை. யானை, தன் மீது எறிந்த கல்லை காலம் வரும்வரை காத்துக் கன்னத்தில் அடக்கிக் கொள்வதுபோல, கொதித்தெழுந்த கோபத்தை உள்ளத்திலேயே அடக்கிக் கொண்டாள் கூனி. இராமனைப் பழி தீர்த்துக் கொள்ளும் காலத்துக்குக் காத்திருந்தாள். அந்தக் காலமும் வந்தது.

தசரத மன்னன், தனக்கு முதுமை வந்த காரணத்தால், இராமனுக்கு முடிசூட்டி மகிழ முடிவெடுத்தான். 'முடி சூட்டு விழா நாளைக்கே' என்று நகரெங்கும் முரசு அறைவித்து அறிவித்தான். அயோத்தி மாநகரமே விழாக் கோலம் பூண்டது. கூனிக்கும் தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளும் காலம் வந்தது. ஓர் இரவிலேயே சரித்திரத்தை மாற்றிவிட்டாள்.

எப்படி மாற்றினாள் என்று கேட்கிறாயா? இராமனைப் பெற்ற தாய் கோசலையாக இருந்தாலும், வளர்த்த தாய் கைகேயி. கைகேயி, பரதனைப் பெற்றவளாயிருந்தாலும், வளர்த்த மகன் இராமனிடமே அதிக பாசம் கொண்டிருந் தாள். இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்றதும் கைகேயிக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி. மகிழ்ச்சியின் காரணமாக அன்றிரவு நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந் தாள்.

தூங்கிக் கொண்டிருந்த கைகேயியைக் கூனி தட்டி எழுப்பி, தசரதன் முன்பு தருவதாகச் சொன்ன பழைய வரங்களைக் கேட்குமாறு தூண்டித் திசைதிருப்பிவிட்டாள். தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி தூய சிந்தையும் திரிந்தது. தசரதனிடம் கைகேயி பெற்ற வரங்களால் இராமன் காடு செல்ல வேண்டியதாயிற்று. காட்டிலே சீதையைப் பிரிய வேண்டிய நிலையும் ஏற்பட்டது. சீதையைப் பிரிந்ததால், இராமன் துயரக் கடலில் விழ வேண்டியதாயிற்று.

தன்னுடைய சொந்த அனுபவத்தை இராமனே சுக்கிரீவனுக்கு முடிசூட்டும்போது அறிவுரையாகக் கூறுகிறான்.

"சிறியர்என்று இகழ்ந்துநோவு
செய்வனசெய்யல்; மற்றுஇந்
நெறிஇகந்து, யான்ஓர் தீமை
இழைத்தலால், உணர்ச்சி நீண்டு
குறியதாம் மேனியாய
கூனியால், குவவுத் தோளாய்!
வெறியன எய்தி, நொய்தின்
வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்."

என்று தன் வேதனையை வெளிப்படுத்தினான் இராமன். இராமனுக்கு வேதனை எதனால் விளைந்தது என்று சிந்தித்துப் பார், பாப்பா. கூனியை எளியவள் என்று இகழ்ந்து விளையாட்டாக உண்டை எறிந்ததாலல்லவா விளைந்தது?

ஆகையால், விளையாட்டாகவும் பிறர் மனம் நோகும்படியான செயலைச் செய்யக்கூடாது என்பதைப் புரிந்து கொள்ளம்மா சின்னப் பாப்பா! எளியவராயிருந்தாலும் யாருக்கும் தீமை செய்யாதே செல்லக்கிளியே!

குழந்தைக் கதை—III

# கடவுளை நம்பினோர் கைவிடப்படார்

குழந்தாய்! இன்று உனக்கு ஒரு கதை சொல்லுகிறேன் கேள். இது, கம்பராமாயணக் கதை; வீடணன் இராவணனுக்குச் சொன்ன கதை; இரணியன் பிரகலாதன் கதை.

ஒரு காலத்தில் இரணியன் என்ற ஓர் அரசன் வாழ்ந்து வந்தான். அவன், பொன்னிறமானவன்; பேராற்றல் படைத்தவன்; செல்வச் செருக்குள்ளவன்; தவம்கிடந்து பலவரங்களைப் பெற்றவன். வலிமையில் அவனை நிகர்த்தவர் ஒருவருமிலர். எல்லா உலகங்களும் அவன் பெயரையே ஏத்திப் புகழ வாழ்ந்தான்.

இரணியன்; திக்கு யானைகளில் இரண்டினை இருகைகளாலும் பற்றி இழுத்துத் தன் மார்பிலே முட்டி மோத விட்டு விளையாடுவான். அவன் எழுந்து நின்றால் வான் முகடு முட்டும்; அடிபெயர்த்து நடந்தால் ஐம்பூதங்களும் நடுக்கும்; ஆற்று நீர் கொஞ்சமென்று கருதிக் குளியான்; காளமேகம் பொழியும் மழை நீர் குளிர்ச்சியில்லையென்று தள்ளிவிடுவான்; கடல்நீரையும் உப்பென்று கருதி ஒதுக்கி விடுவான்; அண்டகோளத்தைத் துளைத்து அதற்கு அப்பாலுள்ள பெரும்புறக்கடலின் நீரைக்கொண்டு மஞ்சனமாடுவான்; ஆழக்கடலைத் தன் கால்களாலேயே நடந்து கடந்து கரையேறுவான். அவனுக்குக் காலையில்நாகலோகத்

தில் உணவு; பகலில் இந்திரலோகத்தில் பொழுதுபோக்கு இரவில் பிரமலோகத்தில் இருப்பு.

இரணியன், மேருமலை மேல் வீற்றிருந்து அரசு செலுத்துவான்; தன் அதிகாரத்தைக் கொண்டு, பஞ்ச பூதங்களுக்குள் பதவிமாற்றம் செய்வான். அவன், எந்தப் படையாலும் சாகான்; ஆணாலும் சாகான்; பெண்ணாலும் சாகான்; அலியாலும் சாகான்; மண்ணிலும் சாகான்; விண்ணிலும் சாகான்; பகலிலும் சாகான்; இரவிலும் சாகான்; நீரிலும் சாகான்; நெருப்பிலும் சாகான்; காற்றிலும் சாகான்; சாபத்தாலும் சாகான்; வீட்டின் உள்ளேயும் சாகான்; வெளியேயும் சாகான்; இவ்வாறு பல பெருவரங்களைப் பெற்றவன் அவன். எல்லா உலகங்களும் 'இரணியனே நம' என்று துதிக்க வாழ்ந்தான். அவனே உலகிற்கு இறைவன் என இறுமாந்திருந்தான்.

ஆற்றல் பலபடைத்த இரணியனுக்கு அருமை மகன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் பிரகலாதன். அவன், அறிஞரின் அறிஞன்; தூயவர்களில் தூயவன்; ஞானத்திற்கு நாயகன்; அறத்துக்கு நாதன்; தாயினும் உயிர்க்கு நல்லவன்.

பிரகலாதனுக்கு வேதம் ஓதுவிக்க ஒரு அந்தணனை ஏற்பாடு செய்தான் இரணியன். அந்தணன் பிரகலாதனுக்கு வேதம் சொல்லிக் கொடுக்கத் தொடங்கும் போது; 'ஓம் இரணியாய நம' என்று சொல்லும்படி பணித்தான். சிறுவன் காதைப் பொத்திக் கொண்டு 'ஓம் நமோ நாராயணாய நம' என்று சொன்னான். அந்தண ஆசிரியர் அஞ்சி நடுங்கினார்.

''பாவிமகனே! எனக்கும் உனக்கும் கேடு தேடுகிறாய். தேவர்க்கும் மூவர்க்கும், மூவர்க்கு முதல்வர்க்கும் முதல்வர் உன் தந்தை. தந்தையின் பெயரைச் சொல்லாது, வேறொரு பெயரைச் சொல்லாதே'' என்று வேண்டினார் ஆசிரியர்.

''வேதத்தின் முதற்பெயரை மொழிவது குற்றமா? ஆதிநாதன் பெயரன்றிப் பிறிதுபெயர் அறியேன் நான்.

பரம்பொருளின் பேரைச் சொல்லாது யாரைச் சொல்லுவது? வீடு பேற்றிற்கு உதவும் மந்திரத்தை விடுத்து வேறொன்றைச் சொல்லுவதா? எனக்கும் உனக்கும் என் தந்தைக்கும் நல்லது இதனினும் வேறில்லை'' என்று உரைத்தான் பிரகலாதன்.

சிறுவனின் உறுதியை நினைத்துத் தனக்கு இறுதி வந்ததாக எண்ணினார் ஆசிரியர். உடனே ஓடிச்சென்று நிகழ்ந்ததை இரணியனிடம் உரைத்தார். தன் மகன் உரைத்த பெயரைத் தனக்கு உரையெனக் கேட்டான் இரணியன். அந்தப் பெயரைச் சொன்னால் நரகம்தான் கிடைக்கும் என்று நடுங்கினார் ஆசிரியர்.

ஆகையால், இரணியன் தன் மைந்தனை அழைத்து நிகழ்ந்ததைக் கேட்டான். மைந்தனும் சுருதி நாயகன் திருப்பெயரைச் சொன்னான். ''ஓம் நமோ நாராயணாய'' என்று மகன் சொல்லக் கேட்ட இரணியன் சினந்து கொலைஞர்களை அழைத்துப் பிரகலாதனைக் கொல்லும் படி பணித்தான்.

கொலைகாரர்கள் பிரகலாதனை வாளால் வெட்டினர்; மழுவால் எறிந்தனர். அவையனைத்தும் கூர்மழுங்கி முறிந்து போயின. நெருப்புக் குழியில் தள்ளினர்; தீயும் சுடாமல் குளிர்ந்தது. பாம்புகளை ஏவிக் கடிக்கச் செய்தனர்; நாகங்கள் கக்கிய விஷமும் அமிழ்தமாயிற்று. யானையைக் கொண்டு மிதிக்கச் செய்தனர்; யானையும் அவனைத் தொழுது சென்றது. கல்லிலே கட்டிக் கடலிலே இட்டனர்; கல்லும் மிதந்தது. எத்தனையோ கொடுமைகள் இழைத்த போதும் இளைஞன் எட்டெழுத்து மந்திரத்தை உச்சரித்துக் கொண்டேயிருந்தான்.

இரணியன் கோபத்தால் கொதித்தெழுந்து, 'நீ வணங்கும் கடவுள் எங்கிருக்கிறான்?' என்று கேட்டான். 'நான் வணங்கும் நாராயணன், மலரில் மணம் போல்—எள்ளில் எண்ணெய் போல் தொட்ட தொட்ட இடங்களி

லெல்லாம் நீக்கமற நிறைந்து மறைந்திருப்பான்— அவன் தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான்' என்றான் பிரகலாதன்.

உடனே இரணியன், 'இந்தத் தூணில் இருப்பானா?' என்று கேட்டு அருகிலிருந்த தூணை அறைந்தான். அறைந்த தூணிலிருந்து நரசிங்கமூர்த்தி தோன்றி அண்டம் அதிரச் சிரித்தது. நரசிங்கத்தைக் கண்டதும் பிரகலாதன் ஆடினான், பாடினான், ஆனந்தக் கண்ணீர் மல்கித் தொழுதான். மனித உடலும் சிங்கத் தலையும் கொண்ட புதிய தோற்றத்தைக் கண்ட இரணியன், கோபத்தால் பொங்கியெழுந்து போருக்கு அழைத்தான். பிரகலாதன் நரசிங்கத்தின் பெருமை கூறி அந்த மூர்த்தியை வணங்கும் படி தந்தையிடம் வேண்டினான். இரணியன் வணங்க மறுத்து நரசிங்கத்தை எதிர்த்தான்.

இருவருக்கும் நிகழ்ந்த போரின் இறுதியில், பகலும் இரவுமற்ற அந்திவேளையில், வீட்டின் உள்ளும் புறமுமற்ற வாயிற்படியில் அமர்ந்து விண்ணும் மண்ணுமின்றித் தொடைமீது கிடத்திப் படைகள் ஏதுமின்றி நகங்களால் இரணியன் மார்பைப் பிளந்து கொன்றது நரசிங்கம்.

இரணியனைக் கொன்று சீற்றந்தணிந்த நரசிங்கப் பெருமான், அன்போடு பிரகலாதனைப் பார்த்து, 'உனக்கு வேண்டும் வரம் கேள்' என்றுரைத்தான். அதற்குப் பிரகலாதன்,

'என்பு பெறாத இழிபிறவி எய்தினும்நின்
அன்பு பெறுகை அரும்பேறு அருள்.'

என்றான்.

சிங்கப் பெருமானும் அவ்வாறே அருளி, தேவர்களைக் கொண்டு பிரகலாதனுக்கு முடிசூட்டுவித்தான். வேதப் பொருளை ஓதாது ஓதி உணர்ந்த பிரகலாதனும் மூவுலகங் களையும் இனிதே அரசாண்டிருந்தான்.

குழந்தைகளே! இக்கதையினால், ஆணவம் அழியும் என்றும் அன்பு தழையும் என்றும் தெரிந்து கொள்ளுங்கள். கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

**சிறுவர்களுக்கு :**

# அன்பு விளக்கு

## (நாடகம்)

### காட்சி—1

இடம்: கங்கை நதியின் வடகரை - முனிவர்களின் குடில்.

காலம்: நண்பகல்.

உறுப்பினர்கள்: இராமன்,
சீதை,
இலக்குவன்,
குகன்,
முனிவர்கள்.

(உள்ளே இராமன் சீதையுடன் அமர்ந்து முனிவர் களோடு உரையாடிக்கொண்டிருக்கிறான். வெளியே இலக்குவன் வில்லை ஊன்றி நின்று காவல் செய்கி றான். அப்பொழுது கருத்து உயர்ந்த கொடிய தோற்றமுடையவேடர் தலைவன் குகன் வருகிறான்)

இலக்குவன் : யாரப்பா நீ?

குகன் : தேவா! நான் இந்தக் கங்கை நதியில் ஓடம் செலுத்தும் வேடன். தங்கள் திருவடிகளைச் சேவித்துத் தொண்டு செய்ய வந்தேன்.

இலக்குவன் : நீ தேடிவந்த தேவனாகிய இராமன் நான் இல்லை. இராமனுக்குத் தம்பி இலக்குவன் நான். இங்கேயே நில்! உன் வருகையை அண்ணனுக்கு உணர்த்தி வருகிறேன்.

(இலக்குவன் உள்ளே செல்கிறான்)

இராமன் : என்ன தம்பி! என்ன செய்தி?

இலக்குவன் : அண்ணா! உன்னைக் காணும் பொருட்டுக் குகன் என்னும் வேட்டுவன் கூட்டத்தோடு வந்திருக் கிறான். தோற்றத்தில் கொடியவனைப்போன்று தோன்றினாலும் உள்ளத்தில் தூயவன். தாயினும் நல்லவன். கங்கைப் படகுகளுக்கு அரசன்.

இராமன் : அப்படியா! மகிழ்ச்சி! அழைத்துவா! (இலக்குவன் அழைக்க, குகன் பக்தியோடும், பணிவோடும் விரைந்து சென்று தன் தலைமயிர் தரையில் படும்படி இராமன் திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்து கைகட்டி வாய்பொத்தி நிற்கிறான்.)

இராமன் : வேட்டுவ வேந்தே! வருக! அமர்க!

குகன் : இராமபிரானே! அரசகோலத்தில் இருக்கவேண்டிய தாங்கள் ஆண்டிக்கோலத்தில் வந்திருக்கிறீர்கள். உங்களைக் கண்டதும் என் உள்ளம் கனிந்து விட்டது. பெரியவர்கள் முன்னே சிறியவர்கள் அடக்கமின்றி அமர்வது சிறப்பன்று. ஐயனே தாங்கள் உண்ண வேண்டும் என்று கருதித் தேனையும் மீனையும் பக்குவப்படுத்திக்கொண்டு வந்திருக்கிறேன். ஏற்றருளவேண்டுகிறேன்.

இராமன் : (முனிவர்களைப் பார்த்து) தவப்பெரியோர் களே! இந்தக் குகனுடைய அன்பின் ஆழத்தைப் பார்த்தீர்களா? குகன் அன்போடு கொண்டுவந்த தேனும், மீனும் தேவாமிர்தத்தைவிடச் சிறந்தன அல்லவா? இந்தத் தூய உணவை நம்முன்னோர் களுக்கும் படைக்கலாமே! என்ன செய்வது! சற்று முன்புதானே நாம் எல்லோரும் கீரையுணவை நன்றாக உண்டு முடித்தோம். (குகனைப்பார்த்து) வேடர் வேந்தே! உன்னுடைய அன்புக் காணிக்கையை எங்கள்உள்ளம்ஏற்றுக்கொண்டது. நாங்கள் மூவரும் இன்றிரவு இங்கே தங்கி நாளைக் காலை கங்கையைக் கடக்க வேண்டும். ஆகையால் நீபோய்க் காலையில் நாவாயோடு வருக!

குகன் : இராமபிரானே! பார்போற்றும் செல்வம் படைத்த உன்னைப் பரதேசியாகக் கண்ட என் கண்கள் பாவம் செய்தவை. பாவம் செய்த கண்களை இன்னும் பிடுங்கி எறியாமல் இருக்கின்றேனே!

நான் ஒரு கள்வன். உங்களை இங்கே தனியே விட்டுவிட்டு வீட்டிலே சுகம் அனுபவிக்க என் உள்ளம் விரும்பவில்லை. இரவு முழுவதும் உங்களுக்குக் காவல் செய்வதே என் கடமை.

இராமன் : (சீதையையும், இலக்குவனையும் நோக்கி) அன்பு மனைவியே! அன்புத் தம்பியே! நீங்கள் இருவரும் என் உறவினர்கள். எந்த உறவுமல்லாத இந்தக் குகன் என்மீது செலுத்தும் அன்பைப் பார்த்தீர்களா? இவனன்றோ தீராக்காதலன்! (குகனை நோக்கி) குகப்பெருமானே! யாதினும் இனிய நண்ப! இன்று இரவு நீ விரும்பியபடி எங்களோடு இரு!

(குகன் வில்லேந்தி அம்பு பற்றி விழித்த கண்களோடு விடியளவும் குன்று போன்று நின்று காவல் செய்கிறான்.)

## காட்சி—2

இடம் : கங்கை நதியின் வடகரை.
காலம் : காலை நேரம்
உறுப்பினர்கள் : இராமன்,
குகன்,

இராமன் : அன்பின் உறைவிடமான ஐயா! நாங்கள் கங்கையைக் கடக்க வேண்டும். நாவாயை விரைவில் கொண்டுவா.

குகன் : ஐயனே! தாங்கள் ஏவிய மொழி என் ஆவியை உலுக்குகின்றது. தங்களை அடிதொழுது வேண்டுகிறேன். தேவியோடு தாங்கள் எங்கள் ஊரிலேயே தங்கவேண்டும். நாங்கள் காட்டுவாசிகள் தான். இருப்பினும், எங்கள் உள்ளம் பொய்யறியாது. உங்களுக்குக் குற்றேவல் செய்யக் காத்துக் கிடக்கிறோம். இங்குத் தேன் உண்டு, தினையுண்டு, எல்லா வசதிகளும் இங்கு உண்டு. நான் வாழும்

வரையில் தாங்கள் இங்கே இருக்கவேண்டும். எங்கள் குடிலில் தாங்கள் ஒருநாள் தங்கினாலும் அதைவிடச் சிறந்த வாழ்வு எங்கட்கு வேறில்லை.

இராமன் : வேட்டுவ வீரனே! நாங்கள் தென்திசைச் சென்றுபுண்ணியநதிகளில் நீராடிப் புனிதர்களுக்கு வழிபாடியற்றிச் சில நாட்களில் உன்னிடம் வருகிறோம். ஆகையால் வருத்தமின்றிப் படகுகளைச் செலுத்துக! சித்திரகூடத்திற்குச் செல்லும் வழியையும் காட்டுக!

(குகன்படகு கொண்டுவருகிறான். இராம இலக்குவரும், சீதையும் படகில் ஏறுகின்றனர். படகு கங்கையைக் கடந்து தென்கரை சேருகிறது.)

குகன் : உத்தமனே! உன்னிடம் நான் வேண்டுவது ஒன்று உண்டு. சித்திரகூடத்திற்கு வழிகாட்டி அனுப்புவதுடன், தாங்கள் விரும்பினால் நானும் உடன் வருகிறேன்.வந்தால்,காட்டுவழியில் வழியமைத்துத் தருவேன். காய்கனி, தேன் ஆகியவற்றைத் தேடித் தருவேன்; இருளிலும் வழி நடப்பேன்; ஒரு நொடிப் பொழுதும்உன்னைப் பிரியமாட்டேன். உன்னிடம் பகைவர்கள் வந்தால் என் உயிரைக் கொடுத்து உன் உயிரைக் காப்பேன்; ஆகையால், உடன்வர அனுமதிக்க வேண்டுகிறேன்.

இராமன் : குகப் பெருமானே! கொடிய சொற்களைக் கூறலாமா? நீ என் உயிருக்கு நிகரானவன். என்தம்பி இலக்குவன் உனக்கும் தம்பி, என் மனைவி சீதை உனக்கும் கொழுந்தி. நாங்கள் வாழவேண்டுமானால் நீ வாழ வேண்டும். எங்கள் பிரிவுக்கு நீ வருந்தாதே. துன்பம் இருந்தால் தான் இன்பத்தின் அருமை தெரியும். இதுநாள்வரை நாங்கள் நால்வர் உடன் பிறந்தவர்களாயிருந்தோம். இன்று முதல் உன்னோடு சேர்த்து ஐவராகிவிட்டோம்.

இனி நீயும் என் தம்பி. அங்கு அயோத்தி மக்களைக் காக்கத் தம்பி பரதன் இருக்கிறான். இங்குள்ள மக்களை என் தம்பியாகிய நீ காக்க வேண்டும். இது என் கட்டளை. நாங்கள் சென்று வருகிறோம்.

குகன் : இராமா! தங்கள் கட்டளையை மீறி உடன் வரவும் முடியவில்லை; பிரிந்து நிற்கவும் மனமில்லை. தாங்கள் எளியவனாகிய என்னோடு உறவு கொண்டாடிய பண்பினைப் பாராட்டுகிறேன். சென்று வாருங்கள்.

## காட்சி—3

இடம் : கங்கை நதிக்கரை

காலம் : முற்பகல்

உறுப்பினர்கள் : குகன், பரதன்,
கோசலை,
சுமித்திரை.

(இராமன் பிரிவால் வாடித்திரும்பிய குகன், வட கரையில் பரதன் சுற்றத்தாரோடு வருவதையும் காணுகிறான். துன்பத்தால் துவண்டு சினத்தால் சீறுகிறான்.)

குகன் : என் உயிர்த்தோழனாகிய இராமபிரானைப் பட்டத்தைப் பறித்துக் காட்டுக்குத் துரத்திய பரதன், இங்கும் படையெடுத்து வந்திருக்கிறான். நான் பாம்பு. அரவமிருப்பது தெரியாமல் எலி படையெடுத்து வந்திருக்கிறது. ஏழை வேடனாகிய என்னிடம் தோழமை பாராட்டியவருக்குத் துன்பம் நேரப் பார்த்திருக்கும் கோழையா நான்? உயிர் காப்பான் தோழன். ஆழநீர்க் கங்கையைக் கடக்க விடாமல் தடுப்பேன். பசுவின் குளம்பில்அகப்பட்ட

பசும்பயிர் போல் இவர்களை நசுக்குவேன். என் ஐயனுக்கு எந்தக்கேடும் வராமல் காப்பேன். (வட கரையில் நெருங்கி வந்து நின்ற பரதனைக் குகன் கூர்ந்து நோக்குகிறான்) பரதனைப் பார்த்தால் படையெடுத்து வந்தவன் போல் இல்லையே. மரவுரி தரித்துத் துயரமே வடிவாக நிற்கிறானே. இராமனைப் போன்றே இருக்கிறானே; தென் திசையை நோக்கித் தொழுகின்றானே; தவவேடம் கொண்டு வந்த பழுதில்லாத பரதனைத் தவறாகப் புரிந்து கொண்டேன். இராமனுக்குப் பின் பிறந்த வர்கள் பிழை செய்வார்களா? நானே சென்று பரதனைக் கேட்கிறேன். (குகன் வடகரை வந்து பரதனைத் தொழுதான், பரதன் குகன் பாதங் களில் விழுந்தான். குகன் பரதனைத் தழுவினான்)

குகன் : பரதா! நாடாளவேண்டிய நீ துறவுக் கோலத்தில் இங்கு வந்த காரணம் என்ன!

பரதன் : என் தந்தை முன்னோர் முறையினின்று வேறு பட்டு,பட்டத்தை எனக்கு அளித்துவிட்டார். ஆகை யால் முறைப்படி ஆளவேண்டிய அண்ணனை அழைத்துச் செல்ல வந்தேன்.

குகன் : (குகன் பரதன் திருவடிகளில் விழுந்து பற்றிக் கொண்டு) பரதா! தாய் உரைக்க, தந்தை தந்த அரசபதவியைத் துச்சமாக உதறிவிட்டு வந்துள் ளாய் என்பதைக் கண்டால் ஆயிரம் இராமரும் உன் ஒருவனுக்கு நிகராகமாட்டார்கள். கதிரவ னின் ஒளி மற்ற ஒளிகளை விஞ்சுவது போல, பரதா! உன் முன்னோர்கள் புகழையெல்லாம் உன் புகழாக்கிக்கொண்டாய். எனக்கு இராமன்மீது எழுந்த அன்பு உன் மீதும் தோன்றிவிட்டது

பரதன் : குகப் பெருமானே! அண்ணல் இராமபிரானைக் காண என் உள்ளம் விரைகிறது. எங்களைக்

கங்கையின் தென்கரை சேர்த்தனையாயின், எங்களை இடர்க்கடலினின்று நீக்கி இன்பக்கரை சேர்த்ததாகும். ஆகையால், அம்பியைச் செலுத்துக. (படகு பரதனையும், தாயார் இருவரையும் ஏற்றிக் கொண்டு கங்கையில் செல்கிறது)

குகன் : (கோசலையைப்பற்றி) பரதா! எல்லோரும் வணங்கிநிற்கும் ஏற்றம் பெற்ற இந்த அம்மையார் யார்?

பரதன் : இவர் தசரத மன்னனின் முதல் தேவி, பெயர் கோசலை. மூன்று உலகங்களையும் படைத்தவன் பிரமன். பிரமனைப் படைத்தவன் திருமால். திருமாலை இராமனாகப் பெற்றவள் இவள். பரதன் என்ற நான் பிறந்த காரணத்தினாலே எல்லாச் செல்வங்களையும் இழந்த பெரியாள் இவள்.

குகன் : அம்மா! உத்தமராமனைப் பெற்ற உத்தமியா தாங்கள்? உங்களுக்கா இந்தக் கதி நேர்ந்தது? (கோசலையின் காலில் விழுந்து குகன் அழுகிறான்)

கோசலை : பரதா! நமக்குப் பழக்கமில்லாத இவன், அன்பு மிகுந்து அழுகின்றானே! இவன் யார்?

பரதன் : அம்மா! இவன் இராமனுக்குத் துணைவன். இலக்குவனுக்கும், சத்துருக்கனுக்கும், எனக்கும் அண்ணன். இவன்பெயர் குகன்.

கோசலை : பரதா! இராமன் நாடு துறந்து காட்டுக்கு வந்ததும் நலமாயிற்று. நான்கு சகோதரர்களாயிருந்த நீங்கள் அன்பு விளக்காக விளங்கும் குகனோடு ஐவராகி விட்டீர்கள். நீங்கள் ஐந்து பேரும் ஒருமைப்பாட்டுணர்வோடு ஒருவராகி உலகத்தைக் காத்து வாருங்கள். வாழ்க அன்பு நெறி! வாழ்க வையம்.

□□